# வாழ்வியல் நெறிகள்

டாக்டர்.
சி.பாலசுப்பிரமணியன்



# வாழ்வியல் நெறிகள்

டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்
எம். ஏ., எம். லிட்., பிஎச்.டி.
துணை வேந்தர்
தமிழ்ப் பல்கலைக் கழகம்
தஞ்சாவூர்-613 005

நறுமலர்ப் பதிப்பகம்
சென்னை-600 029

முதற்பதிப்பு: டிசம்பர், 1990

விலை : ரூ. 25-00

விற்பனை உரிமை :

**பாரி நிலையம்**

**184, பிராட்வே**
**சென்னை-600 108**

அச்சிட்டோர் :

**மூவேந்தர் அச்சகம்**

இராயப்பேட்டை
**சென்னை-14.**

## ஆசிரியரின் பிற நூல்கள்

1. தமிழ் இலக்கிய வரலாறு
2. உருவும் திருவும்
3. கட்டுரை வளம்
4. காரும் தேரும்
5. மனோன்மணீயம் (பதிப்பு)
6. முருகன் காட்சி
7. வாழையடி வாழை
8. இலக்கிய அணிகள்
9. இலக்கியக் காட்சிகள்
10. நல்லோர் நல்லுரை
11. நெஞ்சின் நினைவுகள்
12. மலர் காட்டும் வாழ்க்கை
13. சான்றோர் தமிழ்
14. சங்க கால மகளிர்
15. ஆண்டாள்
16. சேரநாட்டுச் செந்தமிழ் இலக்கியங்கள்
17. புரட்சிக் கவிஞர் பாவேந்தர் பாரதிதாசன்
18. அறவோர் மு.வ.
19. பெருந்தகை மு.வ.
20. கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர்
21. திருவெம்பாவை விளக்கம்
22. மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்
23. சங்க இலக்கியம்—சில பார்வைகள்
24. பாரதியும் பாரதிதாசனும்
25. வாழ்வியல் நெறிகள்
26. பாவைப் பாட்டு
27. **Papers in Tamil Literature**
28. **The Status of women in Tamilnadu during the Sangam Age**
29. **A Study of the Literature of the Chera Country**
30. **A Critical Study of Kuruntoka**

# முன்னுரை

'வாழ்வியல் நெறிகள்' எனும் தலைப்பில் அமைந்துள்ள இவ்விலக்கிய நூல், பன்னிரண்டு கட்டுரைகளைப் பாங்காகக் கொண்டுள்ளது. தமிழ்க்குடி, குறிக்கோள் பலவற்றைக் கொண்ட குடி. ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்க்கை வளமும், இலக்கியச் செறிவும் கொண்ட தமிழர்கள், எடுத்துக்காட்டான குறிக்கோள் நெறியினைக் கொண்டு குவலயம் புகழ வாழ்ந்தார்கள்.

**'அவன்கொண்ட குடுமித்து இத்தண்பணை நாடே'**

என்னும் தொடரும் நினைக்கத் தக்கதாகும்.

பழந்தமிழர்களின் குறிக்கோள் நெறியினை முதல் கட்டுரை முழங்கிக் காட்டுகின்றது. 'நானிலம்' என்று தாம் வாழும் நிலத்தை அழைத்தவர் தமிழர். 'பாலை' எனும் ஒரு நிலத்தைச் சேர்த்து ஐவகை நிலங்களாகக் கொண்டு, அந்த ஐவகை நிலத்திற்கும் பெரும் பொழுதுகள் ஆறனையும் சிறுபொழுதுகள் ஆறனையும் பொருத்திக் கொண்டு புகழ் மிக்க இலக்கிய இன்பத்தினைத் துய்த்த பழங்குடிகளாகத் தமிழர்கள் திகழ்கின்றனர். அதனை எடுத்து மொழிவது இரண்டாம் கட்டுரை. ''முல்லைத்திணைப் பாடல்களில் கவிநயம்'' என்னும் மூன்றாவது கட்டுரை, கற்பு நெறி கவினுறத் துலங்கிய முல்லை நில ஒழுக்கத்தை முறையாகச் சொல்லுகின்றது. நான்காவது கட்டுரை முல்லைப் பாட்டினை ஒரு திறனாய்வுக் கண்கொண்டு காணும் போக்கில் அமைந்துள்ளது. முல்லை எனும் அகத்திணைக்குப் புறனாக அமையும் வஞ்சி எனும் புறத்திணை ஒழுக்கத்தினை இக்கட்டுரை புலப்படுத்துகின்றது.

பிள்ளைத்தமிழ் எனும் பெரிய தமிழ், தமிழ் இலக்கிய வரலாற்றில் தனிச் சிறப்பு வாய்ந்ததாகும். பிள்ளைத்தமிழ் இலக்கணம் கண்ட தமிழ் அறிஞர்கள், பிள்ளைத்தமிழ் இலக்கியத்தினைப் படைத்துப் பெருமை சேர்த்துள்ளனர். பிள்ளைத்தமிழ் இலக்கியச் சிறப்பினை இக்கட்டுரை எடுத்து இயம்புகின்றது. 'திருமூலர் தெளிவுறுத்தும் வாழ்க்கை நெறி' எனும் ஆறாவது கட்டுரை, உலகில் என்றும் நிலைத்திருக்கும் நிலையாமையினை நயம்படக் கிளத்துகின்றது. 'தமிழ் இலக்கியத்தில் இராதை' எனும் ஏழாவது கட்டுரை ஆழ்ந்த ஆய்வுச் செய்திகளை அடிப்படையாகக் கொண்டுள்ளது. **'ஒட்டக்கூத்தரும் தக்கயாகப் பரணியும்' எனும் எட்டாவது**

கட்டுரை, ஒட்டக்கூத்தர் கவிதையின் பெருமையினையும், பரணி நூல்களுள் தக்கயாகப் பரணி தனி இடம் பெற்றுத் திகழ்வதனையும் தெளிவுறுத்தி நிற்கின்றது.

'சைவத்தின் மையம்' எனும் ஒன்பதாவது கட்டுரை தொன்றுதொட்டுச் சைவ சமயம் தனி ஒளிவீசித் திகழ்வதனைப் பல்வேறு சான்றுகளுடன் புலப்படுத்திக் காட்டுகின்றது.

''தமிழில் பக்திப் பனுவல்கள்'' என்னும் பத்தாவது கட்டுரை குமரகுருபரர், சிவப்பிரகாசர், தாயுமானவர், இராமலிங்கர், இக்காலத் தமிழ்க் கவிஞர்கள் ஆகியோர் பக்தித் துறையில் காட்டிய ஈடுபாட்டின் காரணமாக எழுந்த நூல்கள் பற்றிய கருத்துகளைப் புலப்படுத்தி நிற்கின்றது.

'குமரகுருபரர் வாழ்வும் தொண்டும்' எனும் கட்டுரையும் 'குமரகுருபரர் உணர்த்தும் இலக்கியக் கொள்கை' எனும் பதினோராவது பன்னிரண்டாவது கட்டுரையும் குமரகுருபரரின் சமயப் பெருவாழ்வினையும் தமிழ்ப் புலமையினையும் இலக்கியச் செவ்வியினையும் ஒருங்கே புலப்படுத்தி நிற்கின்றன.

இவ்வாறு பல்வேறு கருத்துகளைப் பாங்குறப் புலப்படுத்தி நிற்கும் இவ் 'வாழ்வியல் நெறிகள்' எனும் நூல், தமிழ் இலக்கிய ஆர்வலர்களுக்கு நல்விருந்தாய் அமையும் என்று நம்புகின்றேன்.

**—சி. பா**

---

# பொருளடக்கம்

# 1. வாழ்வியல் நெறிகள்

“அரிதரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது” என்பார் அறிவிற் சிறந்த ஔவைப் பிராட்டியார். பெறுதற்கரிய மானிடப் பிறவியைப் பெற்ற மக்கள் மண்ணில் நல்ல வண்ணம் வாழ்வதற்குச் சில நெறிமுறைகளைப் பின்பற்றுதல் வேண்டும். ‘எப்படி யாவது வாழலாம்’ என்பதை விடுத்து ‘இப்படித்தான் வாழ வேண்டும்’ என்று மனத்தில் உறுதி மேற் கொண்டு செயலில் அதனை நடாத்திக் காட்டுதல் வேண்டும். “குறிக்கோளிலாது கெட்டேன்” என்பார் திருநாவுக்கரசர் பெருமான். எண்பத்தோராண்டுகள் உயரிய குறிக்கோளுடன் தொண்டு வாழ்க்கையை மேற்கொண்டு வாழ்ந்த அப்பர் பெருமானே தம் வாழ்க்கை குறித்து இவ்வாறு சொல்லிக் கொள்வாரே யானால் நாமெல்லாம் எவ்வாறு வாழ்க்கையை வகுத் தமைத்துக் கொள்ள வேண்டும் என்பது தாமே போதரும்.

நில்லாமை நிலைபெற்றிருக்கின்ற இவ்வுலகில் நிலைபெற வாழ வேண்டும் என்று எண்ணியவர்கள் தம் புகழ் நிலைக்கக் கூடிய வகையில் சில சிறந்த செயல்களைச் செய்துவிட்டு மாண்டு போனார்கள்.

**மன்னா வுலகத்து மன்னுதல் குறித்தோர்**
**தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே**

—*புறநானூறு*: 165 : 1-2

என்று புறநானூறு புகலும்.

முதலாவதாக, நமக்கு வாழ்க்கையில் உயர்ந்த குறிக்கோள்கள் இருக்க வேண்டும். அவ்வாறு உயர்ந்த குறிக்கோள்களை அடையப் பாடுபடும் பொழுது, அவ்வுயர்ந்த இலக்குகள்—குறிக்கோள்களை அடைய முடியாமற் போனாலும் கவலையில்லை என்பதனை முயல் வேட்டையாடி மனம் முறிந்து போவதைவிட, யானை வேட்டையாடித் தோற்றுப் போவது மேல் என்பார் திருவள்ளுவர்.

**கான முயலெய்த அம்பினில் யானை**
**பிழைத்தவேல் ஏந்தல் இனிது**

—*திருக்குறள் : படைச்செருக்கு* : 1

எனவே உயர்ந்த குறிக்கோள்கள் மனித வாழ்க்கையின் இலக்காக அமைய வேண்டும். அப்பொழுதுதான் சில அரிய செயல்களை நமக்காகவும் சமுதாயத்திற்காகவும் ஆற்ற முடியும்.

"நன்றே செய்தல் வேண்டும்; நன்றும் இன்றே செய்தல் வேண்டும்; இன்றும் இன்னே செய்தல் வேண்டும்" என்பது கபிலரகவல். எனவே எடுத்துக் கொண்ட செயல்களை இனிது முடிப்பதற்கு வேண்டிய முயற்சிகளை விரைந்து மேற்கொள்ள வேண்டும்.

முதலாவதாக, "புகழும் இன்பமும் அறமும் ஆகிய இம்மூன்றும் சோம்பல் உடையாரிடம் தவறிக்கூட உண்டாவதில்லை" என்று நம் முன்னோர் கண்டனர்.

**இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்**
**அசைவுடன் இருந்தோர்க்கு அரும்புணர்வு**
**இனம்மென**
**வினைவயின் பிரிந்த வேறுபடு கொள்கை**
**—நற்றிணை 214 : 1–3**

என்று நற்றிணை நவில்கின்றது. எனவே வாழ்வியல் நெறிகளைச் செம்மையாக வைத்துக் கொள்வோர் சோம்பியிருத்தல் தகாது என்பது முதலாவது ஒருவர் கற்க வேண்டிய பாடமாகும்.

இந்த உலகில் ஒருவர் உயிர் வாழ உறுதுணையாய் அமைவது உணவாகும். எந்த ஒருவருடைய முயற்சியும் உணவைத் தேடுவதிலேயே அமைவதனைக் காணலாம். எனவேதான் பாரதியார்,

**வயிற்றுக்குச் சோறிடல் வேண்டும்; இங்கு**
**வாழும் மனிதருக்கு எல்லாம்**

என்று பாடினார். தவயோதியாம் திருமூலர் "யாவர்க்குமாம் உண்ணும்போது ஒரு கைப்பிடி" என்றார். புரட்சிக்கவிஞர் பாவேந்தர் பாரதிதாசன் அவர்கள்,

**பசி என்று வந்தவர்க்குப் புசி என்று**
**ஒருபிடி கொடுத்துப் பாரப்பா**

என்றார். தாயுமான தயாபரர்,

**யோசிக்கும் வேளையில் பசிதீர உண்பதும்**
**உறங்குவதுமே யல்லால் வேறொன்றறியேன்**
**பராபரமே**

என்றார்.

திருவள்ளுவர்,

**பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்**
**தொகுத்தவற்றுள் எல்லாம் தலை**

—திருக்குறள் : கொல்லாமை : 2

என்றார்.

"கிடைத்ததைப் பலருக்குப் பகிர்ந்து உண்ணக் கொடுத்து வாழ வேண்டும்; சோம்பல் கூடாது; எவரையும் வெறுக்கக் கூடாது; சான்றோர் அஞ்சும் அறஞ்சாராச் செயல்களைச் செய்யக் கூடாது. நாளும் நல்ல செயல்களையே நாடிச் செய்ய வேண்டும். எவ்வளவுதான் இலாபம் கிடைப்பதாயினும் பழிச் செயல்களைச் செய்யக்கூடாது. அத்தகைய மனவுறுதி வந்தமைதல் வேண்டும். தன்னலம் பாராமல் பிறர் நலம் பேணும் பெற்றியராகத் துலங்க வேண்டும்" என்று கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி என்னும் அரசப்புலவர் பாடியுள்ளார்.

**உண்டால் அம்ம இவ்வுலகம்; இந்திரர்**
**அமிழ்தம் இயைவது ஆயினும் இனிதெனத்**
**தமியர் உண்டலும் இலரே; முனிவிலர்;**
**துஞ்சலும் இலர்; பிறர் அஞ்சுவது அஞ்சிப்**
**புகழ்எனின் உயிரும் கொடுக்குவர்; பழி எனின்**
**உலகுடன் பெறினும் கொள்ளலர்; அயர்விலர்;**
**அன்ன மாட்சி அனையர் ஆகித்**
**தமக்குஎன முயலா நோன் தாள்**
**பிறர்க்குஎன முயலுநர் உண்மை யானே**

—புறநானூறு : 182

அடுத்து, "இரையைத் தேடுவதோடு இறையையும் தேடு" என ஆன்றோர் அருளியுள்ளனர். தமிழ்ப் பண்பாட்டின் தலையூற்றாக இதனை நாம் கொள்ளலாம்.

இறைவனை வணங்கி வாழ்தல் வேண்டும். பாப்பாவுக்கு அறிவுரை கூறவந்த பாரதியார்,

**உயிர்களிடத்தில் அன்புவேணும்; தெய்வம்**
**உண்மையென்று தானறிதல் வேணும்;**
**வயிர முடைய நெஞ்சு வேணும்; இது**
**வாழும் முறைமையடி பாப்பா**

என்பார். பல சமயத்தவரும் பல்வேறு திருப்பெயர்களிட்டு அழைத்து, பல்வேறு வகையாகத் தொழுதாலும் இறைவன் ஒருவனே என்பார் நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை அவர்கள்.

**அல்லா என்பார் சில பேர்கள்**
**அரன் அரி என்பார் சில பேர்கள்**
**வல்லான் அவன் பரமண்டலத்தே**
**வாழும் தந்தை என்பார்கள்**
**சொல்லால் விளங்கா நிர்வாணம்**
**என்னும் சிலபேர் சொல்வார்கள்**
**எல்லாம் இப்படிப் பலபேசும்**
**ஏதோ ஒருபொருள் இருக்கிறதே.**

"கடவுள் உண்டு என்றிரு; ஒன்று என்று இரு" என்று பெரியோர் புகல்வர்!

ஒன்றே குலம்; ஒருவனே தேவன் என்பது திருமூலர் வாக்கு. இறை நம்பிக்கை கொண்டவுடன் அந்த இறைவனை எவ்வாறு வணங்க வேண்டும் என்பதனையும் நாமக்கல் கவிஞரே நலமுற நவின்றுள்ளார்.

**அந்தப் பொருளை நாம் நினைந்தே**
**அனைவரும் அன்பாய்க் குலவிடுவோம்**
**எந்தப் படியாய் எவரதனை**
**எப்படித் தொழுதால் நமக்கென்ன**

**நிந்தை பிறரைப் பேசாமல்**
**நினைவிலும் கெடுதல் செய்யாமல்**
**வந்திப்போம் அதனை வணங்கிடுவோம்**
**வாழ்வோம் சுகமாய் வாழ்ந்திடுவோம்.**

இவ்வாறு இறை நம்பிக்கையுடன் வாழத் தலைப்படும் நேரத்தில், அடுத்து மேற்கொள்ள வேண்டிய வாழ்வியல் நெறி எதுவெனச் சிந்திக்கும் பொழுது ஈட்டும் செல்வத்தினைப் பிறர்க்குப் பகிர்ந்து வாழும் பெற்றியினை மேற்கொள்ள வேண்டும் என்பது புலனாகின்றது.

ஏனெனில் "கடல் சூழ்ந்த இவ்வுலகை ஒரு வெண் கொற்றக் குடையின்கீழ் ஆளும் பேரரசனாயினும் சரி, இரவும் பகலும் கண்ணுறங்காமல் விலங்குகளை வேட்டையாடித் திரியும் கல்வி அறிவற்ற ஒருவனாயினும் சரி இருவரும் உண்பது நாழி அரிசிச் சோறு தான்; உடுப்பவை இடுப்பில் ஒன்று, தோளில் ஒன்று ஆக இரண்டுதான். ஆக இரண்டேதான். மற்ற பிற வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களும் இவ்வாறே தான். எனவே செல்வத்தை ஈட்டுவதன் பயன், இல்லாதவர்க்கு ஈவதேயாகும். அப்படியில்லாமல் நாம் மட்டும் அனுபவித்து வாழ்வோம் என்று இருந்தால் அதனால் வரும் கேடுகள் பல உண்டு" என்று நக்கீரனார் நயம்பட நவின்றுள்ளார்.

**தென்கடல் வளாகம் பொதுமை யின்று**
**வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்**
**நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்**
**கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவற்கும்**

**உண்பது நாழி; உடுப்பவை இரண்டே;**
**பிறவும் எல்லாம் ஓர்ஒக்கும்மே;**
**செல்வத்துப் பயனே ஈதல்;**
**துய்ப்பேம் எனினே துப்புந பலவே**

—*புறநானூறு* : 189

நம் வாழ்க்கையின் குறிக்கோள் பிறருக்கு உதவுவதாகவே அமைய வேண்டும். அதுதான் சான்றோர் பண்டு கண்ட நெறி; அவ்வாறு ஒருவேளை உதவ முடியாமற் போனாலும் பிறருக்குத் தீங்காவது செய்யாமல் இருத்தலே சிறப்பாகும். அதுவே நல்ல கதிக்கு அழைத்துச் செல்லும் பாங்குடைத்தாகும். இவ்வாறு பேசுபவர் நரிவெரூஉத்தலையார் என்னும் சங்கச் சான்றோர் ஆவர்.

**நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்**
**அல்லது செய்தல் ஓம்புமின்! அதுதான்**
**எல்லோரும் உவப்பது; அன்றியும்**
**நல்லாற்றுப் படூஉம் நெறியும் ஆர் அதுவே**

—*புறநானூறு* 195 : 6-9

வாழ்க்கையில் இத்தகைய தெளிவைப் பெற்றவுடன் மனிதன் விரைந்து மேற்கொள்ள வேண்டிய செயல்கள் பலவாகும். உலகியல்உரிமையை உணர்ந்து அதற்கேற்றவாறு செயல்படுவதென்பது அவற்றுள் ஒன்றாகும்.

"சேற்றிலே பிறந்து வளர்ந்து வந்திருக்கும் தாமரை மலரில், ஒளி பொருந்திய நூற்றுக்கணக்கான இதழ்கள் ஒரே மாதிரியாகக் காணப்படும். அதுபோல ஏற்றத் தாழ்வில்லாத சிறந்த குடியிலே பிறந்து வாழ்ந்தவர்களைப் பற்றி ஆராய்ந்து பார்த்தால், அவர்களிலே புலவர்களுடைய புகழ்ச்சியையும் பாட்டினை

யும் பெற்றவர்கள் ஒரு சிலராகத்தான் அமைவார்கள். தாமரையிலை போலப் பாட்டும் புகழும் இன்றி மாண்டவர்களே பலராக இருப்பர். புலவர்களின் பாடல்களைப் பெற்ற புகழுடையவர்கள் தாம் ஆற்றும் கடமையைக் குறைவறச் செய்து முடிப்பர்; அதன் பயனாக வானத்திலே ஓட்டுவான் இல்லாத வானவூர்தியிலே ஊர்ந்து இன்புறும் பெரும் பொருளைப் பெற்று இன்புறுவர்.

இவ்வுலகிலே சந்திரன் ஓர் உண்மையை விளக்கிக் காட்டிக் கொண்டே திரிகின்றது. செல்வம் தேய்ந்து போவது உண்டு; பெருகுவது உண்டு; அடியோடு அழிந்து போவதும் உண்டு; மீண்டும் பிறப்பதும் உண்டு என்ற உண்மையைச் சந்திரன் தன் செய்கை யால் வெளிப்படுத்துகின்றது. கற்றறியாதவரையும் "இந்த உண்மையைக் காணுங்கள்" என்று கூறுவது போலக் காட்டி நிற்கிறது.

ஆதலால் இந்த உலகிலே ஒன்றைச் செய்ய வல்லவராயினும் சரி; வல்லமை அற்றவராயினும் சரி; வறுமையால் வாடி வருந்தி வந்தோர் யாராயினும் சரி, அவர்கள் துன்பத்தைக் கண்டு இரங்க வேண்டும், அவர்களுடைய வயிற்றுப் பசியைப் பார்த்து. அவர்களிடம் இரக்கம் காட்டி, அவர்களுக்கு உதவி செய்யும் தன்மையுடையவர்கள் ஆக வேண்டும் என்றும் உறையூர் முதுகண்ணன் சாத்தனார் என்று சங்கப் புலவர் சாற்றினார்.

**சேற்றுவளர் தாமரை பயந்த ஒண்கேள்**
**நாற்றிதழ் அலரின் நிரைகண் டன்ன**
**வேற்றுமை யில்லா விழுத்துணைப் பிறந்து**
**வீற்றிருந் தோரை எண்ணுங் காலை**

**உரையும் பாட்டும் உடையோர் சிலரே;**
**மரையிலை போல மாய்ந்திசினோர் பலரே;**
**புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்**
**வலவன் ஏவா வான வூர்தி**
**எய்துப என்ப, தம் செய்வினை முடித்து எனக்**
**கேட்பல் எந்தை சேட்சென்னி நலங்கிள்ளி**
**தேய்தல் உண்மையும், பெருகல் உண்மையும்**
**மாய்தல் உண்மையும், பிறத்தல் உண்மையும்**
**அறியா தோரையும் அறியக் காட்டித்**
**திங்கள் புத்தேள் திரிதரும் உலகத்து**
**வல்லார் ஆயினும் வல்லுநர் ஆயினும்**
**வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி**
**அருள வல்லை ஆகுமதி! இருள் இலர்**
**கொடாமை வல்லர் ஆகுக**
**கெடாத நுப்பின்நின் பகைஎதிர்ந் தோரே.**

*—புறநானூறு : 27*

பழந்தமிழர்களுள் ஆண்கள் கடமையே—கொண்ட தொழிலே உயிராகக் கொண்டிருந்தனர்; ஒளி பொருந்திய நெற்றியையுடைய பெண்கள் தத்தம் கணவரையே உயிராகக் கொண்டிருந்தனர்.

**வினையே ஆடவர்க்கு உயிரே; வாள் நுதல்**
**மனையுறை மகளிர்க்கு அவ்வாடவர் உயிர்**

**—குறுந்தொகை : 135 : 1-2**

பழந்தமிழர் மறத்துறையிலும் அறநெறி போற்றுபவர்களாக இருந்தனர். ஒரு நாட்டின்மீது படையெடுத்துச் செல்வதற்கு முன்னால், அந்நாட்டிலுள்ள பசுக்களும், பசுப் போன்ற மென்மைத் தன்மையுடைய அந்தணர்களும், பெண்களும், நோய்வாய்ப்பட்டவர்களும், நீத்தார் கடன் செய்தற்குரிய பொன் போலும் பிள்ளைகளைப் பெறாதவர்களும் பாதுகாப்பான

இடம் நாடிச் சென்று விடுக எனப் பறையறைந்து கூறிவிட்டே பின்னர்ப் படை நடத்திச் சென்றனர் என்பதனை நெட்டிமையார் என்னும் புலவர் எடுத்துரைக்கின்றார்.

**ஆவும் ஆனிகர் பார்ப்பன மாக்களும்**
**பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்**
**தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்**
**பொன்போற் புதல்வர்ப் பெறா தீரும்**
**எம்அம்பு கடிவிடுதும் நும்அரண்சேர்மின் என**
**அறத்தாறு நுவலும் பூட்கை மறம்.**

பழங்காலத்தில் உண்டி கொடுத்தவர்களை உயிர் கொடுத்தவர்களாக மதித்தனர் என்பது,

**நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்**
**உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே**
**உண்டி முதற்றே உணவின் பிண்டம்**
**உணவெனப் படுவது நிலத்தொடு நீரே**

—புறநானூறு : 18; 18–21

என்னும் புறநானூற்றடிகளால் தெரிய வருகின்றது. மேலும் நம் முன்னோர்கள், உரத்த அதிகாரக் குரலில் ஆணையிடுதலையும் விரைந்து செல்லக் கூடிய வாகனங்களில் பயணம் செய்ததையும் செல்வமாகக் கருதவில்லை என்பதும், அது அவர்களில் முன்னை நல்வினை என்றும் கருதினர் என்பதும் சான்றோர்கள் படும் துன்பத்தைப் போக்கும் திறனுடையவர்களே செல்வம் பெற்றவர்களாகக் கருதப் பெற்றனர் என்பதும்,

**நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும்**
**செல்வம் அன்று; தன் செய்வினைப் பயனே**
**சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர்**
**புன்கண் அஞ்சும் பண்பின்**
**மென்கண் செல்வம் செல்வம்என் பதுவே.**

—*நற்றிணை* : 210 : 5-9

என்று நற்றிணைப் புலவரொருவர் கூறியிருப்பது கொண்டு உணரலாம்.

மேலும் வ ழ்வியல் நெறியாகப் பின்வரும் நற்பண்பொன்றும் பண்டை நாளில் பாராட்டப் பெற்றது. "தம்மால் கொடுக்க முடிந்த பொருளை முடியும் என்று சொல்லிக் கொடுப்பதும், தம்மால் கொடுக்க முடியாத பொருளை முடியாது என்று மறுத்து விடுவதும் ஆகிய இரண்டு பண்புகளும் நற்பண்புகள்தாம்; உதவி செய்யும் தன்மையோடு கூடிய நட்பின் தன்மைதான். இதுபோன்றே தன்னால் முடியாததை முடியுமென்று சொல்லுதலும், தன்னால் செய்யக் கூடியதை முடியாது என்று மறுத்தலும் ஆகிய இந்த இரண்டு பண்புகளும் தீய பண்புகள் தாம். தன்னிடம் உதவி நாடி விரைந்து வந்த இரவலர் களைத் துன்புறுத்துவதாகும். அது மட்டுமல்லாமல் ஈவோரின்புகழ் தேய்ந்து போவதற்கான வழியுமாகும்" என்று ஆவூர் மூலங்கிழார் என்னும் அருந்தமிழ்ப் புலவர் பாடியுள்ள திறம் வாழ்வியல் நெறியினை வற்புறுத்தும் போக்கில் அமைந்திருக்கக் காணலாம்.

**ஒல்லுவது ஒல்லும் என்றாலும், யாவர்க்கும்**
**ஒல்லாது இல்என மறுத்தலும், இரண்டும்**
**ஆள்வினை மருங்கின் கேண்மைப் பாலே;**
**ஒல்லாது ஒல்லும் என்றலும், ஒல்லுவது**

**இல்என மறுத்தலும் இரண்டும் வல்லே**
**இரப்போர் வாட்டல் அன்றியும், புரப்போர்**
**புகழ் குறை படூஉம் வாயில்.**

—புறநானூறு; 196 : 1-7

இறுதியாக, வாழ்வியல் நெறிகளுள் காலங் கடந்தும் எக்காலத்திற்கும் இயைவதாக ஓர் அரிய கருத்துக் கருவூலத்தைக் கணியன் பூங்குன்றனார் என்னும் புலவர் கூறிச் சென்றுள்ளார். அரிய வாழ்வியற் கோட்பாடுகளைத் தன்னகத்தே கொண் டிலங்கும் அவரது பாட்டு ஒரு சாகாக் கவிதை எனச் சாற்றும் தகுதி வாய்ந்ததாகும்.

"எல்லாம் நமது ஊரே; எவரும் நம் உறவினர் களே! தீமையும் நன்மையும் பிறரால் நமக்கு வருவன வல்ல; நம்மால் நமக்கே ஏற்படுத்திக் கொள்வதாகும் அவை. பிறரை நொந்து கொள்ளுதலும், பின்னர்த் தணிந்து போதலும் அவை போன்றே அமைந்துள்ளன. இவ்வுலகில் தோன்றிவிட்டாலே ஒரு நாள் சாதல் வேண்டும் என்பது உறுதி. அஃதொன்றும் புதிய நிகழ்முறை அன்று. அக்காரணத்தாலேயே வாழ்தல் என்பதனையும் மகிழ்ச்சிக்குரிய செயலாகக் கருதுவ தில்லை. ஒரு வெறுப்பு வந்துற்ற காலையில் வாழ்க்கையே துன்பம் என்று வருந்திக் குலைந்து போவதும் இல்லை. மின்னுகின்ற மேகம் குளிர்ந்த மழையைப் பொழிந்து, அம்மழை நீர் கற்களைப் புரட்டிக் கொண்டு ஆற்று நீராக ஓட, அவ் ஆற்று நீரின் போக்கிலேயே செல்லும் ஓடம் போன்று ஆருயிர்கள் ஊழின் போக்கிலேயே செல்லும் என்பது வாழ்க்கையில் அநுபவப்பட்ட நம் முன்னோர்கள் கண்ட உண்மையாகும், எனவே பெருமைமிக்க

பெரியோர்களை வியந்து பாராட்டிக் கொண்டிருத்தலு மில்லை; சிறியோரை இகழ்ந்து கொண்டிருப்பது மில்லை'' என்று கணியன் பூங்குன்றனார் குறிப்பிட் டிருக்கக் காணலாம்.

**யாதும் ஊரே; யாவரும் கேளிர்;**
**தீதும் நன்றும் பிறர்தர வாரா;**
**நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன;**
**சாதலும் புதுவது அன்றே; வாழ்தல்**
**இனிது என மகிழ்ந்தன்றும் இலமே; முனிவின்**
**இன்னாது என்றலும் இலமே; மின்னொடு**
**வானம் தண்துளி தலைஇ ஆனாது**
**கல்பொழுது இரங்கும் மல்லர்பேர் யாற்று**
**நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்**
**முறைவழிப் படூஉம் என்பது; திறவோர்**
**கட்சியில் தெளிந்தனம் ஆதலின், மாட்சியின்**
**பெரியோரை வியத்தலும் இலமே**
**சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே.**

*புறநானூறு* **: 192**

''வாழ்தல் வேண்டிப் பொய் கூறேன்; மெய் கூறுவல்'' என்பது அன்று நம் முன்னோர்கள் கண்ட வாழ்வியல் நெறியாகும்.

இதுகாறும் கூறியவாற்றான் வாழ்வியல் நெறிகள் சில நம் முன்னோர் கண்ட வாழ்க்கைத் தெளிவினை உணர்த்தி நிற்கக் கண்டோம். தொல் பழங்குடியினராகிய தமிழர்கள் தாம் வாழ்ந்த வாழ்க்கை யினைப் பின்வரும் வழித்தோன்றல்களும் தெரிந்து பின்பற்றி வாழ்வு சிறக்க வாழ வேண்டும் எனும் உயரிய நோக்கத்துடன் கவிதையில் வடித்துச் சென்றனர் என்றும் ஒருவாறாக உய்த்துணர்ந்து அறியலாம்.

# 2. தமிழில் நிலமும் பொழுதும்

இயற்கையோடு இயைந்த இன்ப வாழ்வு வாழ்ந்தவர்கள் நம் முன்னோர். அவர்கள் தங்கள் வாழ்க்கைக்கு அடித்தளமாக இயற்கை அமைந்திருப்பதை உணர்ந்து இயற்கையைப் போற்றி வாழ்ந்தனர். மனித வாழ்க்கைக்கு இயற்கைப் பொருட்கள் துணை புரிவதை உணர்ந்து இயற்கையைத் தனது வாழ்க்கைக்காகப் பயன்படுத்தத் தொடங்கினர். முதலில் இயற்கையைப் புரிந்து கொள்ளாத நிலையிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக இயற்கைப் பொருட்களைப் புரிந்து அதைப் பயன்படுத்தத் தொடங்கினர். அவ்வாறு அவர்கள் இயற்கையாகிய நிலத்தையும் பொழுதையும் பயன்படுத்திய, இவற்றின் மீது அவர்கள் கொண்டிருந்த எண்ணத்தையும் இலக்கிய, இலக்கணங்களின் மூலம் தெரிந்து கொள்ளலாம். இலக்கியம் வாழ்க்கையின் கண்ணாடி என்பர். ஏனெனில் மக்கள் வாழ்க்கையிலிருந்து பெறப்பட்ட நிகழ்ச்சிகளை ஒருங்கு தொகுத்துச் சுவைபட இலக்கியம் படைப்பதால் இலக்கியத்தின் மூலம் ஒரு சமுதாயத்தை இனங்காண முடியும். அவ்வகையில் தமிழில் நிலமும் பொழுதும் என்பதைப் பற்றி இலக்கண, இலக்கியங்கள் வழிக் காணலாம்.

## திணை இலக்கியம்

தமிழில் தோன்றி வளர்ந்துள்ள இலக்கிய வகைகளுள் மிகவும் புகழும் பரவலும் உடையது திணை இலக்கியம். திணை இலக்கியம் நில அடிப்படையிலானது. நிலமும் பருவப் பொழுதுகளும் இயற்கைப் பின்னணியும் மனித வாழ்வும் இயைபுபடப் புனையப் படுவது திணை இலக்கியமாகும். நிலச்சாயலும் அதில் வாழும் உயிரினச் சாயலும் மனித வாழ்வுச் சாயலும் ஓவியமாகப் படிந்து கிடப்பதே திணை இலக்கியம்.

இத்திணை இலக்கியம் குறித்து, இன்று கிடைக்கப் பெறும் தமிழ் நூல்களுள் முதன்மையான தொல்காப்பியம் பொருளதிகாரத்தில் விரிவாகப் பேசுகிறது. எழுத்து, சொல், பொருள் என்னும் மூன்று அதிகாரங்களில் முறையே எழுத்துக்கும் சொல்லுக்கும் இலக்கியத்துக்கும் இலக்கணம், திறனாய்வு செய்த பெருமை தொல்காப்பியருக்குண்டு. தமிழில் எவ்வித ஆராய்ச்சியானாலும் அது தொல்காப்பியத்திலிருந்தே தொடங்குவதாக அமையும். ஏனெனில் அறிவியல் முறையில் தமிழ் ஆய்வு தொடர்பான அனைத்துக் கருத்துகளையும் குறிப்பிட்டு விளக்கியுள்ள சிறப்புடையது தொல்காப்பியம். அம்முறையில் தொல்காப்பியத்தில் நிலமும் பொழுதும் விளக்கப்பட்டிருப்பதை முதலில் காணலாம்.

திணை இலக்கியத்தை அகம், புறம் என இருவகையாகப் பிரித்து விளக்குகின்றது தொல்காப்பியம். அகத்திணை கைக்கிளை, முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை என

ஏழாகப் பாகுபடும். வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்று புறத்திணையும் ஏழாகப் பகுக்கப்படும்.

அகத்திணை களவு, கற்பு என்று இருகை கோளாகப் பிரியும், களவு காமப்புணர்ச்சி, இடந் தலைப்பாடு, பாங்கொடு தழுவுதல், தோழியிற் கூட்டம் என்று நான்கு வகைப்படும். கற்பு மறைவெளிப்படுதல், தமரின் பெறுதல் என்று இருவகைப்படும். பிற்காலத் தில் இவை விரிவுபடுத்தி விளக்கப்பட்டன.

## முப்பொருள்கள்

அகப்பொருள் பாடல்களில் முதல் பொருள், கருப் பொருள், உரிப் பொருள் என்று முப்பொருள் பயின்று வரும். இவை மூன்றில் உரிப் பொருள் என்பதே பாடலின் அடிக்கருத்து ஆகும். இம்மூன்று பொருளும் பயின்று வரும் பாடல்களும் உண்டு. முதற் பொருளின்றிக் கருப்பொருளும் உரிப்பொருளும் மட்டும் அமையும் பாடல்கள் சங்க இலக்கியத்தில் பெரும் பான்மையாக உள்ளன. கருப்பொருளும் இல்லாமல் உரிப்பொருள் மட்டுமே அமையும் பாடல்களும் பல உண்டு. முதலும் கருவும் இன்றிப் பாடல் அமையலாம்; உரிப்பொருளின்றிப் பாடல் அமையாது; உரிப் பொருளே பாடலின் அடிப்படை,

> **கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்**
> **முற்படக் கிளந்த எழுதிணை யென்ப**
>
> **(தொல். அகத் : 1)**

என்று அகத்திணை ஏழினையும் குறிப்பிடும் தொல்காப்பியர்,

**முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே**
**நுவலுங் காலை முறைசிறந் தனவே**
**பாடலுட் பயின்றவை நாடுங்காலை.**

**(தொல். அகத் : 3)**

என்னும் நூற்பாவில் திணையுணரும் பாங்கை விளக்குகின்றார். இந்நூற்பா உரையில் இளம்பூரணர் முதல், கரு, உரி என்ற மூன்றும் இருந்தால் முதல் பொருளால் திணை பிரிக்கப்படும் என்றும், கருவும் உரியும் இருந்தால் கருப்பொருளால் திணை வகுக்கப் படும் என்றும், உரிப்பொருள் ஒன்று மட்டுமே இருந்தால் அதனால் திணை உணரப்படும் என்றும் விளக்கியுள்ளார்.

**சேற்றுநிலை முனைஇய செங்கட்காரான்**
**ஊர்மடி கங்குலின் நோன்தளை பரிந்து**
**கூர்முள் வேலி கோட்டின் நீக்கி**
**நீர்முதிர் பழனத்து மீனுடன் இரிய**
**அத்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை**
**வண்டூது பனிமலர் ஆருமூர**
**யாரை யோநிற் புலக்கேம் வாருற்று**
**உரைகிறந் தொளிருந் தாழிருங் கூந்தல்**
**பிறரும் ஒருத்தியை நம்மனைத் தந்து**
**வதுவை அயர்ந்தனை யென்ப அஃதியாங்**
**கூறேம் யாழியர் எந்தை செறுநர்**
**களிறுடை அருஞ்சமந் ததைய நூறும்**
**ஒளிறுவாள் தானைக் கொற்றச் செழியன்**
**பிண்ட நெல்லின் அள்ளூ ரன்னஎம்**
**ஒண்டொடி நெகிழினும் நெகிழ்க**
**சென்றீ பெருமநின் தகைக்குநர் யாரோ.**

**(அகநானூறு : 46)**

இப்பாடலில் மருதத்திற்குரிய முதலும் கருவும் வந்து உரிப்பொருளால் சிறப்பெய்தி முடிந்தது. இன்னின்ன திணைக்கு இன்னின்ன நிலம் என்று பாகுபடுத்தும் போது, முதற்பொருள் நிலம், பொழுது என்று இருவகைப்படும் என்பதை,

**முதல் எனப்படுவது நிலம் பொழுதிரண்டின்**
**இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே**

(தொல். அகத் : 4)

என்னும் நூற்பாவில் விளக்குகின்றார். அடுத்து,

**மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்**
**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே.**

(தொல். அகத் : 5)

என்று,

**முல்லைக்குக் காடும் காடு சார்ந்த பகுதியும்**
**குறிஞ்சிக்கு மலையும் மலைசார்ந்த பகுதியும்**
**மருதத்திற்கு வயலும் வயல்சார்ந்த பகுதியும்**
**நெய்தலுக்குக் கடற்கரையும் அது சார்ந்த பகுதியும்**

நிலமாகும் என்பதை விளக்கிக் காட்டுகின்றார். இந்நூற்பா உரையில் இளம்பூரணர், 'இயற்கை என்பதனால் செய்து கோடல் பெறாமை அறிந்து கொள்க' என்று விளக்கிச் செல்கின்றார். இதனால் நிலமும் பொழுதும் மக்களால் செய்து கொள்ளப் படுவன அல்ல என்பதை விளக்கிச் செல்வதை அறிய முடிகின்றது. இந்நூற்பாவிற்கு உரையெழுதும்

நச்சினார்க்கினியர், 'இயற்கையெனவே செய்கை நிலனுஞ் செயற்கைப் பொழுதும் உளவாயிற்று. மேற் 'பாத்திய' நான்கு நிலனும் இயற்கை நிலனாம்' என்று விளக்கிச் செல்கின்றார். இதனால் இயற்கையில் நிலம் நான்கு பிரிவுகளாக அமைந்திருந்ததை அவர்கள் விளங்கிக் கொண்டு செயல்பட்டதை அறிய முடிகின்றது. மேலும் தமிழகத்தின் நிலஅமைப்பும் இந்த நான்கு பிரிவுகளுக்குள்ளேயே அடங்கியிருந்தது என்பதும் தெளிவாகின்றது. பாலை அமைப்பு தமிழகத்தில் இல்லையாயினும் பாலை நிலம் பற்றி, பிற இடங்களுடன் ஏற்பட்ட தொடர்பால் அவர்கள் அறிந்திருந்தனர். பிரிவு பற்றிய பொருண்மையைப் பாடும் போது, இரக்க உணர்ச்சியை மிகுவிக்க வேண்டிப் பாலை நிலத்தைப் பின்பலமாகக் காட்டி யுள்ளனர். ஆயின் நம் முன்னோர்கள் நிலத்தை நான்கு வகையாகப் பிரித்தே அறிந்திருந்தனர். ஆதலால் இவ்வுலகத்தை நானிலம் என்று அழைத்தனர். அறிவுக் கண்கொண்டு பார்க்கும் போதும் இதுவே சரியான முறையாகப்படுகிறது. இதனைத் தொல்காப்பியம்,

**அவற்றுள்**
**நடுவண் ஐந்திணை நடுவணது ஒழிய**
**படுதிரை வையம் பாத்திய பண்பே.**

**(தொல். அகத் : 2)**

என்று விளக்குகின்றது. மேலும் ஒவ்வொரு நிலத் திலும் ஒவ்வோர் ஒழுக்கம் நடக்கும் என்று பெரும் பான்மை நோக்கியும் சுவைபயத்தற்காக நாடக வழக்காகவும் கூறிச் செல்கின்றார். இவ்வாறு ஒவ்வொரு நிலத்திற்குரிய ஒழுக்கம் கட்டுப்பாடான எல்லைக் கோடுடையதன்று. ஒன்றின் ஒன்று கலந்தும்

மாறியும் வரும். அப்போது அது திணை மயக்கம் என்று கூறப்படுகின்றது.

காடும் காடு சார்ந்த பகுதியிலும் நிலவும் சூழலான் தலைவி பிரிவுத்துயரைப் பொறுத்து ஆற்றியிருக்க உதவுகின்றது. குறிஞ்சி நிலமாகிய மலையும் மலை சார்ந்த பகுதியும் ஆள்நடமாட்டம் அதிகம் இல்லாத தாலும் அச்சூழல், மறைவிடம் போல் அமைந்துள்ள செடி கொடி படர்ந்த, பூக்கள் பூத்துக் குலுங்குகின்ற மலைப்பகுதி புணர்ச்சியைத் தூண்டுவதாகவும் அதற்குத் தகுந்த இடமாகவும் அமைகின்றது. மருதத்தின் செழிப்பும் வளமையும் ஊடலை வளர்த்து, பரத்தமைக்கு வழிவகுக்கின்றது. அது போன்றே கடல் சார்ந்த பகுதி இரக்க உணர்ச்சியை அதிகப் படுத்தி, இலக்கியச் சுவையை மிகுவிக்கின்றது. இப்பாகுபாடு உளவியல் அடிப்படையில் அமைந்து விளங்குகின்றதெனலாம்.

**கதிர்கை யாக வாங்கி ஞாயிறு**
**பைதறத் தெறுதலின் பயங்கரந்து மாறி**
**விடுவாய்ப் பட்ட வியங்கண் மாநிலம்**
**காடுகளில் எதிரிக் கனைபெயல் பொழிதலின்**
**பொறிவரி யினவண் டார்ப்பப் பலவுடன்**
**நறுவீ மல்லையொடு தோன்றி தோன்ற**
**வெறியேன் றன்றே வீகமழ் கானம்**
**எவன்கொல் மற்றுவர் நிலையென மயங்கி**
**இகுபனி உறைக்குங் கண்ணோடிணை பாங்கு**
**இன்னாது உறைவி தொன்னலம் பெறூஉம்**
**இது நற்காலம் காண்டிசின் பகைவர்**
**மதில்முகம் முருக்கிய நொடிசிதை மருப்பிற்**
**கந்துகால் ஒசிக்கும் யானை**
**வெஞ்சின வேந்தன் வினைவிடப் பெறினே.**

(அகநானூறு : 164)

இப்பாடலில் நிலவருணனை அமைந்துள்ளது. பாலை போல் மாறியிருந்த நிலம், பாட்டுப்பகுதி மழை பொழிந்து சிறப்புறுவதையும் இப்பாடல்வழி அறிய முடிகின்றது. இப்பாடலில் பாலைக்குரிய உரிப்பொருள் பயின்று வந்தாலும் நிலத்தின் அடிப்படையில் முல்லைத் திணைப் பாடலாகக் கொள்ளப்பட்டுள்ளது.

கருப்பொருளும், முதற்பொருளில் பொழுதும் திணை மயக்கத்தில் மயங்கி வரலாம். அதாவது பாலைத் திணைக்குரியது வேறொரு திணைக்கு வரலாம். ஆனால் நிலமும், உரிப்பொருளும் மயங்கி வராது. அதாவது நிலமும் உரிப்பொருளும் ஒரு பாடலில் பயன்று வந்தால், அவை ஒரே திணைக் குரியனவாயின் அவ்வாறே கொள்ளப்படும். அவ்வாறின்றி மேற்காட்டிய பாடலில் உள்ளது போல் பாலைக்குரிய உரிப்பொருளும் முல்லைக்குரிய நிலமும் ஒரு பாடலில் பயின்று வந்தால் நிலத்தின் அடிப்படை யில் பாடலின் திணை உணரப்படும். இதனால் நிலப் பாகுபாட்டிற்கு முதன்மையாயிருந்த தமிழர்கள்தம் திறம் உணர முடிகின்றது.

**திணைமயக் குறுதலும் கடிநிலை இலவே**
**நிலனொருங்கு மயங்குதல் இல்லென மொழிப**
**புலன்நன் குணர்ந்த புலமையோரே.**

**(தொல். அகத் : 14)**

**உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே**

**(தொல். அகத் : 15)**

என்னும் நூற்பாக்கள் திணை மயக்கத்தில் நிலனும் உருப்பொருளும் மயங்காத நிலையை அறிய முடிகின்றது. சங்க இலக்கியப் பாடல்கள் குறிப்பாக

அகநானூற்றுப் பாடல்கள் நிலவருணனையில் சிறந்து நிற்கின்றன.

நிலத்தின் இயல்புகளை விளக்கும் பாடல்கள் தமிழிலக்கியங்களில் காணப்படுகின்றன.

**யாயும் ஞாயும் யாரா கியரோ**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்**
**யானும் நீயும் எவ்வழி அறிதுஞ்**
**செம்புலப் பெயனீர் போல**
**அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே**

**(குறுந்தொகை : 40)**

என்னும் பாடலில் முன்பின் தொடர்பில்லாத தலைவனும் தலைவியும் ஒன்றிணைந்ததை நிலமும் நீரும் சேர்ந்ததற்கு உவமை கூறுகின்றார், செம்புலப் பெயனீரார். நீர் தான்சேரும் நிலத்திற்கேற்ப வண்ணம் மாறும்; இருக்கும் பொருளுக்கேற்ப வடிவம் மாறும். இந்த உண்மையை அனுபவ வாயிலாக உயர்ந்து அறிந்து பாடியுள்ளதை அறிய முடிகின்றது. எனவே மண்ணும் நீரும் கலந்த கலப்பு இங்கு உவமை கூறப் பட்டுள்ளது. மேலும் செம்மண்ணொடு நீர் சேர்ந்து செந்நிறம் பெற்றபின் இரண்டையும் தனித் தனியே பிரித்தறிதல் கடினம். இந்த அடிப்படையையும் உணர்ந்து தலைவனும் தலைவியும் இனிப் பிரிக்க இயலாதவர்கள் என்னும் தத்துவத்தையும் இங்கு உள்ளடக்கிக் கூறியிருத்தல் காணலாம்.

தெய்வப்புலமைத் திருவள்ளுவரும் இக்கருத்தைத் தனது நூலில் விளக்கிச் செல்கின்றார்.

**நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்**
**கினத்தியல்ப தாகு மறிவு.**

**(திருக்குறள் : 452)**

இக்குறட்பாவுக்கு உரையெழுதும் பரிமேலழகர், "விசும்பின் கட்டன்றன்மைத்தாய நீர் நிலத்தோடு சேர்ந்த வழி, நிறம், சுவை முதலிய பண்புகள் திரிந்தாற்போலத் தனிநிலைக் கட்டன்றமைத்தாயவறிவு பிறவினத்தோடு சேர்ந்த வழிக் காட்சி முதலிய தொழில்கள் திரியுமென இதனால் அதனது காரணம் கூறப்பட்டது" என்று விளக்கம் கூறுகின்றார்.

நல்ல நிலத்தில்தான் நல்ல செடி கொடி மரங்கள் தோன்ற முடியும். களர் நிலத்திலோ உவர் நிலத்திலோ நல்ல பயிரினம் தோன்றாது.

**நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்**
**குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்**

**(திருக்குறள் : 959)**

என்றும் திருக்குறளில் இக்கருத்து விளக்கப்பட்டிருத்தலை அறியலாம். இதனையே பெண் கல்வி பற்றி விளக்கும் போது பாவேந்தர் பாரதிதாசனும், "கல்வியில்லா மகளிர் களர் நிலம் போன்றவர்கள்; அவர்களிடம் நல்ல மக்கள் எவ்வாறு தோன்றுவர்?" என்று வினவுகின்றார். மண்ணின் இயல்பு பயிரினத்திற்குப் பாதிப்பை உண்டாக்கும் என்பதை இலக்கிய நூல்கள் காட்டுகின்றன.

நிலம் ஒரு பெரும் சொத்தாக அமைந்திருந்து உயிர் வாழ்விற்கு இடமாகவும், உண்டு உயிர் வாழ்வதற்கு வேண்டிய பொருட்களை வழங்கும் கருவூலமாகவும் விளங்கியது. மனிதன் நாகரிகம் பெற்று, நிலத்தை உழுது பண்படுத்திப் பயிர் செய்து தனது உணவுத் தேவையை நிறைவு செய்து கொண்டான். நிலத்தைத் தனது வாழ்க்கையின் அடிப்படையாகக் கொண்டான். திருவள்ளுவரும்,

**இலமென் றசைஇ யிருப்பாரைக் காணின்**
**நிலமென்னும் நல்லாள் நகும்**
**(திருக்குறள் : 1040)**

என்று நிலத்தின் வள்ளன்மையை விளக்கிச் செல்கின்றார்.

**அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை**
**இகழ்வார்ப் பொறுத்தல் தலை**
**(திருக்குறள் : 151)**

என்று நிலத்தோடு பொறுமை ஒப்பிட்டுப் பேசப்படுகின்றது. நிலம் பயிர்கள் மூலமும் தன்னுள் புதைந்து கிடக்கின்ற கரிம வளத்தின் மூலமும், நீரின் மூலமும் உலகைப் பாதுகாத்து வருதல் இங்கு நினைவு கூரத்தக்கது. நிலம் மிகவும் பரந்து விரிந்து பெருகி இருப்பதைக் குறுந்தொகை உவமையாக்கியுள்ளது.

**நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று**
**நீரினும் ஆரள வின்றே சாரற்**
**கருங்கோற் குறிஞ்சிப்பூக் கொண்டு**
**பெருந்தேனிழைக்கும் நாடனொடு நட்பே**

**(குறுந்தொகை : 3)**

என்னும் பாடல் நிலத்தின் அளவுப் பெருமையை விளக்கி நிற்கின்றது.

**நாடா கொன்றா காடா கொன்றா**
**அவலா கொன்றா மிசையா கொன்றா**
**எவ்வழி நல்லவர் ஆடவர்**
**அவ்வழி நல்லை வாழிய நிலனே**
**(புறநானூறு : 187)**

என்னும் புறநானூற்றுப் பாடல் அவ்வந் நிலத்தில் வாழும் மக்களால் நிலத்திற்குப் பெருமை என்பதை விளக்குகின்றது.

தமிழர்கள் நிலத்தின் இயல்பைக் கொண்டு அவ்வப் பகுதிக்குப் பெயரிட்டனர். ஆற்றோரங்களில் உள்ள ஊர்களுக்கு அவ்வாற்றின் பெயராலும் மலை நாட்டில் உள்ள ஊர்களுக்கு அம்மலையின் பெயரையும் வைத்துப் போற்றினர். பெரும்பான்மை ஊரின் பெயரைக் கொண்டே அப்பகுதி நிலத்தின் தன்மையை அறியலாம். சான்றாக, பெருமணல் என்னும் ஊரைக் குறிப்பிடலாம். இப்பெயரை வைத்தே அவ்வூரின் நில, மண் அமைப்பை அறியலாம். டாக்டர் ரா.பி.சேதுப் பிள்ளை 'தமிழகம்—ஊரும் பேரும்' என்னும் தனது நூலில் ஊர்ப் பெயர்ச் செய்திகளை விரிவாக விளக்கிச் செல்கின்றார். தமிழர்கள் கண்ட நானிலப் பகுப்பு அறிவியல் பாங்கானது என்பது தெளிவாகின்றது. தங்களது வாழ்விற்கு அடிப்படையாய் நிலம் அமைந் திருப்பதைத் தமிழர்கள் நன்குணர்ந்திருந்தார்கள் என்பதை இலக்கண, இலக்கிய நூல்கள் தெளிவாக விளக்கி நிற்கின்றன.

## பொழுது

மனித வாழ்க்கையின் அடிப்படையாய் நிலம் அமைந்துள்ளதை அறிந்திருந்த பழந்தமிழர்கள் கால நிலைகளும் வாழ்க்கைக்கு இன்றியமையாத கூறாக அமைவதை உணர்ந்தனர். ஒரு நாளில் பாதிப் பகுதி பகலாகவும் பாதிப் பகுதி இருளாகவும் இருப்பதை அறிந்து பகல், இரவு என்று பிரித்தனர். பின்னர் அவற்றுள்ளும் பல நிலைமை இருப்பதை அறிந்து அவற்றைக் கூறிட்டு காலை, முற்பகல், பிற்பகல், மாலை, இரவு என்று பகுத்தனர். அகத்திணைக்குரிய முப்பொருளுள் ஒன்றான முதலாவதான முதற்பொருள்

நிலம், பொழுது என்று இருவகையால் அமைகின்றது. அப்பொழுதைப் பெரும்பொழுது என்றும் சிறு பொழுது என்றும் இருவகைப்படுத்தினர். ஒருநாளைக் குரியதைச் சிறுபொழுது என்றும் ஓர் ஆண்டைப் பருவ நிலைகளாகக் கூறிடுவதைப் பெரும்பொழுது என்றும் அமைத்தனர்.

## பெரும்பொழுது

1. கார் காலம்—இது முல்லைத் திணைக்குரியது. அதாவது மழைக்காலம். இது ஆவணி, புரட்டாசி மாதங்களை உள்ளடக்கியது.

2. கூதிர் காலம் — குளிர்காலமாகிய இது குறிஞ்சித் திணைக்குரியது. ஐப்பசி, கார்த்திகைத் திங்கள்களை உள்ளடக்கியது.

3. முன்பனிப் பருவம்—குளிர் காலம். இது குறிஞ்சித் திணைக்குரியது. மார்கழி, தை மாதங்களை உள்ளடக்கியது.

4. பின்பனிப் பருவம்—இது பாலைக்குரியது. மாசி, பங்குனி மாதங்களை உள்ளடக்கியது.

5. இளவேனில் — வேனிற் காலம். பாலைத் திணைக்குரியது. சித்திரை, வைகாசி மாதங்களை உள்ளடக்கியது.

6. முதுவேனில்—வேனிற் காலம். ஆனி, ஆடி மாதங்களை உள்ளடக்கிய இப்பருவம் பாலைத் திணைக்குரியது. இவற்றுள் மருதம், நெய்தல், என்னும் இரு திணைக்கும் மேற்கூறிய ஆறு பெரும் பொழுதுகளும் ஒருமையுடையன,

இவ்வாறு ஓர் ஆண்டை ஆறு பெரும் பொழுது களாகப் பிரித்து வகைப்படுத்திய பெருமை நம் முன்னோர்களுக்குண்டு. இதனால் அவர்களின் காலப் பகுப்பாய்வுத் திறனும் அறிவியல் பாங்கும் புலனா கின்றது. இவ்வாறே சிறுபொழுதைப் பகுத்துள்ளனர். அதன் விளக்கத்தை இனிக் காணலாம்.

### சிறுபொழுது

ஒரு நாளை 6 கூறிட்டு வகைப்படுத்தியுள்ளனர். அதுவே சிறுபொழுது என்று அழைக்கப் படுகிறது.

1. மாலை முல்லைத் திணைக்குரியது. இரவுப் பொழுதின் முற்கூறு.
2. யாமம்—குறிஞ்சித் திணைக்குரியது. இரவுப் பொழுதின் நடுக்கூறு.
3. வைகறை — மருதத்திற்குரியது. இரவுப் பொழுதின் பிற்கூறு.
4. விடியல்—மருதத்திற்குரியது. பகற்பொழுதின் முற்கூறு.
5. ஏற்பாடு—நெய்தல் திணைக்குரியது. பகற் பொழுதின் பிற்கூறு.
6. நண்பகல்—பாலைக்குரியது. பகற்பொழுதின் நடுக்கூறு.

இச்செய்திகளால் ஒரு நாளை இருகூறாகவும், ஒவ்வொரு கூறையும் முன், நடு, பின் என மூன்றாக வும் பிரித்து ஆறு சிறுபொழுதுகளை அமைத்

துள்ளனர். மேற்கூறிய கருத்துகளைக் கீழ்வரும் படம் மூலம் விளக்கலாம்.

**முப்பொருள்**

| முதல் | கரு | உரி |
|---|---|---|
| நிலம் | பொழுது | சிறுபொழுது<br>பெரும் பொழுது |

காடும் காடுசார்ந்த இடமும்
மலையும் மலைசார்ந்த இடமும்.
வயலும் வயல்சார்ந்த இடமும்
மணலும் மணல்சார்ந்த இடமும்.

| சிறுபொழுது | பெரும்பொழுது |
|---|---|
| மாலை | கார்காலம் |
| யாமம் | கூதிர்காலம் |
| வைகறை | முன்பனிக்காலம் |
| விடியல் | பின்பனிக்காலம் |
| ஏற்பாடு | இளவேனில் |
| நண்பகல் | முதுவேனில் |

இவ்வாறு பகுத்த காலப்பாகுபாட்டை ஒவ்வோர் உணர்ச்சிக்கும் உரிப்பொருளுக்கும் பின்னணியாக அமைத்து முதற்பொருளாகக் கொண்டனர். இவை திணைக்குரிமையாவதை விளக்கும் இளம்பூரணர்,

'அஃதற்றதாக, இவ்வறுவகைப் பருவமும் அறுவகைப்பொழுதும் இவ்வைந்திணைக்கு உரியவாறு என்னையெனின், சிறப்பு நோக்கி என்க. என்னை சிறந்தவாறு எனின், முல்லையாகிய நிலனும், வேனிற் காலத்து வெப்பம் உழந்து மரனும்புதலும் கொடியும்

கவினழிந்து கிடந்தன. புயல்கள் முழங்கக் கவின் பெறும் ஆதலின், அதற்கு அது சிறந்ததாம். மாலைப் பொழுது இந்நிலத்திற்கு இன்றியமையாத முல்லை மலரும் காலம் ஆதலாலும், அந்நிலத்துக் கருப்பொரு ளாகிய ஆநிரை வருங்காலமாதலாலும், ஆண்டுத் தனியிருப்பார்க்கு இவை கண்டுழி வருத்தம் மிகுதலின் அதுவும் சிறந்தது ஆயிற்று. குறிஞ்சிக்குப் பெரும் பான்மையும் களவிற் புணர்ச்சி பொருளாதலின் அப்புணர்ச்சிக்குத் தனி இடம் வேண்டுமென்றே, அது கூதிர்காலத்துப் பகலும் இரவும் நுண்துளி சிதறி இயங்குவார் இலராம் ஆதலான் ஆண்டுத் தனிப்படல் எளிதாகலின், அதற்கு அது சிறந்தது. நடுநாள் யாமமும் அவ்வாறாகலின் அதுவும் சிறந்தது. மருதத்திற்கு நிலம் பழனஞ்சார்ந்த இடமாதலான், ஆண்டு உறைவான் மேன்மக்களாதலின் அவர் பரத்தையிற் பிரிவுழி அம்மனையகத்து உறைந்தமை பிறர் அறியாமை மறைத்தல் வேண்டி வைகறைக் கண் தம்மையகத்துப் பெயரும்வழி, ஆண்டு மனைவி, ஊடலுற்றுச் சார்கிலளாமாதலால், அவை அந்நிலத் திற்குச் சிறந்தன. நெய்தற்குப் பெரும்பான்மையும் இரக்கம் பொருளாதலின், தன்மையுற்று இரங்கு வார்க்குப் பகற்பொழுதினும் இராப்பொழுது மிகுமா தலின் அப்பொழுது வருதற்கேதுவாகிய ஏற்பாடு கண்டார். இனி வருவது மாலையென வருத்த முறுதலின், அதற்கு அது சிறந்தது என்க' (தொல். அகத் : 12 உரை) விளக்கியுள்ளது இங்குக் குறிக்கத் தக்கதாகும்.

மக்கள் தங்கள் வாழ்க்கையோடு நிலத்தையும் பொழுதையும் தொடர்புபடுத்தி வாழ்ந்தனர். நிலத்தின்

பெயரால் மக்கள் பெயர் அமைவதனால் நிலத்தை உயர்திணையாக்கிப் பேசுவதையும் காண்கிறோம். திருவள்ளுவர்,

**இலமென் றசைஇ யிருப்பாரைக் காணின்**
**நிலமென்னும் நல்லாள் நகும்**

**(திருக்குறள் : 1040)**

என்று கூறுகின்றார். நிலத்தை நன்மை பயக்கும் நல்லாளாகக் கண்டனர். ஏனெனில் தமிழகத்தில் நில நடுக்கமோ, எரிமலையோ தோன்றி மக்களைத் துன்புறுத்தவில்லை. நிலத்தால் ஏற்படும் துன்பம் இல்லையென்றே சொல்லலாம். மாறாக வாழ்க்கைக்கு வேண்டிய அனைத்தையும் தருவதாக நிலம் அமைந்திருத்தலின் அதைப் போற்றி வணங்கினர். பூமாதேவி வழிபாடு இதனையே குறிக்கின்றது.

# 3. முல்லைத்திணைப் பாடல்களில் கவிநயம்

## தோற்றுவாய்

கன்னலும் கைக்கும் இன்னமுதாய், கவிதை மிகும் கலை அழகாய், இன்னல் மடியும் இசை வடிவாய், பொங்கும் ஞானத் தேனைச் சிந்தும் மங்கா எழில் மலராய், இலங்கும் தமிழ்மொழியில் தோன்றிய இலக்கியங்கள் மிகப் பல. இவை அகம் புறம் என்ற இருபாகு பாட்டிற்குள் அடங்குவன. கைக்கிளை, குறிஞ்சி, முல்லை, மருதம, நெய்தல், பாலை, பெருந் திணை என்ற ஏழும் அகத்திணைகள். இவற்றிற்குப் புறனாக ஏழுபுறத்திணைகள் காணப்படுகின்றன. அகத்திணைகள் ஏழுனுள் நடுவனதாக அமைந்த ஐந்திணைஒழுக்கமே சிறந்ததாகப் போற்றப்படுகிறது. இவற்றில் ஐந்தில் ஒரு பகுதியாகத் துலங்கும் முல்லைத்திணையில் அமைந்த பாடல்கள் சிலவற்றில் கவிநயம ஆய்வதே இக்கட்டுரை.

## உவமைகள்

பொதுவாக இலக்கியங்களில் உவமைகள் கவிஞரின் கருத்து வெளிப்பாட்டிற்காகவும், கருத் திற்கு விரைந்த ஓட்டவும் தரவும், உணர்ச்சி வெளிப்

**அயில்நுனை மருப்பு —முல்லை**

**சீறரு முன்பினோன் கணிச்சிபோற் கோடுசீஇ**
**—முல்லைக்கலி 1.**

வென்றி முரசின் ஒலியும் மேகத்தின் இடி முழக்கமும் ஒன்றற்கொன்று உவமையாவதைக் கார் நாற்பதும், முல்லைக்கலியும் உணர்த்துகின்றன. கார் நாற்பதில் வானம் முழங்குகின்ற முழக்கத்திற்கு வெற்றி முரசின் முழக்கம் உவமையாகின்றது.

முல்லைக்கலியில் இசைக்கருவியின் எழுச்சிக்கு இடியுறழ் இசை உவமித்துரைக்கப்படுகிறது.

**இடியுறழ் இசையின் இயம் எழுந்தார்ப்ப**
**காரெதிர் கடியொலி கடிமிடி யுகுமின் இயங்கிறங்க**

கார்நாற்பதில் உவமையாக அமைவது முல்லைக்கலியில் பொருளாகவும், முல்லைக்கலியில் பொருளாக அமைவது கார்நாற்பதில் உவமையாகவும் அமைகின்றன.

## உவமையில் உணவுப் பொருள்

திணைக்கேற்ற வகையில் அவ்வத் திணையின் உணவுப் பொருள்களே உவமையாக அமையும் அமைப்பினை நற்றிணையிலும் முல்லைக்கலியிலும் காணலாம். நற்றிணையின் கான வாரணத்தில் தோற்றத்தினை விளக்கவரும் ஆசிரியர் நறுநெய்யில் பாலைச் சிதறியது போல் இருந்தது எனக் குறிக்கின்றார்.

**உருக்குறு நறுநெய் பால்விதிர்த் தன்ன**
**அரிக்குரல் மிடற்ற அந்நுண் பல்பொறிக்**
**காமரு தகைய கானவாரணம் —நற். 21**

தலைமகள்பால் தன் உள்ளத்தைச் செல்லவிட்ட முல்லைக்கலித் தலைமகன் தன் உயிரை அவள் வாங்கிக் கொண்டுவிட்ட நிலையையும் அவ்வாறு கொண்டதனால் அது பிற்காலத்தில் அவனுக்கு இன்பம் தருதல் ஆற்றாது என்றும் கூற வருபவன்,

**எவ்வம் மிகுதர எந்திறத் தெஞ்ஞான்றும்**
**நெய்கடை பாலின் பயன்யாதும் இன்றாகிக்**
**கைதோயன் மாத்திரை யல்லாது செய்தி**
**அறியாது அளித்தென் உயிர்**

எனக் கூறுகின்றான். நெய் பால் ஆகிய உணவுப் பொருள்கள் இவ்விரண்டு உவமைகளில் இடம் பெறுதலை இப்பகுதி அறிவித்து நிற்கின்றது.

## தோன்றிப்பூ மலர்தல்

தோன்றிப்பூ செந்நிறமாக மலர்தலை இருவேறு உவமைகளால் விளக்கி நிற்கின்றன கார்நாற்பதும் முல்லைப்பாட்டும். காயா மலர்கள் கறுப்பு நிறமாக மலர்ந்து நிற்றலை முல்லைப்பாட்டும் முல்லைக்கலியும் உணர்த்துகின்றன.

**தோடார் தோன்றிக் குருதி பூப்ப** —**முல்லை**

என முல்லைப்பாட்டும்,

**நலமிகு கார்த்திகை நாட்டவ ரிட்ட**
**தலைநாள் விளக்கின் தகையுடைய வாகிப்**
**பலமெலாம் பூத்தன தோன்றி** —**கார்**

எனக் கார்நாற்பதும் குறிக்கின்றன. காயாம்பூ மலர்தலை,

**செறியிலைக் காயா அஞ்சனம் மலர** —முல்லை

என முல்லைப்பாட்டும்,

**மணிபுரை யுழுவின காயா**

என முல்லைக்கலியும் குறிக்கின்றன. இவை நான்குமே வண்ணம் பற்றி எழுந்த உவமைகளாகும்.

## அடைவளம்

கவிஞனின் சொல்லாட்சித் திறமைக்கு முன்னோடிகளாகவும், அவனது மொழிப்புலமைக்குச் சான்று பகர்வனவாகவும், அவனது நுட்பமான நோக்கினை—சிந்தனைச் செறிவினைப் பறைசாற்றுவனவாகவும், அடைகள் அமைகின்றன. மேலும் கற்பார்க்குக் கவிதை இன்பம் நல்கவும், உணர்வினை மிகுவிக்கவும், சுருங்கச் சொல்லவும் விளங்க வைக்கவும் அடைகள் பயன்படுத்தப்படுகின்றன.

முல்லைத்திணைப் பாடல்களில் அமைந்த அடைகளை நோக்கும்போது அவை இயற்கைப் படப் பிடிப்பாகவும், கவிஞனின் கற்பனைத் திறனை வெளிப்படுத்துவனவாகவும், பண்பாட்டுச் செய்திகளை விளக்குவனவாகவும் அமைகின்றன. சில அடைகள் செயற்கை வெளிப்பாடுகளாகவும், மாதர் வருணனைகளாகவும் அமைகின்றன.

குறுந்தொகையில் ஒன்று முதல் மூன்றுவரை உள்ள அடை அமைப்புகள் உள்ளன. இவை பெரும்பாலும் இயற்கை வெளிப்பாடுகளாகவும், செயற்கை வெளிப்பாடுகளாகவும் அமைகின்றன.

புதுப்பூங்கொன்றை —21
கருங்கால் வேம்பு —21 } இயற்கை வெளிப்பாடு
வெண்கோட்டு அதவம் —24

பொன் செய் புனையிழை—21 செயற்கை வெளிப்பாடு

அகநானூற்றில் ஒரு சொல் அடைகளும் பல சொல் அடைகளும் காணப்படுகின்றன. பல சொல் அடைகளை நோக்கும்போது அகநானூற்றில் பதின் மூன்று சொல்லால் ஆகிய அடை காணப்படுகிறது.

**வேலி சுற்றிய வால்வீ முல்லைப்**
**பெருந்தார் கமழும் விருந்தொலி கதுப்பின்**
**இன்னனாக இளையோள்**

—அகம், 314

நற்றிணைப் பாடலில் ஒரு சொல் அடை, இரு சொல் அடை, பத்து சொல் அடை ஆகிய மூன்று அமைப்புகள் காணப்படுகின்றன.

**அரைச்செறி கச்சை** —நற். 21

**வேண்டமர் நடையர்** —நற். 21

**அரிக்குரல் மிடற்ற அந்நுண் பல்பொறிக்**
**காமரு தகைய கான வாரணம்**

—நற் 21

முல்லைப்பாட்டில் ஒருசொல் அடைகளும் காணப்படுகின்றன. பலசொல் அடைகளும் காணப்படுகின்றன. முல்லைப் பாட்டிலும் முல்லைக் கலியிலும் பல சொல்லால் ஆகிய அடைகளை நோக்கும்போது பத்தொன்பது சொற்களால் ஆகிய அடைகள் பல சொல் அடைகளுக்கு எல்லையாக அமைகின்றன.

**குறுந்தொடி முன்கைக் கூந்தலஞ் சிறுபுறத்து**
**இரவுபகற் செய்யும் திண்பிடி யொள்வாள்**
**விரவுவரிக் கச்சிற் பூண்ட மங்கையர்**

—*முல்லைப்பாட்டு*

**மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்**
**மெலிவொடு மேற்சென்று மேவார் நாடிடம்படப்**
**புலியொலி வில்நீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை**
**வலியினான் நீக்கிய வாடாச்சீர்த் தென்னவன்**

—*முல்லைக்கலி*, 104

கார்நாற்பதில் ஒன்று முதல் ஐந்து சொல் வரை ஆகிய அடைகள் காணப்படுகின்றன. ஒருசொல் அடைகள் எல்லாம பெரும்பாலும் இயற்கைப் படப் பிடிப்புகளாகக் காணப்படுகின்றன. சில செயற்கை வெளிப்பாடுகளாகவும், சில இயல்பு வெளிப்பாடுகளாக வும் அமைகின்றன. இருசொல் அடைகளும் இயற்கைப் படப்பிடிப்புகளாகவே அமைகின்றன. ஒன்று மட்டும் மாதரை வருணித்து நிற்கின்றது. மூன்று சொல் அடைகள் மாதர் வருணனையாகவே அமைகிறது. நான்கு சொல்லால் ஆகிய அடை ஒன்று மட்டுமே காணப்படுகிறது. அது செயற்கை வெளிப்பாடாக அமைகிறது. ஐந்து சொல்லால் ஆகிய அடை ஒன்று மடந்தை ஒருத்தியைச் சித்திரிக்கின்றது.

பொருகடல்
நுண்ணரும்பு
வரிவளை
ஆடு மகளிர்
} ஒரு சொல்

நறுந் தண்கார்
பெருங்கலி வானம்
ஏந்தெழில் அல்குல்
} இரு சொல்

வணர்ஒலி ஐம்பாலாய்—முச்சொல்
பொறிமாண் புனைதிண்டேர்—நாற்சொல்
நறுநுதற் செல்வமழை மதர்க்கட் சின்மொழிப்
பேதை
—ஐஞ்சொல்

பொதுவாக நோக்கும்போது முல்லைப்பாட்டு, முல்லைக்கலி, கார்நாற்பது இவற்றில் அடைகள் சிறந்து விளங்குகின்றன.

### சொல்லாட்சி

ஏற்ற சொல்லை ஏற்ற இடத்தில் பயன்படுத்தி இனியதொரு பொருளைப் பெறவைப்பதைச் 'சொல் லாட்சிச் சிறப்பு' என வழங்குவர் மேல்நாட்டார். ஒரு சில சொற்களின் மூலம் உயர்ந்த பொருளை வடித்துக் காட்டுகின்ற நிலையும் உண்டு. ஒரு தொடரின் மூலம் சிறந்த பொருளை வெளிப்படுத்துதலும் உண்டு. உலக வழக்குச் சொற்களை இலக்கிய வழக்கில் அமைத்து அதன் மூலம் தன் கருத்துக்களைப் பயன்படுத்துதலும் உண்டு. கவிஞனின் சிந்தனைச் செறிவினையும், கற்பனை வளத்தினையும், அவன் பயன்படுத்துகின்ற சொற்கள் அறிவித்து நிற்கின்றன. உணர்ச்சி வெளிப் பாடுகளை ஒரு சில சொற்களில் உணர்த்திவிடும் திறத்தில் சங்க இலக்கியங்கள் தலைசிறந்து நிற்கின்றன.

**கானம் காரெனக் கூறினும்**
**யானோ தேறேன் அவர் பொய் வழங்கலரே**

என்பதில் 'பொய் வழங்கலரே' என்ற ஒரு சொல்லின் மூலம் தலைமகன் பண்புகளையும், தலைமகள் பண்பு களையும் புலப்படுத்தி நிற்கின்றார் ஆசிரியர்.

இயற்கையே கார்காலத்தின் வரவைக் காட்டிய போதிலும் கார்காலத்திலும் வருவதாகக் கூறிச் சென்ற தலைமகன் வரவில்லை. ஆதலின் தான் அதனைக் கார்காலமாகக் கருதமாட்டேன் எனக் கூறுகின்றாள் தலைமகள். இதனால் தலைமகள் தலைமகன் மாட்டுக் கொண்ட அன்பினையும், தலைமகன் சொல்லில் அவள் கொண்ட உறுதிப்பாட்டினையும், தலைமகன் பொய் வழங்காதவன் என்ற அவன்தன் நம்பிக்கையும் புலனாகிறது. இந்த ஒருசொல்லின் வழி பல்வேறு கருத்துக்களைப் படைத்துக் காட்டும் ஆசிரியரின் திறம் அவர்தம் சொல்லாட்சிச் சிறப்பிற்குத் தக்கதோர் சான்றாகும்.

புலவர்தம் கவிதையில் அமைகின்ற உள்ளுறை யும் அவர்தம் சொல்லாட்சித் திறனைப் புலப்படுத்தி நிற்கும். இவ்வாறு நேரே கூற முடியாத பொருளை உள்ளுறையில் அமைத்துக் கூறும் திறத்தினை நற்றிணையில் காண்கின்றோம்.

.................. கானவாரணம்
பெயனீர் போகிய வியனெடும் புறவில்
புலரா ஈர்மணல் மலிரக் கெண்டி
நாளிரை கூற மாட்டித்தன்
பேடை நோக்கிய பெருந்தகு நிலையே

—நற். 21

என்பதே அப்பகுதி. தலைவன் தலைவியோடு கூடி யிருக்கும் நிலையை ஆவலோடு எதிர்பார்க்கும் நிலையை இதன்வழி வெளிப்படுத்துகின்றார் ஆசிரியர். அகநானூற்றில்,

கடவுள் கற்பின் மடவோள்

என்ற சொற்களின்வழி தலைமகள் தெய்வம் தொழாள் கொழுநன் தொழுதெழும் தகைமையுடைய தெய்வக் கற்பினள் என்று அவளின் குணச்சிறப்பை வெளிப்படுத்துகின்றனர். அன்புடைக் கணவன் அழி தகச் செய்யினும் பெண் பிறந்தார்க்குப் பொறையே பெருமை என்பதைத் தம் பெண்மைக்கு இலக்கணமாக வகுத்துக் கொண்ட தெய்வக் கற்பினள் என்பதை 'கடவுள் கற்பின்' என்பதனால் பெற வைக்கின்றார். கார் நாற்பதில் தோழி கூற்றாக அமையும்,

வாரார் கொல்

என்ற ஒரு சொல்லின் மூலம் தலைமகன் வரவில் தோழி கொண்ட உறுதி, நம்பிக்கை, தலைவியை ஆற்ற நினைக்கும் தோழியின் உள்ளம், தோழியின் சொல் வன்மை, தோழியின் வாதத் திறம், தலைமகன் மாட்டுத் தலைமகள் கொண்ட கோபத்தைத் தணி விக்க முயலும் தோழியின் முயற்சி, தலைமகள் ஊடல் காரணமற்று எனக் கூறும் தோழியின் குரல் ஆகிய அனைத்தையும் பெற வைக்கின்றார் ஆசிரியர். முல்லைப்பாட்டில்,

இன்பல் இமிழிசை ஓர்ப்பனள் கிடந்தோள்

என்பதன் மூலம் கார்காலத்தையும், தலைமகன் வாராமையினால் தலைமகள் நள்ளென் யாமத்திலும் தமியளாய்த் துஞ்சாமையையும் உணர்த்துகின்றார். 'இன்பல் இமிழிசை' என்றதனால் மழை பெய்யும் ஓசையைப் புலப்படுத்துகின்றார். முல்லைக்கலியில்,

மீன்பூத் தவிர்வரும் அந்திவான் விசும்பு

என்ற பகுதியின் மூலம் விசும்பின் அழகிய காட்சியை விரிக்கின்றார். வானத்தின் விண்மீன்கள் நிறைந்து விளங்குகின்றன. அந்தியிலை நேரம். வானத்தை நோக்கிய புலவர்க்குப் பூக்கள் பூத்துக் குலுங்குகின்ற காட்சி தோன்றிவிட்டது போலும். எனவேதான் 'மீன்பூத்தவிர் வரும்' என்ற அழகிய சொல்லாட்சியின் மூலம் விண்மீன்களைப் படம் பிடிக்கின்றார்.

இவ்வாறாக முல்லைத்திணைப் பாடல்களில் பல அரிய சொல்லாட்சிகள் அமைந்து காணப்படுகின்றன.

**வடிவம்**

இலக்கியத்தின் இன்றியமையாத கூறுகளில் வடிவம் ஒன்று. கவிதைக்குரிய வடிவமாக யாப்பு அமைப்பே கருதப்படுகிறது. தொல்காப்பியர் அகப் பாடல் கலிப்பா, பரிபாடல் என்ற இருவகைப் பாக்களால் மட்டுமே அமையும் எனக் கூறுகின்றார். தொல்காப்பியர் கூறும் இலக்கிய வடிவம் முல்லைக் கலியில் மட்டுமே அமைகிறது. அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை, முல்லைப்பாட்டு இவை நான்கும் ஆசிரியப்பாவில் அமைந்துள்ளன. கார் நாற்பது ஒன்று மட்டும் வெண்பாவில் அமைந்துள்ளது.

வண்டுபடத் ததைந்த கொடியினர் இடையிருபு
பொன்செய் புனையுழை கட்டிய மகளிர்
கதுப்பிற் தோன்றும் புதுப்பூங் கொன்றை
கானம் காரெனக் கூறினும்
யானோ தேறேன் அவர்பொய் வழங்கலரே

என்ற குறுந்தொகைப் பாடல் தலைமகளின் நினைவலைகளுக்கு ஏற்ற வடிவம் கொள்வதைக் காணுகின்றோம்.

**எல்லா வினையும் கிடப்ப எழுநெஞ்சே**
**கல்லோங்கு கானம் களிற்றின் மதநாறும்**
**பன்னிருங் கூந்தல் பணிநோனாள் கார்வானம்**
**மெல்லவுந் தோன்றும் பெயல்**

என்ற பாடலில் தலைமகனின் உணர்ச்சிச் சிறப்பிற் கேற்ப — வெண்பாவிலும் அகப்பொருளைப் பாட முடியும் என்பதற்குக் காட்டாக அமைகின்றது.

**எழுந்தது துகள்**
**ஏற்றனர் மார்பு**
**கவிந்தன மருப்பு**
**கலங்கினர் பலர்** —முல்லைக்கலி

இது ஓசைச் சிறப்பாலும், பொருட்சிறப்பாலும் சிறந்த இலக்கிய வடிவத்தைப் பெற்றுத் திகழ்கின்றது.

இவ்வாறே மற்ற முல்லைத்திணைப் பாடல்களும் வடிவத்தால் சிறந்து விளங்குகின்றன.

**உத்திகள்**

எல்லா முல்லைத்திணைப் பாடல்களிலும் தம் கருத்துகளை வெளிப்படுத்த உவமைகள் கையாளப் படுகின்றன. புராணச் செய்திகளை உமவையாக்கி உரைக்கும் போக்கு முல்லைக்கலியில் இடம் பெறுகிறது.

**வானுற ஓங்கிய வயங்கொளிர் பனைக்கொடி**
**பானிற வண்ணன்போற் பழிதீர்ந்த வெள்ளை**

**பொருமுரண் மேம்பட்ட பொலம்புனை புகழ்நேமித்**
**திருமறு மார்பன்போற் திறல்சான்ற காடு**

**மிக்கொளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதல்**
**முக்கண்ணான் உருருவ போல் முரண்மிகு குரா அல்.**

பண்பாட்டுச் செய்திகளை உவமையாக்கும் போக்கு கார்நாற்பதில் காணப்படுகிறது. சமுதாய ஏற்றத் தாழ்வினைத் துணிந்து உரைக்கும் திறத்தினையும் கார்நாற்பதில் காணமுடிகிறது. இயற்கையே உவமை யாக அமைகின்ற பாங்கினை அகநானூறு, குறுந் தொகை, முல்லைப்பாட்டு, முல்லைக்கலி இவை சித்திரிக்கின்றன. நற்றிணையில் கருத்து வெளிப் பாட்டிற்கு உள்ளுறையும் ஒரு உத்தியாகக் கையாளப் படுகிறது. மெய்ப்பாடுகளை வெளிப்படுத்துகின்ற நிலையிலும் உவமை அமைகிறது. வருணனைத் திறத்தை வெளிப்படுத்த புலவர்கள் அடைகளைப் பயன்படுத்துகின்றனர்.

## கற்பனை வளம்

கவிதையின் கூறுகளுள் இன்றியமையாதன வாகத் துலங்குவனவற்றுள் கற்பனையும் ஒன்று. கவிஞன் கண்ட உலகினைச் சுவைஞன் காண வாயிலாக அமைவது கற்பனை. இக்கற்பனை உள்ளதை உள்ளவாறே படைத்துக் காட்டும் நிலை, உள்ளதை உணர்ந்தவாறு படைத்துக் காட்டும் நிலை என இருநிலைகளில் அமைகின்றது. இங்கு ஆய்விற்கு எடுத்துக் கொண்ட முல்லைத்திணைப் பாடல்களில் இரண்டு நிலையும் காணப்படுகிறது.

முல்லைப்பாட்டில் கார்கால மழையினால் காட்டு வழி சிறப்புற்ற நிலையைக் காட்ட வரும் நப்பூதனார்

இங்குள்ள எல்லாப் பொருள்களையும் விளக்கிக் கூறவில்லை. சிலவற்றை மட்டுமே விரித்துரைக்கின்றார்.

**செறியிலைக் காயா அஞ்சனம் மலர**
**முறியிணர்க் கொன்றை நன்பொன் காலக்**
**கோடற் குவிமுகை யங்கை யவிழத்**
**தோடார் தோன்றிக் குருதி பூப்பக்**
**கானம் நந்திய செந்நிலப் பெருவழி**

என்ற முல்லைப்பாட்டுப் பகுதி உள்ளதை உள்ளவாறே உரைக்கும் கற்பனைத் திறத்திற்குச் சான்றாகும்.

**செய்து விட்டன்ன செந்நிலம்**
**நீலத்தன்ன நீர்ப்பொதி கருவின் மாவிசும்பு**
**பறைக்கண் அன்ன நிறைச்சுனை**

என்ற அகநானூற்றுப் பகுதியும்,

**கருவிளை கண்மலர்போல் பூத்தன**
**கண்ணியல் அஞ்சனந் தோய்ந்தபோற்காயா**

என்ற கார்நாற்பதுப் பகுதியும்,

**மணிபுரை உருவின காயா**
**மாமருண் டன்ன கண்**

என்ற முல்லைக்கலியும் உள்ளதை உள்ளவாறே படைத்துக் காட்டும் கற்பனைத் திறத்திற்கும் காட்டுகளாகும். குறுந்தொகையிலும் நற்றிணையிலும் இத்தகைய கற்பனையைக் காண முடிவதில்லை.

## கற்பனை வகைகள்

கற்பனையின் வகைகளுள் குறிப்பிடத் தக்கனவாக அமைவன படைப்புக் கற்பனை, இயைபுக் கற்பனை, கருத்து விளக்கக் கற்பனை என்பன. முல்லைத் திணைப் பாடல்களில் இம்மூன்று கற்பனைகளும் விளங்குமாற்றை இனிக் காண்போம்.

## படைப்புக் கற்பனை

கவிஞன் ஒருவன் தன்னுடைய அனுபவத்தில் கண்ட பண்புகளை எத்தகைய கட்டுப்பாடும் இல்லாமல் தானே தேர்ந்தெடுத்து அவற்றை ஒன்றாக இணைத்துப் படைத்துக் காட்டுந் திறனே படைப்புக் கற்பனையாகும். பொதுவாக இப்படைப்புக் கற்பனையை எல்லா இலக்கியங்களிலும் காண முடிகிறது.

கல்லோங்கு கானம் களிற்றின் மதம் நாறுகின்றது. இமிழிசை வானம் முழங்குகின்றது. விரிதிரை வெள்ளம் வெறுப்பப் பருகி பெருவிறல் வானம் பெருவரை சேருகின்றது. இந்த நிலையில் தோன்றிப் பூக்கள் மலர்கின்றன. அவை மலர்ந்த காட்சியை,

> **நலமிகு கார்த்திகை நாட்டவ ரிட்ட**
> **தலைநாள் விளக்கின் தகையுடைய வாகிப்**
> **புலமெலாம் பூத்தன தோன்றி**

என்று கூறுகின்றார். இங்கு தோன்றிப் பூக்கள் மலர்ந்தமைக்குக் கார்த்திகை தீபத்தை உவமித்துரைப்பது ஆசிரியரின் படைப்புக் கற்பனைக்குத் தக்கதோர் சான்றாகும். இதே தோன்றிப் பூ ஆசிரியர் நப்பூதனார்க்குக் குருதி போல் தோன்றுகிறது.

**தோடார் தோன்றி குருதி பூப்ப**

என்பது நப்பூதனாரின் கற்பனை.

ஒக்கூர் மாசாத்தியார் காட்டு வழியாக நடந்து செல்கின்றார். அங்கு அவர் பைம்பயிர் நிரம்பிய புறவினைக் காண்கின்றார். உடனே அவருக்குத் தாம் முன்பு எங்கோ கண்ட கிள்ளையின் இளங் குஞ்சினது தூவி நினைவிற்கு வருகின்றது. இரண்டையும் இணைத்துப் புதியதொரு கற்பனை யைப் படைத்துக் காட்டுகின்றார்.

**தளரியற் கிள்ளை இனிதின் எடுத்த**
**வளராப் பிள்ளைத் தூவியன்ன**
**வார்பெயல் வளர்த்த பைம்பயிர்ப் புறவு**

என்பது அப்பகுதி.

கான வாரணத்தின் தோற்றம் நற்றிணை ஆசிரியர்க்கு நறுநெய்யில் பால் விதிர்த்தாற் போன்று தோற்றமளிக்கின்றமையை,

**உருக்குறு நறுநெய் பால்விதிர்த்தன்ன**
**அரிக்குரல் மிடற்ற அந்நுண் பல்பொறிக்**
**காமரு தகைய கானவாரணம்**

என்ற நற்றிணைப் பகுதியால் தெளியலாம்.

முல்லைக்கலியில் புள்ளிகளையுடைய காளை யைக் காண்கின்றார் ஆசிரியர். உடனே அவருக்கு விண் மீன்களை உடைய வானம் கண்முன் காட்சியளிக்கின்றது. இரண்டையும் இணைத்துப் பார்க்கின்றார். உடனே,

**மீன்பூத் தவிர்வரும் அந்திவான் விசும்புபோல்**
**வான்பொறி பரந்த புள்ளி வெள்ளையும்**

என்ற கற்பனை மலர்கிறது.

கார்நாற்பதின் ஆசிரியர் மஞ்ஞையை மகளிராகக் கற்பனை செய்கின்றார். குறுந்தொகை ஆசிரியர்க்கோ கொன்றை மரங்கள் நிறைந்து விளங்கும் கானம் மகளிராகத் தோன்றுகிறது.

**வண்டுபடத் ததைந்த கொடியிணர் இடையிருபு**
**பொன்செய் புனையிழை கட்டிய மகளிர்**
**கதுப்பிற் றோன்றும் புதுப்பூங் கொன்றை**
**கானம்.**

—*குறுந்*. 21

## இயைபுக் கற்பனை

கருத்து வகையிலோ, காட்சி வகையிலோ ஒரு நிகராகத் தான் கண்டவற்றை இணைத்துக் காட்டுவது இயைபுக் கற்பனையாம். முல்லைப்பாட்டு கார்நாற்பது, முல்லைக்கலி ஆகிய இலக்கியங்களில் இவ்வகைக் கற்பனையை மிகுதியாகக் காண முடிகிறது. குறுந் தொகையிலும் நற்றிணையிலும் இவ்வகைக் கற்பனை யைக் காண முடிவதில்லை.

முல்லைக் கலியில் காளையின் வலிமையை மாவின் வலிமைக்கு இயைபுபடுத்தி உரைக்கப் படுகிறது.

**பொருமுரண் வேம்பட்ட பொலம்புனை புகழ்நேமித்**
**திருமறு மார்பன்போல் திறல்சான்ற காரி.**

முல்லைப்பாட்டு ஆசிரியர் நப்பூதனார்க்குக் கொண்பூவின் வண்ணம் திருமாலின் வண்ணமாகக் காட்சி அளிக்கின்றது.

**நனந்தலை யுலகம் வளைஇ நேமியொடு**
**வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை**
**நீர்செல நிமிர்ந்த மாஅல் போலப்**
**பாடிமிழ் பனிக்கடல் பருகி வலனேர்பு**
**கோடுகொண் டெழுந்த கொடுஞ்செல வெழிலி.**

கார் நாற்பதில் வானவில்லின் தோற்றம் திருமால் மார்பில் புனையப்பட்ட தாராகக் கற்பனை செய்யப் படுகிறது.

**பொருகடல் வண்ணன் புனைமார்பில் தார்போல்**
**திருவில் விலங்கூன்றித் தீம்பெயல் தாழ.**

**கருத்து விளக்கக் கற்பனை**

இயற்கையாக நடக்கும் ஒன்றினிடத்துப் புலவர் தாம் நினைத்த கருத்து ஒன்றை ஏற்றி வைத்துக் கற்பனை செய்து பாடுவது கருத்து விளக்கக் கற்பனை யாகும். காடுகள் வாடியிருத்தலும், பின்னர் கார் காலத்தில் மலர்ந்து நிற்றலும் இயற்கையாக நிகழ் கின்ற ஒன்று. காடுகள் வாடியிருத்தலை நல்கூர்ந்தார் மேனி வாடியிருத்தலுக்கும், மலர்ந்து நிற்றலைச் செல்வர் உள்ளத்திற்கும் இணைத்துக் கற்பனை செய் கின்றார் கார் நாற்பது ஆசிரியர்.

**செல்வர் மனம்போற் கவினீன்ற நல்கூர்ந்தார்**
**மேனிபோற் புல்லென்ற காடு.**

அக்காலத்தில் சமுதாயத்தில் இருந்த பொருளாதார ஏற்றத் தாழ்வை உணர்த்த நினைத்த கவிஞர் அதனையே கற்பனையாக்கி உரைக்கும் திறம் போற்றற்குரியது. இக்கருத்துவிளக்கக் கற்பனையை கார் நாற்பதில் மட்டுமே காண முடிகிறது. மற்ற இலக்கியங்களில் இவ்வகைக் கற்பனையைக் காண முடிவதில்லை.

## மெய்ப்பாடுகள்

தொல்காப்பியர் உணர்த்தும் மெய்ப்பாடுகள் சில இம்முல்லைத் திணைப் பாடல்களில் அமைந்து கவிநயத்தை மிகுவிக்கின்றன.

**புலனணி கொண்ட காரெதிர் காலை**
**ஏந்துகோட் டியானை வேந்தன் பாசறை**
**வினையொடு வேறுபுலத் தல்கி நன்றும்**
**அறவ ரல்லர் நம்அருளா தோரென**
**நந்நோய் தன்வயின் அறியாள்**
**எந்நொந்து புலக்குங்கொல் மாஅ யோளே**

**—அகம். 304**

என்று தலைமகன் தலைமகளுக்காக வருந்துவது வருத்தம் காரணமாக வந்த அவலமாகும். இதனால் அவனும் அவளும் ஒருவருக்காக ஒருவர் வாழுகின்ற நிலையை அறிய முடிகிறது.

**செய்வினை அழிந்த மையல் நெஞ்சில்**
**துனிகொள் பவேரல் தீர வந்தோய்**
**இனிதுசெய் தனையால் வாழ்கநின் கண்ணி**

**—அகம். 314**

என்ற தோழி கூற்று தலைமகள் வரவினால் கொண்ட மகிழ்ச்சியை விரிப்பதாக அமைகின்றது. இது உவகை பற்றி எழுந்த உவமையாகும்.

**கருங்கால் வேம்பின் ஒண்பூ யாணர்**
**என்னை யின்றியுங் கழிவது கொல்லோ**
**ஆற்றயல் எழுந்த வெண்கோட் டதவத்து**
**எழுகுன்று மிதித்த ஒருபழம் போலக்**
**குழையக் கொடியோர் நாவே**
**காதலர் அகலக் கல்லென் றவ்வே**

**—குறுந்.** 24

என்ற தலைவி கூற்று வருத்தம் பற்றி வந்த அவலத்திற்குச் சான்றாகும். குறித்த காலத்தில் தலைவன் வராமையால் ஆற்றாமை மிக்க தலைவியின் வருத்தம் இப்பாடலில் நன்கு புலப்படுத்தப்படுகிறது.

**இன்றுயில் வதியுநற் காணாள் துயருழந்து**
**நெஞ்சாற்றுப் படுத்த நிறைதபு புலம்பொடு**
**நீடுநனைந் தேற்றியும் ஓடுவளை திருத்தியும்**
**மையல் கொண்டு மொய்யென வுயிர்த்தும்**
**எவுறு மஞ்ஞையின் நடுங்கி யிழைநெகிழ்ந்து.**

மாத்திரளருவியின் இன்பல் இமிழிசையை ஓர்ப்பனளாகக் கிடக்கும் தலைமகளின் நிலையை அவள்?தன் ஆருயிர்த் தலைவனைப் பிரிந்ததால் ஏற்பட்ட வருத்தத்தைத் தெற்றென விளக்குகின்றன.

**சென்றநங் காதலர் சேணிகந்தாரென்று**
**ஒன்றிய நோயோ டிடும்பை பலகூர**
**வென்றி முரசி னிரங்கி யெழில்வானம்**
**நின்று மிரங்கு மிவட்கு**

எனத் தோழி தலைமகளுக்காக இரங்குவது வருத்தம் பற்றி எழுந்த அவலமாகும்.

இவ்வாறாக இம்முல்லைத் திணைப் பாடல்கள் பலவும் அவல உணர்ச்சியின் வெளிப்பாடுகளாகத் திகழ்கின்றன.

## தனிச் சிறப்புகள்

பொதுவாக ஒரு சில கூறுகளில் இம்முல்லைத் திணைப் பாடல்கள் ஒப்பிடத்தக்கனவாக இருந்தபோதிலும் ஒவ்வோர் இலக்கியமும் பல தனிச்சிறப்புகளைக் கொண்டு திகழ்கின்றன.

கார்நாற்பது முழுக்க முழுக்க கார்காலச் சிறப்பையும், கார்காலத்தில் தலைமகள் நிலையையும், பாசறையில் தலைமகன் நிலையையும், தலைமகனை நினைந்து வாழும் தலைமகளைத் தேற்றும் தோழியின் நிலையையும் விளக்குகின்றன. தோழி கூற்று, தலைமகன் தன்னெஞ்சிற்குக் கூறுவது, தேர்பாகற்குக் கூறுவது என இரு கூற்றுவகை காணப்படுகிறது. இவை சிறந்த நாடக நலம் பெற்றவையாகும்.

முல்லைக்கலி முழுக்க முழுக்க ஆயர் வாழ்க்கையின் படப்பிடிப்பாகக் காட்சியளிக்கின்றது. பாரதக் குறிப்புகளையும் புராணச் செய்திகளையும் தந்து நிற்பது முல்லைக்கலியின் சிறப்பாகும். பாண்டியனின் குடியோடு ஒப்ப வைத்து நோக்கத்தக்கது ஆயர்குடி என அதன் ஆயர்குடியின் மேன்மையைச் சிறப்பித்து உரைப்பது இதன் தனிச்சிறப்பு சங்க இலக்கியங்களில் காணப்படாத பல கடவுளர் முல்லைக் கலியில் காணப் படுகின்றனர். பிற இலக்கியங்களைப் போன்று இது தலைவன் தலைவி இருவரின் இருத்தலைப் பற்றிக் கூறவில்லை.

முல்லைப் பாட்டு முழுவதும் முல்லைத்திணையின் சிறப்புப் பற்றி அமைவதாகும். இது முல்லைத்திணை இலக்கணத்திற்கு இலக்கியமாகத் திகழ்கிறது. அகம் புறம் இரண்டு நிலைகளும் இப்பாட்டில் அமைந்து கிடக்கின்றன. புறச்செய்திகள் இடம் பெற்ற போதிலும் அகச்சுவை குன்றாமல் வடித்திருப்பது இதன் தனிச்சிறப்பாகும்.

குறுந்தொகைப் பாடல் இரண்டுமே தலைவி கூற்றாகவே அமைகிறது. பருவங் கண்டு ஆற்றாளாய கிழத்தி உரைக்கின்ற நிலையில் இவை அமைகின்றன. அகநானூற்றுப் பாடல்களும் கூற்று வகைகளாகவே காணப்படுகின்றன. எனவே இவை சிறந்த நாடக நலம்பெற்றுத் திகழ்கின்றன. நற்றிணையின் ஒரு பாடலும் தலைமகன் பாகற்குக் கூறிய நிலையில் அமைகிறது.

## இறுவாய்

இவ்வாறாக முல்லைத்திணைப் பாடல்களில் அமைந்த உவமைகள், அடைகள், சொல்லாட்சி உத்திகள், கற்பனை, மெய்ப்பாடுகள் ஆகியன அப்பாடல்களின் கவிநயம் பெருகுவதற்குக் காரணமாக அமைகின்றன. மொத்தமாக நோக்கும்போது கார் நாற்பதுப் பகுதிகளே பிற இலக்கியப் பகுதிகளுடன் ஒப்ப வைத்து நோக்கத்தக்க அளவில் விளங்குகின்றன.

'வஞ்சி தானே முல்லையது புறனே'

என்பது தொல்காப்பிய நூற்பா.

முல்லைப்பாட்டின் இடையிடையே வஞ்சி என்னும் புறத்திணை ஒழுக்கம் பற்றிய செய்திகள்

அளவுற அமைந்து முல்லைப் பாட்டின் இலக்கிய அழகை—கவிதைச் சுவையை மிகுதிப்படுத்துகின்றன. நூற்று மூன்று அடிகள் கொண்டு மிகச் சிறிய அளவில் இப்பாட்டு அமைந்து இருந்தாலும் முல்லைத் திணையின் முழு அழகினை முல்லைப் பாட்டு விளக்கி நிற்கின்றது. முல்லைப் பாட்டின் தொடக்கமே,

**'நனந்தலை உலகம்'**

என்று தொடங்குகின்றது.

முகில்கள் சூல்கொண்டு கருநிறம் பெற்றுக் கடலுக்குள் சென்று நீரை முகந்து வலப்பக்கமாகச் சுழித்து எழுந்து வான் முகட்டுக்குச் செல்லும் பொழுது மலையால் தடுக்கப்பட்டு மழையாகப் பொழிகின்றன. அந்தக் காட்சி, மாவலிச் சக்கரவர்த்தி வாமனனாக வந்த திருமாலின் திருக்கையில் அர்க்கிய நீரினைத் தாரை வார்த்துத் தர பேருருக் கொண்டு பிறங்கிய காட்சியினை ஒத்து இருந்தது என்று மதுரைப் பொன்வாணிகனார் மகனார் நப்பூதனார் குறிப் பிட்டுள்ளார். மேலும் முல்லைத்திணையின் தெய்வத் தைத்தொடக்கத்தில் குறிப்பிட்ட நப்பூதனார் முல்லைத் திணை ஒழுக்கத்தை மேற்கொண்டிருக்கும் ஆய மகளிர் வாழ்க்கையினைத் தெள்ளிதின் புலப்படுத்தி யிருக்கக் காணலாம்.

காலையில் மேய்ச்சல் புலத்திற்குப் பசு மந்தைகள் சென்றிருக்க, தம் தாயாரின் பிரிவாலும் தாய்ப்பால் உண்ணாமையினாலும் கலங்கி நிற்கும் கன்றுகள் வருத்தம் நீங்கும் பொருட்டு, ஆயமகள் குளிரால் நடுங்கித் தன் இருகைகளையும் தோள்களைத் தொடும் வண்ணம் குறுக்காக வைத்துக் கொண்டு,

"கன்றுகளே! உங்கள் தாயர் பசும் புல்லை நிரம்ப உண்டு மடி நிறைந்த பாலுடன் மாலைக் காலத்தே ஆயர்கள் கோல் கொண்டு ஒச்சி வீட்டிற்குத் திருப்பிக் கொண்டு வருவர்; எனவே நீங்கள் துன்பம் ஒழிவீர்களாக"

என்று வருந்தும் கன்றுகளுக்கு ஆறுதல் கூறினாள்.

முல்லைப்பாட்டில் மன்னனுடைய பாடி வீடு அமைந்திருக்கும் நிலை சிறப்பாகக் காட்டப்பட்டிருக்கின்றது. ஆற்றங்கரை ஓரத்தில் புதர்களை அழித்து அமைக்கப்பட்டிருந்த அழகான பாடிவீட்டில் மன்னன் தங்கி இருப்பதும், வாயால் உரைக்காமல் தாம் கூற தந்த கருத்துகளை உடம்பின் சைகைகளால் புலப் படுத்தும் மிலேச்சர்கள் புடை சூழ நிற்கின்றனர்.

ஐங்குறுநூற்றின் முல்லைத்திணைப் பாடல் களும், கார் நாற்பதுப் பாடல்களும் முல்லைத்திணை யினை விதந்து கூறி, கவிச் சுவையினைக் கவின் பெறப் புலப்படுத்தி நிற்பதனைக் காணலாம். சுருங்கச் சொன்னால் முல்லைத்திணைப் பாடல்கள் கவிநலம் கவின் பெற அமைந்திருப்ப தனைப் பல்லாற்றானும் பாங்குறக் கண்டு தெளியலாம்.

# 4. முல்லைப் பாட்டு—ஒரு திறனாய்வு நோக்கு

**தோற்றுவாய்**

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியனார் தம் தொல்காப்பியத்தில் அகத்திணையியலில் அகப் பொருட்குரிய திணைகளை,

> **கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்**
> **முற்படக் கிளந்த எழுதிணை என்ப[1]**

என ஏழு திணைகளைக் கூறுகின்றார். கைக்கிளை, குறிஞ்சி, முல்லை, மருதம்,நெய்தல், பாலை எனும் ஏழு திணைகளுக்கும் புறனான பாடாண், வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி என்ற புறத் திணைகள் ஏழனைப் பிற்படப் புறத்திணை இயலில் கூறுகின்றார்.

> **பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே[2]**
> **வெட்சி தானே குறிஞ்சியது புறனே[3]**
> **வஞ்சி தானே முல்லையது புறனே[4]**
> **உழிஞை தானே மருதத்துப் புறனே[5]**
> **வாகை தானே பாலையது புறனே[6]**
> **காஞ்சி தானே பெருந்திணைப் புறனே[7]**

இத்தொல்காப்பிய நூற்பாக்கள் ஏழனுள் 'வஞ்சி தானே முல்லையது புறனே' என்ற இலக்கணத்திற்கு இலக்கியமாக முல்லைப் பாட்டு அமைந்த திறத்தைக் காண்போம்.

## முல்லையும் வஞ்சியும்

முல்லை என்ற அக ஒழுக்கத்திற்கு இயைந்த புற ஒழுக்கமாக வஞ்சி ஒழுக்கம் திகழ்கிறது. வஞ்சி எனப் பட்டதற்குக் காரணம் கூற வரும் இளம்பூரணர் 'காடுறை உலகமாகிய முல்லைப் புறம் மண் நசை வேட்கையால் எடுத்துச் செலவு புரிந்த வேந்தன்மேல் அடல் குறித்துச் செலவு புரிதலான் அவ்விருபெரு வேந் தரும் வினையாகிய செலவு புரிதலின் அதுவஞ்சி என குறிபெற்றது' எனக் கூறுகின்றார். இவற்றின் இயைபு பற்றிக் குறிக்கின்ற நிலையில், "மாயோன் காடுறை உலகமும் கார்காலமும், முல்லைக்கு முதற்பொரு ளாதலானும் பகையிற் சேறவாய வஞ்சிக்கு நிழலும் நீருமுள்ள காலம் வேண்டுமாதலானும், பருமரக் காடாகிய மலை சார்ந்த இடம் அகாமையானும் அதற்கு இது சிறந்ததென்க" எனக் குறிக்கின்றார்.[9]

தலைவி தலைவனைப் பிரிந்து காட்டின் நடுவே அமைந்த தன் மலைக்கண் இருப்பது போலத் தலை வனும் தலைவியைப் பிரிந்து பகைவர் நாட்டிற்கு அரணான காட்டின்கண் அமைந்த மாடி வீட்டில் தங்கி இருப்பான். ஆதலால் முல்லையும் வஞ்சியும் தம்முள் இயைந்து காணப்படுகின்றது. இனி முல்லைப் பாட்டில் வஞ்சித் திணை ஒழுக்கம் இயைந்து நிற்றலைக் காண்போம்.

## முல்லையில் வஞ்சி

'வஞ்சிதானே முல்லையது புறனே' என்ற தொல்காப்பிய நூற்பாவிற்கு ஏற்றபடி முல்லை என்னும் அகத்திணைக்கு இயைந்த புறத்திணை ஒழுக்கமான வஞ்சி முல்லைப்பாட்டின் இடையில் அமைவுறப் பொருந்தி வருகிறது. தலைவியின் இருப்பினையும், கார்காலத்தில் வருவதாகக் கூறிச் சென்ற தலைமகனின் தேர் காணாமல் வருந்துகின்ற பிரிவுத் துயரினையும், திறம்படக் கூறி, தலைமகன் தங்கியிருக்கும் பாசறையின் அமைப்பினையும் அங்கு நிகழும் செயல்களையும் பொருத்தமுற விளக்குகின்றார் நப்பூதனார். முதல் 28 அடிகளில் முல்லைத்திணை ஒழுக்கத்தினையும், 24-வது அடி முதல் 80 வரை உள்ள அடிகளில் வஞ்சித்திணை ஒழுக்கத்தையும், மீண்டும் 80 முதல் 103 வரை உள்ள அடிகளில் தலைமகள் இல்லிருத்தலையும், கார்காலச் சிறப்பையும், தலைமகன் திரும்பி வருகின்ற செய்தியையும் அமைக்கின்றார் ஆசிரியர் நப்பூதனார்.

## நினைந்து அவள் புலம்பல்

'வினையையே உயிராகக் கொண்ட தலைமகன்,'[10] கருங்கடல் மேய்ந்த கமஞ்சூல் எழிலி இருங்கல் இறுவிரை ஏறி யுயிர்க்கும் பெரும்பதக் காலையில் திரும்பி வருவதாகக் கூறிச் செல்கின்றான். அவன் கூற்றில் நம்பிக்கை வைத்து அவளும் அவன் பிரிவை ஆற்றியிருக்கின்றாள். இமிழிசை வானம் முழங்குகின்றது. கல்லோங்கு கானம் களிற்றின் மதம் நாறுகிறது. முல்லை மலர்கள் செவ்வியுடையனவா

கின்றன. கார்கண்ட தலைமகள் தலைமகனின் தேர் காணாமல் வருந்துகின்றாள். இவ்வாறு தலைமகள் வருந்துகின்ற வருத்தத்தைக் கண்ட பெருமுது பெண்டிர்,

**நனந்தலை யுலகம் வளைஇ நேமியொடு**
**வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை**
**நீர்செல நிமிர்ந்த மாஅல் போலப்**
**பாமிமிழ் பனிக்கடல் பருகி வலனேர்பு**
**கோடுகொண் டெழுந்த கொடுஞ்செல வெழிலி**
**பெரும்பெயல் பொழிந்த சிறுபுன்மாலை**[11]

காலத்தில் அருங்கடி மூதூர் மருங்கிற் சென்ற யாழிசை இனவண்டு ஆர்ப்ப, நெல்லொடு நாழி கொண்ட நறுவீ முல்லை, அரும்பவிழ் அலரி முதலியவற்றைத் தூவிக் கைதொழுது விரிச்சி கேட்கும் பொருட்டு நிற்கின்றனர். இந்நிலையில் முல்லைநிலப் பெண் ஒருத்தி, பால் உண்ணாமை காரணமாகக் கலங்கித் துன்புறுகின்ற இனிய பசுங்கன்றை நோக்கி ''உங்கள் தாயர் இடையர்கள் பின்னே இருந்து செலுத்த இப்பொழுதே வந்து விடுவர்'' எனக் கூறுகின்றார்.

**சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்**
**உறுதுறார் அலமரல் நோக்கி ஆய்மகள்**
**நடுங்குசுவல் அசைத்த கையள் கைய**
**கொடுங்கோற் கோவலர் பின்னின் றுய்த்தர**
**இன்னே வருகுவர் தாயர் என்போள்**
**நன்னர் நன்மொழி கேட்டனம்**[12]

இவ்வாறு அவர்கள் விரிச்சி கேட்டமையால் மகனும் தன் செயலை இனிதே முடித்து ஒன்னார்ப் பணித்துத் திறை பெற்று விரைந்து வருவன் எனத் தலைவியைப் பலவாறு ஏதுக்கள் கூறி வற்புறுத்தவும் அவள் ஆற்ற

மாட்டாமல் வருந்துகின்றாள். அவள் பூப்போன்ற கண்களினின்றும் முத்துப் போன்ற கண்ணீர்த் துளிகள் துளிர்த்து நிற்கின்றன.

**நல்ல நல்லோர் வாய்ப்புள் தெவ்வர்**
**முனைகவர்ந்து கொண்ட திறைய வினைமுடித்து**
**வருதல் தலைவர் வாய்வது நீநின்**
**பருவரல் எவ்வம் களைமாயோ யெனக்**
**காட்டவும்-காட்டவும் காணாள் கறுழ்சிறந்து**
**பூப்போ லுண்கண் புலம்ப முத்துறைப்ப**[13]

தலைவி தனிமைத் துயரால் வாடுகின்றாள். இவ்வாறாக முல்லைப்பாட்டு ஆசிரியர் நப்பூதனார் பாடலின் தொடக்கத்தில் முதல் இருபத்து மூன்று அடிகளில் முல்லைத்திணை ஒழுக்கமான 'இருத்தலை' மிக அழகாக அமைத்துச் செல்கின்றார்.

## வஞ்சி ஒடுக்கம்

பாடலின் முதற்பகுதியில் தலைவியின் ஆற்றாமை நிலையைக் கூறியவர் அடுத்த பகுதியில் வஞ்சி ஒழுக்கத்தை—எஞ்சா மண்ணசை வேந்தனை வேந்தன் அஞ்சுதகச் சென்று அடல் குறித்த செயலை விளக்குகின்றார். வேந்து வினை காரணமாகப் பிரிந்த தலைமகன் பாசறை அமைத்து அப்பாடிவீட்டில் தங்கியிருந்தமையை—பாசறை நிலையை மிகத் தெளிவாக விளக்கிச் செல்கின்றார்.

## பாசறை அமைப்பு

போர்மேற் சென்ற தலைமகனும் அவன் வீரர்களும் காட்டாறு சூழ்ந்த அகன்ற நெடிய புறவில் சேணாறு பிடவம், பசிய தூறுகளையும் வெட்டி,

அங்கிருந்த வேட்டுவரின் அரண்களையும் அழித்துக் காட்ட முள்வேலியாகிய மதிலினை அமைத்து அதன் அகத்தே கடல்போல் பரந்த பாடி வீட்டினை அமைக்கின்றனர். இதனை,

**கான்யாறு தழீஇய அகனெடும் புறவில்**
**சேணாறு பிடவமொடு பைம்புதல் எருக்கி**
**வேட்டுப்புழை யருப்பம் மாட்டிக் காட்ட**
**இடுமுட் புரிசை ஏமுற வளைஇப்**
**படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி[14]**

என்ற முல்லைப்பாட்டுப் பகுதியால் தெளியலாம்.

## யானைப்பாகர் செயல்கள்

இவ்வாறு அமைத்த பாசறையின் உட்பகுதியில் உவலைக் கூரை ஒழுகிய தெருவில் நாற்சந்தி கூடுமிடத்தில் காவலாக நிறுத்தப்பட்ட தேம்படு கவுள யானை கரும்பொடு நெருங்கக் கட்டிய நெற்கதிர் களையும், அதிமதிரத் தழையையும் உண்ணாமல் அவற்றினால் நெற்றியைத் தேய்த்துக் கொண்டும், அயில்நுனை மருப்பில் தம் கையிடைக் கொண்டும் நிற்றலைக் கண்ட யானைப்பாகர் கவைமுட்கருவியால் வடமொழி பயிற்றி அதனை உண்ணுமாறு செய்கின்றனர்.

**உவலைக் கூரை யொழுகிய தெருவில்**
**கவலை முற்றம் காவல் நின்ற**
**தேம்படு கவுள சிறுகண் யானை**
**ஓங்குநிலைக் கரும்பொடு கதிர்மிடைத் தியாத்த**

**வயல்வினை யின்குளருண்ணாது நுதல்துடைத்து**
**அயில்துணை மருப்பிற் நம் கையிடைக் கொண்டென**
**கவைமுட் கருவியின் வடமொழி பயிற்றிக்**
**கல்லா இளைஞர் கவளம் கைப்ப**[15]

என்பது முல்லைப்பாட்டு:

## மறவரின் அரண்கள்

பாசறைக்கண் பல்வேறு மறவர்க்குரிய அரண்கள் இருந்தமையைக் கூறுகின்ற ஆசிரியர் நப்பூதனார் அவை அமைந்த திறத்தை விளக்குகின்றார். காணிக் கல்லிலே தோய்ந்து உடுத்த உடையை உடைய வனும், முக்கோலை உடையவனுமாய அந்தணன் அம்முக்கோலை நட்டு அதன் மேல் அவ்வுடையை இட்டு வைத்த தன்மை போல மறத்திலும் அறம் வழுவாத போரிலே வெந்நிற்று ஓடாமைக்குக் காரண மான வலிய வில்லைச் சேர ஊன்றி அவற்றின்மேல் தூணிகளைத் தொங்க விட்டுக் கூட்டமாகக் கால்களை நட்டுப் பின் கிடுகுப் படைகளை நிரலாகப் பிணைத்துப் பல்வேறு அரண்களை அமைத்தனர் எனக் கூறுகின்றார். இதனை,

**கல்தோய்த் துடுத்த படிவப் பார்ப்பான்**
**முக்கோல் அசை நிலை கடுப்ப நற்போர்**
**ஓடா வல்லில் தூணி நாற்றிக்**
**கூடங்கத்திக் கயிறு வாங்கிருக்கை**
**பூந்தலைக் குறீதம் குத்திக் கிடுகு நிரைத்து**
**வாங்குவில் அரணம் அரணமாக**
**வேறு பல் பெரும்படை**[16]

என்ற பகுதியால் உணரலாம்.

## மன்னன் இருக்கை

இவ்வரண்களுக்கு நடுவே மன்னனின் தனி இருக்கை அமைக்கப்பட்டுள்ளது. வில்லரண்களின் மதில் திரையை வளைத்து அரசனுக்கென்று தனிக் கோயில் சமைக்கப்பட்டுள்ளது. இக்கோயிலின் உள் பகுதியில் குறுந்தொடி முன்கைக் கூந்தல் சிறுபுறத்து மங்கையர் கச்சிலே வாளைப் பூண்டவராம் நெய்யினை உமிழ்கின்ற திரிக்குழாயினால் பாவையினைக் கையிலே அமைந்த விளக்கின் சுடர் குறையுந்தொறும் திரியைக் கொளுத்தி எரிக்கின்றனர்.

> ......... நாப்பண் வேறோர்
> நெடுங்காழ்க் கண்டம் கோலி யகநேர்பு
> குறுந்தொடி முன்கைக் கூந்தலஞ் சிறுபுறத்து
> இரவுபகற் செய்யும் திண்பிடி யொள்வாள்
> விரவுவிரிக் கச்சிற் பூண்ட மங்கையர்
> நெய்யுமிழ் சுரையர் நெடுந்திரிக் கொளீஇக்
> கையமை விளக்கம் நந்துதொறுமாட்ட.[17]

## மெய்க்காப்பாளர்

இவ்வாறு பாசறையின்கண் மகளிர் இருந்தமையை உணர்த்தியவர் அடுத்து மன்னன் மெய்க்காப்பாளர் சூழ இருந்தமையை அடுத்துப் புலப்படுத்துகின்றார். யானை, குதிரை முதலியன உறங்கலின் அவற்றின் கழுத்தில் கட்டப்பட்டது மணியோசை அடங்கிய நடுயாமத்தில் புனலிபூத்த அசைகின்ற சிறுதூறுகள் துவலையோடு வருகின்ற காற்றிற்கு அசைந்ததைப் போன்று துகில் முடித்துப் போர்த்த தூங்கல் ஓங்குநடைப் பெருமூதாளர் காவலாகச் சுற்றி நிற்கின்றனர் என்பதை,

**நெடுநா ஒண்மணி நிழத்திய நடுநாள்**
**அதிரல் பூத்த ஆடுகொடிப் படாஅர்**
**சிதர்விரல் அசைவளிக் கசைவந் தாங்குத்**
**துகில்முடித்துப் போர்த்த தூங்கல் ஓங்குநடைப்**
**பெருமூதாளர் ஏமம் சூழ**[18]

என்ற முல்லைப் பகுதிவழி உணர்த்துகின்றார் ஆசிரியர்.

## நாழிகைக் கணக்கர்

இவ்வாறு மன்னனின் தனி இருக்கையில் குறுந்தொடி மகளிரும், பெருமூதாளரும் மட்டுமின்றி எடுத்த காரியம் இனிதே நிறைவுற பொழுதினைக் கண்டு கூறும் மெய்யறிவுடையவர்களும் ஆங்கு இருந்தமையை,

**பொழுதளந் தறியும் பொய்யா மாக்கள்**
**தொழுதுகாண் கையர் தோன்ற வாழ்த்தி**
**எறிநீர் வையகம் வெல்இய செல்வோய்நின்**
**குறுநீர்க் கன்னல் இனைத்தென் றிசைப்ப**[19]

என்று முல்லைப் பகுதி உணர்த்துகின்றது.

## யவனரும் மிலேச்சரும்

அரசனின் இருக்கையில் உள்நாட்டு மெய்க்காப்பாளர் மட்டுமின்றி அயல்நாட்டுக் காப்பாளர்களும் இருந்தனர் என்பதை முல்லைப்பாட்டு உணர்த்தி நிற்கிறது. அரசன் பள்ளியறையில் அகப்பணி செய்தற்கு அயல்நாட்டுக் காப்பாளர் அமைந்திருந்தனர். இவ்அயல் நாட்டுக் காப்பாளர்களில்,

**மத்திகை வளைஇய மறிந்துவீங்கு செறிவுடை**
**வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்[20]**

என்பவர்கள் ஒரு வகையினர்.

**உடம்பின் உரைக்கும் உரையா நாவின்**
**படம்புகு மிலேச்சர்[21]**

என்பவர்கள் ஒரு வகையினர். இவர்கள் புலித்தொடர் விட்ட புனைமாண் நல்லில்லில் மணிவிளக்கை எரிய வைத்துக் கொண்டு திண்ஞாண் எழிலில் வாங்கிய அரறைப் பள்ளியுள் உள் அறையாகிய பள்ளி அறையின்கண் அரசனின் உழையராய் இருந்து காவல் புரிகின்றனர்.

## மன்னன் மனநிலை

இவ்வாறாகப் பாசறையில் இருந்த மகளிர், மெய்க் காப்பாளர், நாழிகைக் கணக்கர், யவனர், மிலேச்சர் இவர்கள் சூழல இருந்த மன்னனின் மனநிலையை அடுத்து உரைக்கின்றார். வினைமுற்றியிருந்த தலை மகன் பகைமேற்செல்லும் விருப்பத்தால் உறக்கங் கொள்ளாமல், முன்னாளில் பகைவர் எறிந்த வேல் நுழைந்தமையால் புண்கூர்ந்து அதனால் வருத்த முற்றுத் தம் பெண் யானைகள் மறந்த களிற்று யானைகளை நினைந்தும், யானைகளின் பரிய கைகளை வெட்டி வீழ்த்தித் தாம் அணிந்த வஞ்சின மாலைக்கு வெற்றி உண்டாகும்படிச் செஞ்சோற்றுக் கடன் கழித்த மறவர்களை நினைந்தும், வைந்துனை பகழி மூழ்கலினால் புண்மிகுந்து அத்துன்பத்தால் புல்லுண்ணாமல் செவிசாய்த்து வருந்துகின்ற குதிரை களை நினைந்தும்,

**ஒருகை பள்ளி யொற்றி யொருகை
முடியொடு கடகர் சேர்த்தி நெடிதுநினைந்து
பகைவர்ச் சுட்டிய படைகொள் நோன்விரல்
நகைதாழ் கண்ணி நல்வலந் திருத்தி
அரசிருந்து பணிக்கும் முரசு முழங்கு பாசறை**[22]

யில் இன்துயில் வதிகின்றமையைக் காட்டுகின்றார்.

இவ்வாறாக முல்லைப்பாட்டு ஆசிரியர் நப்பூத னார் பகைமேற்சென்ற வேந்தனின் பாசறை நிலை யைக்கூறுவதன் மூலம் முல்லைத்திணைக்கு இயைந்த வஞ்சியொழுக்கத்தை விளக்குகின்றார்.

## படர்மெலிந்து இரங்கும் தலைமகள்

பெருமுது பெண்டிர் விரிச்சி கேட்டுவந்து ஆற்று விக்கவும் ஆற்ற மாட்டாதவளாய்ப் பூப்போலுண்கண் புலம்பு முத்துறைக்க நின்ற தலைமகள் அரசிருந்து பணிக்கும் முரசு முழங்குபாசறையில் இன்துயில் வதியுநனைக் காணாது வருந்துகின்ற முல்லை யொழுக்கத்தை மீண்டும் இறுதியில் வற்புறுத்து கின்றார் ஆசிரியர். உருமிடி வானம் இழியவும், வரிநிறப் பாதிரி விடவும், திருவில் விலங்கன்றித் தீம்பெயல் தாழவும் தொடங்கிய கார்காலத்தில் வருவதாகக் கூறிச் சென்ற தலைமகனின் வரவினைக் காணாத தலைமகள் தன் நெஞ்சினை அவன்பாற் போக்கி நிறையழிந்து வருந்துகின்றவள் இவ்வாறு தன் கொழுநன் சொல்லைத் தவறியதாம் எனக் கூறித் தன்னைத் தானே தேற்றியும், கழலும் வளை களைக் கழலாமல் திருத்தியும், மீண்டும் மயங்கியும் நெட்டுயிர்த்தும், அம்பு பாய்ந்த மஞ்ஞையைப் போல் மயங்கி தன்னேக நெகிழ இடஞ்சிறந்துயரிய எழுநிலை

மாடத்தின் கண்ணே இருந்து முடங்கிறைச்சொரிதரும் மாத்திரள் அருவியின் ஓசையிலே மனம் பறி கொடுத்து நிற்கின்றாள்.

> இன்றுயில் வதியுநற் காணாள் துயருழந்து
> நெஞ்சாற்றுப் படுத்த நிறைதபு புலம்பொடு
> நீடுநினைந் தேற்றியும் ஓடுவளை திருத்தியும்
> மையல் கொண்டு மொய்யென உயிர்த்தும்
> ஏவுறு மஞ்சையின் நடுங்கி பாவைழநெகிழ்ந்து
> பாவை விளக்கிற் பரூஉச் சுடரழல
> இடஞ்சிறந் துயரிய எழுநிலை மாடத்து
> முடங்கிறைச் சொரிதரு மாத்திர ளருவி
> இன்பல் இமிழிசை யோர்ப்பனள் இடந்தோள்[23]

எனத் தலைமகள் தலைமகனைப் பிரிந்து எழுநிலை மாடத்தில் தனித்து இருந்தமையை—பிரிவிடை ஆற்றாது வருந்துகின்றமையை உணர்த்துகின்றார் ஆசிரியர். பேராசிரியர் டாக்டர் மு. வ. அவர்கள் முல்லைக்கு விளக்கம் கூறுகையில் 'கற்பு' எனப் பொருள் கூறுகின்றார். அதாவது தலைமகன் தலைமகள் இருவரும் சொற்றிறம்பாமல் நடத்தலே கற்பு—முல்லை எனக் கூறுகின்றார் அவர்.[24] இதற்கேற்பவே தலைமகள் தலைமகன் பிரிந்து சென்றபோது அவன் பிரிவை ஆற்றியிருப்பதாகக் கூறிய சொல்லைத் திறம்பாமல் கடைப்பிடிப்பதை ஆசிரியர் நப்பூதனார் 'நீடு நினைந்து' தேற்றியும்' என்ற தொடர்வழிப் புலப்படுத்துகின்றார். தலைமகனும் தலைமகளைப் போன்றே சொற்றிறம்பாமல் கற்புடன் ஒழுகுவதைக் கார்காலத்தில் விரைந்து திரும்புகின்ற செயலின் மூலம் விளக்குகின்றார். இவ்வாறாக ஆசிரியர் நப்பூதனார் முல்லைத்திணை ஒழுக்கத்தைப் பாடலின் முதற்

பகுதியிலும் இறுதிப் பகுதியிலும் அமைத்துக் காட்டு கின்றார்.

## தலைமகன் மீளல்

விரிதிரை வெள்ளம் வெறுப்பப் பருஇவ் பெருவிறல் வானம் பெருவரை சேருங் கருவணி காலத்தில் வருதும் என மொழிந்து சென்ற தலைமகன் வினைமுற்றி மீண்டு வருகின்றான். வேண்டுபுலங் கவர்ந்த ஈண்டு பெருந் தானையோடு விசயம் வெல்கொடி யுயரி வலனேர்பு வயிரும் வளையும் ஆர்ப்பவும் அயிரவும்,

**செறியிலைக் காயா அஞ்சனம் மலர**
**முறியிணர்க் கொன்றை நன்பொன் காலக்**
**கோடற் குவிமுகை மங்கை யவிழ்த்**
**தோடர் தோன்றிக் குருதி பூப்பக்**
**கானம் நந்திய செந்நிலப் பெருவழி**
**வானம் வாய்த்த வாங்குகதிர் வாகின்**
**திரிமருப் பிரலையொடு மடமானு கள**
**எதிர்செல் வெண்மழை பொழியுந் திங்களின்**
**முதிர்காய் வள்ளியங் காடு**[35]

பின்னாகும்படி வருகின்றான் தலைமகன். தலை மகனின் வினைவிளங்கு நெடுந்தேர் பூண்ட மாவின் குளம்படி ஒசையானது அரசிருந்து பணிக்கும் முரசு முழங்குபாசறையின் இன்துயில்வதியுநனைக்'காணாது இடஞ்சிறந் துயரிய எழுநிலை மாடத்து முடங்கிறைச் சொரிதரும் மாத்திரள் அருவியின் இன்பல் இமிழிசை ஓர்ப்பனள் இடந்தோளாய தலைமகளின் அம்செவி நிறைய ஆலின என்று முடிக்கின்றார் ஆசிரியர். இதனால் தலைமகனும் சொன்ன சொல் தவறாமல் இருக்கின்ற பான்மையை உணர்த்தி நிற்கின்றார்.

தலைமகன் மீண்டும் வருகின்ற நிலையைக் கூறாமல் விடுத்திருந்தால் இம்முல்லைப்பாட்டு முழுமை பெற்ற தாகாது. தலைமகனும் தன் பண்பில் குறைந்தவனா யிருப்பான். இவற்றைத் தவிர்க்கவே ஆசிரியர் நப்பூதனார் தலைமகன் மீண்டு வருகின்ற காட்சி களையும் அமைக்கின்றார்.

## இறுவாய்

இவ்வாறாக முல்லைப்பாட்டு ஆசிரியர் நப்பூத னார் பாடலின் தொடக்கத்தில் கடனீர் முகந்த கமஞ்சூல் எழிலி குடமலை யாகத்துக் கொள்ளப்பு இறைக்கும் காலத்தில் திரும்பி வருவதாகக் குறி செய்து பிரியத் தலைமகன் அவன் பிரிவை ஆற்றாது வருந்துகின்ற மையைக் கூறிப் பின்னர் அவன் கூறிச் சென்றபடி தன் கற்பு ஒழுக்கத்திற்கேற்றபடி இல்லிருந்து ஆற்று கின்றமையைப் பின் கூறுகின்றார். இடைப்பகுதியில் தலைமகன் தலைமகளைப் பிரிந்து பாசறை வீட்டில் இருக்கின்றமையைக் கூறுகின்றார். இவ்வாறு தலைமகன் தலைமகள் இருவரும் ஒருவரை ஒருவர் பிரிந்து தத்தமக்குரிய இடத்தில் சொற்றிறம்பாம் இருப்பதாகக் கூறும் இருத்தல் நிமித்தத்தை விளக்கி நிற்பதால் 'வஞ்சிதானே முல்லையது புறனே' என்ற தொல்காப்பிய நூற்பாவிற்கு இயைய முல்லைப்பாட்டு அமைந்துள்ளது எனத் துணியலாம்.

## பாடி வீட்டின் அமைப்பு

எஞ்சா மண்ணாசை காரணமாக வந்த வேந்தன் மேல் தன் வீரத்தை நிலைநாட்டுதற்காகச் சென்ற முல்லைப்பாட்டுத் தலைமகன் அவன் வீரர்களுடன்

பகைப்புலத்தில் பாசறை வீட்டில் தங்கி இருந்தமை யைக் கூறும் ஆசிரியர் நப்பூதனார் அவர்கள் பாசறை அமைப்பினை,

> **கான்யாறு தழீஇய அகனெடும் புறவின்**
> **சேணாறு பிடவமொடு பைம்புதல் எருக்கி**
> **வேட்டுப்புழை யருப்பம் மாட்டிக் காட்ட**
> **இடுமுட் புரிசை ஏமுற வளைஇப்**
> **படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி.**[26]

என விளக்குகின்றார். அதாவது காட்டாறு சூழ்ந்த அகன்ற நெடிய காட்டிடத்தே, சேய்மைக் கண்ணும் சென்று மணம் வீசுகின்ற பிடவம் செடிகளையும், பசிய தூறுகளையும் வெட்டி வீழ்த்திப் பின்னர் ஆங்குக் காவலாக அமைந்திருந்த வேடுவர்களின் குடியிருப்புக்களையும் அழித்துக் கடல்போல் பரந்த பாடி வீட்டினை அமைத்தனர் என அப்பாடி வீட்டின் அமைப்பினைத் தெளிவுறுத்துகின்றார்.

## இன்துயில் வதியுநற் காணாள் நெஞ்சாற்றுப்படுத்த நிறைதபு புலம்பொடு எண்ணியன

பெருமுது பெண்டிர் பெரும்பெயல் பொழிந்த சிறுபுன்மாலைப் போதில் விரிச்சி கேட்டு ஆய்மகள் கூறிய நன்மொழிகளைக் காட்டவும், காட்டவும் காணாதாளாய்க் கலுழ்சிறந்து பூப்போல் உண்கண் புலம்புமுத்துறைப்ப நின்ற தலைமகள் அரசிருந்து பணிக்கும் முரசு முழங்க பாசறையில் இன்துயில் வறியுநனாய தலைமகனைக் காணாது வருந்து கின்றவள். வருந்துகின்றவள் தன் நெஞ்சினை அவன்பாற் போக்கி நிறையழிந்து மிக்கதுன்பத்தினால்

ஓடுகின்ற வளையைத் திருத்திக் கொண்டும், மையல் கொண்டு உயிர்த்தும், பகழி பாய்ந்த மஞ்ஞையினைப் போல் நடுங்கி இழை நெகிழ எழுநிலை மாடத்தின்கண் இருந்து முடங்கிறைச் சொரிதரு மாத்திரளருவியின் இன்பல் இமிழிசையைக் கேட்டு நிற்கின்றவள். அவ்வாறு நிற்கின்றவள் தன் தலைவன் அக் காலத்தில் கூறிச் சென்ற சொற்களை நினைந்து பார்க்கின்றாள்.

உடனே அவனுக்குத் தலைமகள் உருமிடி வானம் முழக்குகின்ற கார்காலத்தில் திரும்பி வருவ தாகக் கூறித் தான் வந்துணையும் அவளை ஆற்றி யிருக்குமாறு கூறிச் சென்ற சொற்கள் நினைவிற்கு வருகிறது. வரவே தலைமகன் கூறிச் சென்றிருப் பதால் அவன் சொற்களை மீறி இவ்வாறு வருந்துதல் தன் ஆருயிர்த் தலைவன் பெருமொழியைத் தவறிய தாம் என்று கருதித் தன்னைத் தானே தேற்றிக் கொண்டு பிரிவுத் துயரை ஆற்ற நினைக்கின்றாள். இவ்வாறு தலைமகள் இன்துயில் வதியுநனைக் காணாது நெஞ்சாற்றுப் படுத்த நிறைதபு புலம்பொடு எண்ணுகின்றமையை ஆசிரியர் நப்பூதனார் 'நீடு நினைந்தேற்றியும் ஓடுவளை திருத்தியும்'[27] என்ற பகுதிவழி உணர்த்துகின்றார்.

# அடிக்குறிப்புகள்

1. தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல் 1.
2. ,, ,, புறத்திணையியல் 10.
3. ,, ,, ,, 1.
4. ,, ,, ,, 6.
5. ,, ,, ,, 8.
6. ,, ,, ,, 15.
7. ,, ,, ,, 18.
8. தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணர் உரை.
9. ,, ,,
10. 'வினையே ஆடவர்க்குயிரே'—குறுந்தொகை 135: 1.
11. முல்லைப்பாட்டு 1—6.
12. ,, 12—17.
13. ,, 18—24.
14. ,, 24—28.
15. ,, 29—36.
16. ,, 37—43.
17. ,, 43—49.
18. ,, 50—54.
19. ,, 55—58.
20. ,, 59—60.
21. ,, 65—66.
22. ,, 75—79.
23. ,, 80—88.
24. டாக்டர் மு. வ., ப. 9.
25. முல்லைப்பாட்டு
26. ,, 24—28.
27. ,,

# 5. பிள்ளைத்தமிழ் இலக்கணமும் இலக்கியமும்

## தோற்றுவாய்

தமிழிலக்கியப் பூங்காவில் பிற்காலத்தில் பூத்துக் குலுங்கித் தழைத்த சிற்றிலக்கியச் செல்வத்துள் பிள்ளைத்தமிழ் என்பதும் ஒன்று. இனிமையாலும் நடை நயத்தாலும் உள்ளத்தைக் கொள்ளும் இத்தமிழ்ச் சிற்றிலக்கியத்தைப் பிள்ளைத்தமிழ் என்றனர் முன்னோர். 'பிள்ளைக் கவி' பிள்ளைப்பாட்டு எனவும் இயம்பப் பெறும். பாட்டுடைத் தலைவியையோ, தலைவரையோ குழந்தையாகப் பாவித்து, காப்பு முதலிய பத்து பருவங்கட்குரிய செயல்களைச் சிறப்பித்துக் கூறுவதாகப் புலவர் பெருமக்களால் பாடப்படுவது. கடவுள், ஆசிரியர், வள்ளல், தொண்டர், தலைவர் புலவர்களையோ வைத்துப் பாடுதல் வழக்கு. பிறவா யாக்கையன் ஆதலின் சிவன்மீது பிள்ளைத்தமிழ் பாடுவதில்லை. விநாயகர், முருகன், உமாதேவி மேல் பிள்ளைத்தமிழ் உண்டு. அனுமார் மீதும் பிள்ளைத்தமிழ் உண்டு. ஆசிரியரைப் பற்றியது. அம்பலவாணர் பிள்ளைத்தமிழ் சிவத்தெழுந்த பல்லவராயன் பிள்ளைத் தமிழ் வள்ளல் பற்றியது. புலவர் பற்றியது சேக்கிழார் பிள்ளைத்

தமிழ். இராஜாஜியின் பிள்ளைத்தமிழ் தலைவர் பற்றியது. பொதுவாகப் பிள்ளைத்தமிழ் இலக்கியம் ஆண்பால் பிள்ளைத்தமிழ் என்றும், பெண்பால் பிள்ளைத்தமிழ் என்றும் இருவகைப்படும். இனிமையும் எழிலும் தழைத்து இலங்கும் இச்சிற்றிலக்கியம் இன்று 105 எனும் எண் அளவை எட்டி வளர்ந்துள்ளது.

## பிள்ளைத்தமிழ் வளர்ச்சி

நம் பழம்பெரும் இலக்கியமான ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியத்திலேயே பிள்ளைத்தமிழ் இலக்கியத்திற்கான வித்து இடப்பட்டுள்ளது. தொல்காப்பியம் பொருளதிகாரப் புறத்திணை இயலில் பாடாண்பாட்டினை உணர்த்துகின்ற பொழுது,

**குழவி மருங்கினும் கிழவதாகும்**

என்றொரு சூத்திரம் யாத்துள்ளார். இது குழவிப் பருவத்தும் காமப்பகுதி இடம் பெறும் என்பதை உணர்த்தி நிற்கின்றது. காப்பு, தால், செங்கீரை, சப்பாணி, முத்தம், வரவு, அம்புலி, சிற்றில், சிறுதேர், சிறுபறை எனப் பிள்ளைத்தமிழில் நாம் காணுகின்ற பருவங்கள் பத்தினையும் முறைபடுத்தி உரைத்து உள்ளார் நச்சினார்க்கினியர்.

**இளமைந்தர் நலம்வேட்ட**
**வளமங்கையர் வகையுரைத்தன்று**

என வரும் புறப்பொருள் வெண்பாமாலைப் பகுதியும் இப்பிள்ளைத்தமிழ் இலக்கணத்தைக் கூறுவதே ஆகும்.

தொல்காப்பியத்தை அடுத்து ஆழ்வார்களின் பக்தி இலக்கியங்களில் மிகுதியான இடங்களில் இப்பிள்ளைத்

தமிழின் போக்கைக் காண்கிறோம். திருமால் மண்ணுலகில் இராமனாகவும், கண்ணனாகவும் அவதரித்துத் திருவிளையாடல்கள் புரிந்தனர். குலசேகர ஆழ்வார் முதலிய அடியார்கள் திருமாலின் பிள்ளைப் பிராயத்தைப் போற்றிப் பாடுகின்றனர்.

**மன்னுபுகழ்க் கௌசலைதன் மணிவயிறு வாய்த்தவனே**
**தென்னிலங்கைக் கோன்முடிகள் சிந்துவித்தாய் செம்பொன்சேர்**
**கன்னிநன்மா மதில்புடைசூழ் கணபுரத்தென் கண்மணியே**
**என்னுடைய இன்னமுதே இராகவனே தாலேலோ**

என்று இராமனையும்,

**தண்ணந் தாமரைக் கண்ணனே கண்ணா**
**தவழ்ந்தெழுந்து தளர்ந்ததோர் நடையால்**
**மண்ணிற் செம்பொடி ஆடிவந்து என்றன்**
**மார்பின் மன்னிடப் பெற்றிலேன் அந்தோ**
**வண்ணச் செஞ்சிறு கைவிர லனைத்தும்**
**வாரிவாய்க் கொண்டவடிசிலின் மிச்சில்**
**உண்ணப் பெற்றிலேன் ஒகொடு வினையேன்**
**என்னை என்செயப் பெற்ற தெம்மாயோ?**

என்று கண்ணனையும் அவர் அழகொழுகப் பாடுகின்றார்.

தொல்காப்பியர் காலத்தில் வித்திடப்பெற்று மெல்ல மெல்ல வளர்ச்சி பெற்ற பிள்ளைத்தமிழ் கி. பி. 8ம் நூற்றாண்டில் ஆழ்வார்களின் காலத்தில் இலக்கிய அங்கமாகும் தகுதி பெற்று கி.பி. 12ம் நூற்றாண்டில் முழு சிற்றிலக்கியங்களாக உருப் பெற்றது.

இரண்டாம் குலோத்துங்க சோழனின் ஆசிரியரும் அவைக்களப் புலவருமான ஒட்டக்கூத்தர் இரண்டாம்

குலோத்துங்கன்மீது பிள்ளைத்தமிழ் ஒன்றைப் பாடிப் பிள்ளைத்தமிழ் இலக்கியத்தைத் தோற்றுவித்தார். ஒட்டக்கூத்தர் தோற்றுவித்த பிள்ளைத்தமிழ் என்னும் வண்ணமலர் பிற்காலத்தில் அருணாசலக் கவிராயர், சிவஞான முனிவர், வீரராகவ முதலியார், கச்சியப்ப முனிவர், துறைமங்கலம் சிவப்பிரகாசர், சிதம்பர சுவாமிகள், பகழிக்கூத்தர் போன்ற அறிஞர் பெரு மக்களால் மேலும் அழகும் அமைப்பும் பெற்று கி. பி. 2ம் நூற்றாண்டிலும் திக்கெங்கும் மணம் பரப்பி நிற்கின்றது.

## பிள்ளைத்தமிழ் இலக்கணம்

பிள்ளைத்தமிழ் இலக்கணத்தைப் பாட்டியல் நூல்கள் மிகவும் விரிவானமுறையில் விளக்குகின்றன. பிள்ளைத்தமிழ் நூல் மூன்று மாதம் முதலாக இருபத்தொரு மாதம் வரையில் அமைந்த ஒற்றித்த மாதங்களாகிய பத்திலும் இடம்பெறும். இதனை,

**மூன்று முதல் மூவெழு திங்களின்**
**ஒற்றை பெற்ற முற்றுரு மதியின்**
**கொள்ளுக பிள்ளைக் கவியைக் கூர்ந்தே**
**—இ.வி.பா.50**

**மூன்று, ஐந்து ஏழாம் ஆண்டினும் ஆகும்**

என்ற இலக்கண விளக்கப் பாட்டியலால் தெளியலாம். காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்ற பத்து பருவங் களும் இடம்பெறும். பிள்ளைத்தமிழில், பெண்பால் பிள்ளைத்தமிழ் ஆயின் இறுதியில் உள்ள மூன்று பருவங்களுக்கு மாறாக கழங்கு, அம்மானை, ஊசல் என்ற மூன்று பருவங்களும் இடம் பெறும்.

கடுங்கொலை நீக்கிக் கடவுட் காப்பு
செங்கீரை தால் சப்பாணி முத்தம்
வாரானை முதல் வகுத்திடும் அம்புலி
சிறுபறை சிற்றில் சிறுதேர் என்ன
பெறுமுறை ஆண்பாற் பிள்ளைத்தமிழ்

—இ.வி.பா. 46

அவற்றுள்,

பின்னைய மூன்றும் பேதையர்க் காகா
ஆடும் கழங்கு அம்மானை ஊசல்
பாடும் கதியால் பகுத்து வகுப்புடன்
அகவல் விருத்தத்தால் கிளையனவாம்.

—இ.வி.பா.47

துரு கொலை நீக்கித் தெய்வக் காப்பாய் சுற்ற
தொகையளவு வழுப்பகவல் விருத்தந் தன்னால்
முறைகாப்பு செங்கீரை தால் சப்பாணி
முத்தம் வாரானையம் புலியி னோடு
சிறுபறை சிற்றில் சிறுதேர் இவைபின் மூன்றும்
தெரிவையர்க்கு பெருங்கழங்கம் மானை ஊசல்
பெறுமூன்று முதலிருபத் தொன்றுலொன்றை
பெறுதிங்கள் தவிற்பிள்ளைக் கவியைக் கொல்லோ.

—சிதம்பரப் பாட்டியல்

என இலக்கண விளக்கப் பாட்டியலும், சிதம்பரப் பாட்டியலும்,பிள்ளைத்தமிழ்ப் பருவங்களை உணர்த்தி நிற்கின்றன. கலிவிருத்தம், கலிப்பா ஆகிய இப்பாக்கள் பிள்ளைத்தமிழில் இடம்பெறத்தக்க பாவகைகள் ஆம்.

தான் போற்ற வந்த தலைவனையோ, தலைவியையோ குழந்தைப் பருவத்தராக எண்ணிஅக்குழந்தையின் மூன்றாம் திங்கள் தொடங்கி இருபத்தொன்றாம் திங்கள் வரை இரண்டு திங்களுக்கு ஒன்றாகப்

பருவத்தை வகுத்துக் கொண்டு பத்துப் பருவங்களால பாடுவது பிள்ளைத்தமிழ் நூலாகும் எனலாம். இப் பாடல்கள் பிள்ளமைப் பருவத்தைத் தலைமையாக வைத்துப் பாடப்பட்டிருந்தாலும் பாட்டுடைத் தலைவனின் வீரச் செயல்கள், குணங்கள் முதலியன சிறப்பாகப் பேசப்பட்டிருக்கும். சான்றாக முருகனைப் பற்றிய பிள்ளைத்தமிழ் நூலில் அவன் சூரபதுமனைத் தடிந்தது, கிரௌஞ்ச மலையை அழித்தது, தெய்வ யானை, வள்ளி ஆகியோரை மணந்தது முதலிய சிறப்புச் செய்திகள் கூறப்பெற்றிருக்கும்.

## பெயர் பெறும் முறை

இறைவன் (அ) இறைவன் மீது பாடப் பெற்ற பிள்ளைத்தமிழ் நூல்கள் அவர்கள் பெயராலேயே அவர்கள் எழுந்தருளி இருக்கும் தலங்களின் பெயரோடு சாத்தியோ கூறப்படுகின்றன. அழகர்பிள்ளைத்தமிழ் சேதுபர்வத வர்த்தினி பிள்ளைத்தமிழ் போன்றவை இம்முறையில் அமைந்தவை. இவ்வாறே வள்ளல்கள் மீதும் மன்னர்கள் மீதும் பாடப்பெற்ற பிள்ளைத்தமிழ் நூல்கள் அத்தலைவர் பெயராலோ அத்தலைவரின் ஊர்ப்பெயரோடு சார்த்தியோ அழைக்கப்படுகின்றன. குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ், திருவாவடுதுறை பிள்ளைத்தமிழ் என்பன இம்முறையில் பெயர் பெற்றவை.

சிவபெருமானைக் குழவிப் பருவத்தில் பிள்ளைத் தமிழில் கண்டுகளிக்க வாய்ப்பில்லாதவர்களுக்கென்றே பரஞ்சோதியார் சிவனின் பிள்ளைப்பருவத்தைத் தம் திருவிளையாடலில் பாடியுள்ளார் போலும்! பிள்ளைத் தமிழில் சிவனைக் குழவியாகக் காண இயலாவிட்டாலும்

திருவிளையாடல் புராணத்தில் இத்தகைய வாய்ப்பு நமக்கு உள்ளது.

**எழுதரிய மறைச்சிலம்பு கிடந்துபுறத்**
**தலம்ப அன்பர் இதயமெனும்**
**செழுமலர் ஓடையின் மலர்ந்து சிவானந்தர்**
**தேன் ததும்பும் தெய்வக் கஞ்சத்**
**தொழுதகு சிற்றடிப் பெரியவிரல் வைத்து**
**மைக்கணித் ததும்ப வாய்க்கண்ணீர் விட்டு**
**அழுதின ஆடையில் கிடந்தான் அனைத்துயிரும்**
**ஈன்று காத்தளிக்கும் அப்பன்**

என்ற இச்செய்யுள் இறைவனாகிய சிவன் குழவியாகி அழுகின்ற காட்சியினை மாட்சியோடு உரைக்கின்றது

## பிள்ளைத் தமிழில் பருவங்கள்—காப்புப் பருவம்

திருமால் முதலிய கடவுளர்களை வாழ்த்திப் பாட்டுடைத் தலைவனைக் காக்குமாறு வேண்டுவது காப்புப் பருவம். இது பிள்ளைத்தமிழ் நூல்களில் முதலாவதாக இடம்பெறும். காப்புப் பருவத்தில் முதல் கடவுளாகத் திருமாலைப் பாடவேண்டும் என்பது பாட்டியல் மரபு. திருமாலை முதற்கண் கூற வேண்டு. வதற்கு,

**அவன்தான்**
**காவற்கிழவன் ஆகலானும்**
**பூவின் கிழத்தியைப் புணர்தலானும்**
**முடியும் கடகமும் மொய்ப் பூந்தாரும்**
**குழையும் நூலும் குருமணிப் பூணும்**
**அணியும் செம்மல் ஆக லானும்**
**முன்னுற மொழிதற்கு உரியன் என்ப**

எனவரும் பிள்ளைத்தமிழ் நூற்பாவில் காரணம் காட்டப்பட்டுள்ளன. ஆயினும் சிவயோக நாயகி பிள்ளைத்தமிழ், சத்திய ஞான பண்டாரம் பிள்ளைத் தமிழ் ஆகியவற்றில் முறையே 5வது பாடலிலும், 8வது பாடலிலும் திருமாலை விடுத்துப் பாடியுள்ளது உணரத்தக்கது. மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் சேக்கிழார் பிள்ளைத் தமிழில் காப்பிற்குரிய தெய்வங்களை எல்லாம் விடுத்துத் "திருத்தொண்டத் 'தொகை செய்யுள் முறைப்படி அமையும் அடியவர்களைக் காப்புப் பருவத்தில் வைத்துப் பாடியுள்ளதும் குறிப்பிடத்தக்கதாகும்.

காப்புப் பருவம் பற்றிச் சங்க இலக்கியத்தில் குறிப்புகள் ஏதும் இல்லை. காந்தி பிள்ளைத்தமிழும் கடவுள்களை முன்னிறுத்திப் பாடாமல் ஒன்றே தேவன் என்ற முறையில் அமைத்துப் பாடப்பட்டது. வழிபடு தெய்வம் காக்க என வேண்டுவதால் பாட்டுடைத் தலைவன் பழுதின்றி நோயற்று வளர்வான்.

## செங்கீரைப் பருவம்

காப்புப் பருவத்தை அடுத்து அமைவது செங்கீரைப் பருவம். 3 முதல் 5 திங்கள் வரை இப்பருவம் அமையும். குழந்தை தவழ்ந்து வீழும் பருவம். இப் பருவத்தில் குழந்தையின் மழலைச் சொல் கேட்கின்ற நிலை அமையும். பொருள் அறியாப் பெரும்மொழி பேசும், குழவிகளின் மழலைச் சொற்களில் மயங்கித் தாயார் அக்குழந்தையைச் செங்கீரை ஆடுமாறு பாடுதல் செங்கீரைப் பருவம் ஆகும். அக்குழந்தைகளின் செயலைக் குறித்துப் பாடப்படுவது செங்கீரைப்

பருவம். குழந்தை தன்னுடைய ஒரு காலை மடக்கி ஒரு காலை நீட்டி இருகைகளையும் மண்ணில் ஊன்றித் தலையை நிமிர்த்திப் பார்த்து ஆடுதல் செங்கிரை எனப்படும்.

**தாலப்பருவம்**

5 முதல் 7 திங்கள் வரை அமையும் பருவம் தாலப் பருவம். குழந்தை தாலாட்டைக் கேட்கும் பருவம். குழந்தையைத் தொட்டிலிலிட்டு அதன் முன்னைச் சிறப்புகளை யெல்லாம் தொகுத்துத் தாலாட்டும் பிள்ளைத்தமிழில் தாலப்பருவம், செங்கீரைப்பருவம், இரண்டும் மாறிமாறியும் அமையும். இரண்டாவதாக தாலப்பருவமும், மூன்றாவதாக சப்பாணிப்பருவமும் அமைகின்ற நிலையும் உண்டு. இதற்கு,

**செப்பரிய காப்புத் தால் செங்கீரை சப்பாணி**

என்று இலக்கணம் வகுக்கிறது வெண்பாப்பாட்டியல்.

**சப்பாணிப் பருவம்**

தாலப்பருவத்தை அடுத்து வருவது சப்பாணிப் பருவமாகும். இது 7 முதல் 9 திங்கள் வரை அமையும். சங்க இலக்கியத்தில் இதைப் பற்றிய குறிப்பு ஒன்றும் இல்லை. இப்பருவத்தில் குழந்தை நிமிர்ந்து உட்கார்ந்து இரண்டு கைகளையும் ஒன்று சேர்த்துக் கொட்டி முழக்கும். உட்காரும் நிலையாலே இதற்குச் சப்பாணி என்ற பெயர் வந்தது. என்பது சிலர், கொட்டும் அமைப்பிற்கே சப்பாணி என்று பெயர் வந்தது என்பர் சிலர். எப்படியாயினும குழந்தை

உட்கார்ந்து கைகொட்டி மகிழும் பருவமே சப்பாணிப் பருவம்.

### முத்தப் பருவம்

சப்பாணிப் பருவத்தை அடுத்து மகிழும் பருவமே முத்தப்பருவம். சங்க இலக்கியத்தில் இதைப்பற்றிய குறிப்பு இல்லை. 9 முதல் 12 திங்கள் வரை அமையும் குழந்தையைத் தூக்கி மடியில் வைத்து அதன் எச்சில் வாயால் முத்தம் பெறும் சிறப்பினைப் பெற்றோரே அறிவர். தம் பாட்டுடைத் தலைவனை, அண்டம் கடந்த அண்ணலை, அம்மையைக் குழந்தையாக்கி அதன் முத்தத்திற்கு ஏங்கும் மெய்யடியார்தம் நிலை, அறிந்து இன்புறத்தக்க ஒன்றாகும்.

### வாரானைப் பருவம்

முத்தப்பருவத்தை அடுத்து அமைவது வாரானைப் பருவம். எங்கோ அப்பாலுக்கப்பாலாய் இருக்கும் தம் பாட்டுடைத் தலைவனை அருகில் வருக வருக என வாய் குளிர மெய்மகிழ அழைக்கும் இப்பருவம் ஏற்றம் மிக்க ஒரு பருவமாகும். மதுரை மீனாட்சி அம்மன் முன்னின்று குமரகுருபரர் இவ்வகைப் பாடலுள் ஒன்றாய 'தொடுக்கும் கடவுள் பழம்பாடல்' என்ற பாடலைப் பாடும்போதுதான் அம்மை குழந்தை வடிவாக வந்து அருள்புரிந்தாள் எனக் கூறுவர்.

### அம்புலிப் பருவம்

வருகைப் பருவத்தைத் தொடர்ந்து வருவது அம்புலிப் பருவமாகும். வளரும் இளம் குழந்தைக்கு வானத்துத் திங்கள் ஒரு புரியாத புதுப்பொருளாகத்

தான் தோன்றும். அது தோன்றும் திசைநோக்கிக் கைநீட்டும். குழந்தை அதை விளையாட அழைப்பதாகத் தாய் எண்ணுவாள். இப்பருவத்தில்தான் கவிஞன் தன் முழுத்திறனையும் காட்ட வாய்ப்பு இருக்கின்றது. அம்புலியை ஆட அழைக்கும்போது தாய் நால்வகை உபாயங்களைக் கையாளுகின்றாள். சாம, பேத, தான, தண்டம் என அவற்றைக் காட்டுவர். இன்னின்ன வகையில் நீயும் என் செல்வனும் ஒத்திருக்கின்ற காரணத்தினால் உன்னைத் தனக்குச் சரிநிகர் சமானமாக எண்ணி விளையாட அழைப்பதை அறிந்து ஒத்தவருடன் விளையாட வா என அழைப்பது முதல்நிலை. நீயும் இவனும் இன்னின்ன வகையில் வேறுபடுகின்றீர்கள், என்றாலும் இவன் அருள் உள்ளம் வாய்ந்தவன் ஆதலின் விளையாட அழைக்கின்றான், ஆகவே வருக என அழைப்பது இரண்டாம் நிலை. நீ இவனோடு விளையாடவரின் இன்னின்ன நலன்களைப் பெறுவாய் எனக் காட்டுவது மூன்றாவது நிலை. இத்தனை வகையில் வருந்தி அழைத்தும் வாராது ஒழியின் இன்னின்ன வகையில் தண்டனை பெறுவாய் என்று ஒறுக்கும்முகத்தான் அழைப்பது நான்காம் நிலை. இவ்வாறு நால்வகை உபாயங்களால் அழைக்கும்போது சிலேடை முதலிய அணி இலக்கியங்களால் அழகுற அமையப் பாடும் புலவர்தம் திறத்தினைக் காணலாம்.

## இறுதியில் அமையும் மூன்று பருவங்கள்

அடுத்து வருகின்ற மூன்று பருவங்களும் ஆணுக்கும் பெண்ணுக்கும் வேறுபடுகின்றன. அம்புலி அழைக்கும் வரைக்கும் ஆண் குழந்தைக்கும் பெண் குழந்தைக்கும் வேறுபாடில்லை. வளர்ச்சி அடைய

அடைய இருவேறு குழந்தைகளின் மனநிலைகளும் மாறுபடுகின்றன. மகளிர் கட்டிய சிற்றிலை விளையாட்டாக அழிப்பதும், சிறுபறை முழக்குவதும், சிறுதேர் உருட்டுவதும் ஆண்மகன் செயலாகின்றன. பெண்மக்களோ? அம்மானை ஆடி, நீராடல் புரிந்து, ஊசல் விளையாட்டை விரும்பிச் செய்வர். இந்த நிலைகளை நோக்கின் 3, 5, 7,ம் ஆண்டிலும் ஆகும் என்ற இலக்கண விளக்கப் பாட்டியலின் வயது எல்லையே இவற்றிற்குப் பொருத்தமாகும் என்று கொள்வதில் தவறில்லை.

தெருவில் சிறுபெண்கள் மணல்வீடு கட்டி. நிலாச் சோறு செய்து விளையாடுவது வழக்கம். நிலாவினை வருக என அழைத்தும் வராமையாலே துணுக்குற்ற ஆண் குழந்தையின் உள்ளம் தன் கோபத்தை வேறு வகையில் காட்ட எண்ணியிருக்கும். அந்நிலையில் பெண்குழந்தைகளின் மணல்வீடுகளும் அவன் கால் விளையாட்டிற்கு இலக்காகும். அதுகாலை அப் பெண்கள் அவனை அவற்றை அழிக்காதிருக்குமாறு வேண்டுவதே சிற்றில் பருவம். இப்பருவத்தில் பல அடியவர்கள் தம் வாழ்வாம் சிற்றில் அமைப்பைப் பல்வகையில் அழிக்காதிருக்குமாறு தம் பாட்டுடைத் தலைவரை வேண்டுவர். அடுத்து, சிறுபறை முழக்கியும், சிறு தேர் உருட்டியும், தெருவில் விளையாடும் இரண்டு நிலைகளையும் இரண்டு பருவங்களில் ஆசிரியர்கள் நன்குவிளக்குவர்.

## பிள்ளைத்தமிழ் நூல்கள்

இத்தன்மையைப் பிள்ளைமையின் செழிப்பை எல்லாம் செந்தமிழில் காட்டிய பிள்ளைத்தமிழ் நூல்கள் பல. அவற்றுள் சிறந்தனவாகப் போற்றப் பெறுவன குமரகுருபரரின் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், முத்துக்குமார சுவாமிப் பிள்ளைத்தமிழ், பகழிக் கூத்தரின் திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ், அமுதாம்பிகைப் பிள்ளைத்தமிழ், திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ், சேக்கிழார் பிள்ளைத்தமிழ், போன்றவையாம். மீனாட்சி அம்மைப் பிள்ளைத்தமிழ், அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ், அகிலாண்ட நாயகி பிள்ளைத்தமிழ் என்ற மூன்றும் பெண்பாற் பிள்ளைத்தமிழாம்.

## சங்க இலக்கியத்தில் இடம்பெறும் பிள்ளைத்தமிழ்ப் பருவங்கள்

சங்க இலக்கியத்தில் இடம்பெறும் பிள்ளைத் தமிழ்ப் பருவங்களாக வாரானை, சிறுபறை, சிற்றில் சிதைத்தல், சிறுதேர் உருட்டல், அம்மானை, நீராடல் முதலியன அமைகின்றன.

பாண்டியன் அறிவுடை நம்பியின் பாடலான 'படைப்பும் பல படைத்துப் பலரோடு உண்ணும்' என்ற பாடலில் வாரானைப் பருவத்தில் குறிப்பு அமைகிறது.

அகநானூறு 54ஆம் பாடலில் அம்புலிப் பருவம் பற்றிய குறிப்பு இடம் பெறுகிறது.

சிறுபறை பற்றிய குறிப்பு சிறுபாணாற்றுப் படையில் அமைகிறது. குழந்தை கிலுகிலு வைத்து ஆடுதல் குறிக்கப்படுகிறது.

**நோன்பகட்டுமணர் ஒழுகையொடு வந்த**
**மகாஅரன்ன மந்தி மடவோர்**
**நகாஅரன்ன நளிநீர் முத்தம்**
**வாள்வாய் எருந்தின் வயிற்றகத் தடக்கி**
**......................................**
**கினர்பூண் புதல்வரொடு கிலுகிலி யாடும்**

என்பது சிறுபறை பற்றிய குறிப்புடன் ஒத்து அமைகிறது

**சுடர்த்தொடீஇ கேளாய் தெருவில் நாமாடும்**
**மணற்சிற்றில் காலிற் சிதையா அடைச்சிய**
**வரிபந்து கொண்டோடி நோதக்க சிறுபட்டி**

**—கலி.54**

என்னும் கலித்தொகைப் பாடல் சிற்றில் பருவத்திற்கு வித்தாக அமைகிறது.

**சிற்றில் சிதைத்தும் சிறுசோறு குவைஇயும்**

**—அகம்.1**

என்பது அகம்.

**தச்சன் செய்த சிறுமா வையம்**
**ஊர்ந்தின்புறாஅர் ஆயினும் கையில்**
**ஈர்த்தின்புறூஉம் இளையோர் போல.**

**—குறுந்.16**

**நேரிழை மகளி ருணங்குணாங் கவரும்**
**கோழி யெறிந்த பொற்காற் கணங்குழை**
**பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டும்**
**முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்**
**விலங்குபகை அல்லது கலங்கு பகை அறியா**

**—பட்டினப்பாலை**

என்னும் சங்கப் பாடல்கள் சிறுதேர்ப் பருவத்திற்குக் கால்கோள் செய்கின்றன.

பெண்பாற் பிள்ளைத்தமிழில் இடம்பெறும் அம்மானை பற்றிய செய்திகளை பெரும்பாணாற்றுப் படை, சிலப்பதிகாரம் (வரந்தரு காதை) இவற்றில் இடம் பெறுகின்றன.

பெண்கள் நீராடல் பற்றிய குறிப்பு குறிஞ்சிப் பாட்டு, திருப்பாவை, திருவெம்பாவை இவற்றில் காண்ப்படுகிறது.

**மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேரென்னக்**
**கையாற் குடைந்து கடைந்துள் கழல்காடி**

என்ற பாவைப் பாடல் இதனை உணர்த்துகின்றது.

**முடிவுரை**

இவ்வாறாகத் தொல்காப்பியனார் காலத்தில் வித்திடப் பெற்ற பிள்ளைத்தமிழ் இலக்கியம் காலம் தோறும் அமைந்து பிற்காலத்தில் சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்றாகத் திகழும் பெற்றியினைப் பெற்றுத் துலங்குகிறது.

# 6. திருமூலர் தெளிவுறுத்தும் வாழ்க்கை நெறி

இவ்வுலகில் நாள்தோறும் எண்ணற்ற உயிர் இனங்கள் பிறக்கின்றன; இறக்கின்றன. இவ்வுலகின் நியதியே பிறப்பும் இறப்புமாய் அமைவதனைக் காணலாம். இவ்வுலகில் பிறக்கும் உயிர்கள் அனைத்தும் உண்டு வாழ்ந்து இறுதியில் முடிகின்றன. பிறப்பதும் இறப்பதுமேதாம் வாழ்க்கையா என்ற வினா எழுகின்றது. 'தோற்றம் உண்டேல் முடிவும் உண்டு' என்பதே வாழ்வின் நியதியாகும். வான வீதியில் வலம் வரும் திங்களாம் சந்திரனும் இதனை உலக மக்களுக்கு உணர்த்தி வருகிறான். மாதத்தில் பதினான்கு நாட்கள் வளர்வதும் பின் பதினான்கு நாட்கள் தேய்வதும் நிலாவின் நியதியாக அமைகிறது.

**தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்**
**மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்**
**அறியா தோரையும் அறியக் காட்டித்**
**திங்கள் புத்தேள் திரிதரும் உலகம்**

**—*புறநானூறு*: 27 : 11—14**

என்று புறநானூறு நிலவின் நியதியாகவும், ஏன்? வாழ்க்கையின் "நியதியாகவும் அமையும் ஒன்றனைப் புலப்படுத்துகின்றது. நிலையாமை ஒன்றனை

வற்புறுத்தும் நாலடியார் பாட்டொன்றும் இவ் வகையிலேயே அமைந்திருக்கக் காணலாம். "நின்றான் இருந்தான் கிடந்தான், கேள் அலறச் சென்றான்" எனும் வகையில் நிலையாமையினை வற்புறுத்தி இருக்கக் காணலாம். தெய்வப்புலவர் திருவள்ளுவனாரும் நேற்று இருந்தவன் ஒருவன் இன்று இல்லை என்பதே இவ்வுலகிற்குப் பெருமையாக அமைகிறது என்ற கருத்தில்,

**நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்**
**பெருமை யுடைத்திவ் வுலகு**

**—திருக்குறள் : 336**

என்ற திருக்குறளை யாத்துள்ளார். "நேற்றைக் கிருந்தாரை இன்றைக் கிருப்பார் என்று எண்ணவோ சதமில்லை நெஞ்சே!' என்று ஆன்றோர்கள் அருளிச் சென்ற மணிமொழியினையும் ஈண்டு நோக்குக. இதனையே 'பலர்செலத் தான் செல்லாக் காடு வாழ்த்து' எனப் பழமை காட்டுகிறது தொல்காப்பியம். தான் இருந்த இடத்திலேயே இருந்து மற்றவரைத் தன்பால் அழைத்துக் கொள்ளும் தகுதி இடுகாட்டிற்கும் சுடுகாட்டிற்கும் அமைந்திருப்பதனாலேயே அவற்றை 'நன்காடு' என்ற மங்கலச் சொல்லால் 'மங்கல வழக்கு' என இலக்கணமும் இடமளித்தது. அதனையே 'நில்லா வுலகின் நிலைமை' என்பர்.

இந்த நிலையாமையினைத் தமிழ்ப் புலவர்கள் பலர் காலங்காலமாக வற்புறுத்தி வருகின்றனர். நிலையாமையினைத் தெரிந்து கொள்கிறபொழுதுதான் இவ்வுலகில் நிலைத்த சில செயல்களைச் செய்ய முடியும்.

**மன்னா வுலகில் மன்னுதல் குறித்தோர்**
**தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே**

என்று புறப்பாட்டு புகல்வதும் இதனையே வலியுறுத்தும். நிலையாமையினைத் திருமூலர் என்னும் தவஞானியர்போல் மக்கள் மனத்தில் எளிதிற் பதியும் வண்ணம உலகிற்கு உணர்த்தியவர் எவரும் இல்லை என எளிதில் இயம்பிவிடலாம். பன்னெடுங் காலம் யோக நித்திரையிலும் தவ நிலையிலும் தம் வாழ்வைக் கழித்த திருமூலர் அன்றாட வாழ்க்கையில் நிகழும் எளியதொரு நிகழ்ச்சியைக் கொண்டே உலகிற் பிறந்த எவரும் புரிந்து கொள்ள வேண்டிய நிலையாமைத் தத்துவத்தினை — கோட்பாட்டினை உணர்த்தியுள்ளார்.

மனிதர் இவ்வுலகில் ஓயாமல் எஞ்ஞான்றும் உழைத்துக் கொண்டிருப்பது வயிற்றுப் பாட்டுக்கே என்பது எளிதில் புலப்படும் செய்தியாகும். 'உண்பது நாழி உடுப்பது நான்கு முழம் எண்பதுகோடி நினைந்து எண்ணுவன'வாயிருக்கும் உலகத்தில் பெயரி புரட்சி செய்யும் வயிறு, 'ஒருநாள் உணவை ஒழிப்ப தில்லை; இருநாளைக்கு ஏல் என்றால் ஏற்றுக் கொள்வதில்லை.' எனவேதான் 'இடும்பை கூர் என் வயிறே உன்னோடு வாழ்தல் அரிது' எனப் புகன்றார் ஆன்ற தமிழ்ப் புலவர் ஒருவர். எனவே வயிறுகொண்டு சுவையான உணவு உண்ணுவற்தகே மனிதன் ஆசைப்படுகின்றான். இல்லறத்தின் பயனே இந்நல்ல சுவையான உணவு உண்ணுதலைக் கொள்கையாகக் கொண்டுள்ளது. நல்லதோர் இல்லறம் ஒன்றனைக் காட்ட நினைக்கும் கூடலூர்கிழார் என்னும் குறுந்தொகைப் புலவர் பின்வரும் காட்சி யினைக் காட்டுகின்றார்,

புதுவதாக மணம்புரிந்து கொண்ட இனிய இளைய இல்லாள் ஒருத்தி தன் கணவன் உண்ணும் பொருட்டு அவன் பெரிதும் விரும்பும் மோர்க்குழம்பினைப் பக்குவமாகக் கூட்டினாள். கட்டித் தயிரினைத் தன் காந்தள் மலரொத்த மென்கைகளாற் பிசைந்து எடுத்துக் கொண்டு மோர்க் குழம்பாக்கினாள். தயிர் பிசைந்த கைகளைத் தன் சேலையில் துடைத்துக் கொண்டு, தாளிப்பு நேரம் வந்துவிட, தன் குவளைக் கண்களில் சூழும் புகை முழுவதையும் பொருட்படுத்தாமல் மோர்க் குழம்பு கூட்டுவதிலேயே கருத்தாயிருந்தாள். கணவன் உணவிற்கென வந்து உட்காரத் தான் அரும் முயற்சி மேற்கொண்டு கனிவுடன் கூட்டிய மோர்க்குழம்பினை உண்கலத்தில் பரிமாறினாள். மோர்க்குழம்பின் இனிய சுவை கணவன் உள்ளத்தில் மகிழ்ச்சியை மிகுவித்தது. எனவே 'இனிது இனிது' என்று மோர்க்குழம்பின் சுவையைப் பாராட்டிக் கொண்டே மனைவிமாட்டுத் தன் பாராட்டைப் புலப்படுத்தினான். பாராட்டைக் கேட்ட மனைவியின் முகம் நுண்மையாக மலர்ந்தது. இவ்வினிய இல்லறக் காட்சியைப் புலப்படுத்தும் 'நல்ல குறுந்தொகை'யின் நல்ல பாட்டு வருமாறு:

**முளிதயிர்ப் பிசைந்த காந்தள் மெல்விரல்**
**கழுவுறு கலிங்கம் கழாஅ துடீஇக்**
**குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்**
**தான்துழந் தட்ட தீம்புளிப் பாகர்**
**இனிதெனக் கணவன் உண்டலின்**
**நுண்ணிதின் மகிழ்ந்தன்று உண்ணுதல் முகனே.**

—குறுந்தொகை; 167

எனவேதான் கோசலை நாடுடை வள்ளல் இராமபிரானைப் பிரிந்திருக்கும் அசோகவனச் சீதையும் தன் வருத்த நிலையை மாருதிக்குப் புலப்படுத்தும்

கோலத்தில் நிற்கும் நிலையினைக் கம்பநாடர் பின் வருமாறு காட்டுவர்.

**அருந்தும் மெல்லடகு யாரிட**
**அருந்துமோ என்று அழுங்கும்**
**விருந்து கண்டபோது**
**என்னுறுமோ என்று விம்மும்**
**மருந்தும் உண்டுகொல்**
**யான்கொண்ட நோய்க்கு என்று மயங்கும்**
**இருந்த மாநிலம் செல்லரித்திடவும்**
**ஆண்டெழாதாள்.**

*—கம்பராமாயணம்;*
*சுந்தர காண்டம்; காட்சிப் படலம்;* 15

என்று தவம் செய்த தையலாம் சனகன் மகளைக் காட்டுகின்றபோது, தான் இராமபிராமனுக்கு விருப்ப மான இலையமுதைச் சமைத்துப் போட இயலாத நிலையினையே முதற்கண் சுட்டியதனைக் காண்க.

கோவலன் மதுரை ஆயர்பாடியில் மாதவி வீட்டி லிருந்து சிலம்பு விற்பதற்காகக் கண்ணகியிடமிருந்து விடைபெற்றுச் செல்லுமுன், சிலம்பு தந்த செந்தமிழ்க் கவிஞர் இளங்கோவடிகள் கண்ணகி கோவலன் பொருட்டுச் சமைத்து அறுசுவை உணவு படைத்த அருங்காட்சியினையே நமக்குக் காட்டுகின்றார். குமரி வாழையின் குருத்தையரிந்து தாலத் தடுக்கிட்டுப் பரிமாறி அம்மென்திரையலோடு அடைக்காய் ஈந்த திறத்தினை இளங்கோவடிகளின் இன்தமிழ்ச் சொற் களில் கண்டு சுவைக்க வேண்டும்.

எனவே திருமூலர் நிலையாமையினை உணர்த்து வதற்குத் தேர்ந்தெடுத்த காட்சியிலும் இந்தக் காட்சி இடம்பெறத் தவறவில்லை. அரிதில் முயன்று

பொருளீட்டி வந்த கணவன் மனைவியிடம் அவற்றைத் தந்து சிறந்த முறையில் அன்று உணவு அமைய வேண்டும் என்று குறிப்பிட்டான். தமிழ்நாட்டு மகளிர் சமையற்கலையில் வல்லுநரன்றோ? அதிலும் கணவன் அகமும் முகமும் மலர அருமையாகச் சமைத்து அன்போடு பரிமாறிப் பண்போடு உபசரிப்பதில் உலகின் முன்னணியில் நிற்பவரன்றோ? எனவே மங்கை நல்லாளும் தன் கைத்திறமெல்லாம் காட்டி, கைப்பாகமெல்லாம் கூட்டிச் சமைத்திருந்தாள். கணவனும் மிக விரும்பியுண்டான். உண்டவுடன் கணவனும் மனைவியும் மகிழ்ந்து பேசிக் கொண்டு இருந்தார்கள். கணவனுக்கு மனைவி வெற்றிலை மடித்துச் சுவைக்கக் கொடுத்துக் கொண்டிருந்தாள். இவ்வாறான மயக்கம், நிலை சற்று நேரமே நீடித்தது. திடீரென்று கணவன் தன் இடப்பக்க மார்பு சிறிது வலிக்கிறது என்றான். மனைவி மருத்துவர் உதவியினை நாடிப் பெறுவதற்கு முன்னாலேயே கீழே சாய்ந்து படுத்தான். அவ்வளவில் அவன் உயிர் உடற் கூட்டை விட்டுப்பறந்து சென்றது. இதனைத் திருமூலர் பின்வருமாறு குறிப்பிடுவர்.

**அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்**
**மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டார்**
**இடப்பக்க மேஇறை நொந் ததுஎன்றார்**
**கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே.**

**—திருமந்திரம்! 148**

இவ்வளவோடு நின்று விடுகின்றாரா திருமூலர் என்றால் இல்லை. மேலும் உடம்பு நீறாகி மற்றவர் நினைப்பு வேறாகும் வரை காட்சித் திரையைக் காட்டுகின்றார். இறந்தவனைச் சுற்றி உற்றாரும் உறவினரும் நண்பரும் நாட்டாரும் ஒலியெழுப்பி

அழுகின்றனர். இதுவரை பெற்றோரிட்ட பெயரும், மற்றோரிட்ட பெயரும், பெற்ற பட்டப் பெயர்களும் ஒருங்கே நீக்கப் பெற்றுப் பிணம் என்றே எல்லோரும் அழைக்கும் நிலை வந்தெய்துகின்றது. அம்மட்டோ! சுடுகாட்டிற்குச் சுமந்து சென்று அங்கே சுடலையில் வைத்து இதுகாறும் அரிதின் முயன்று அழகுபடுத்தப் பட்டுக் காக்கப்பட்டு வந்த உடலைத் தீக்கிரையாக்கு கிறார்கள். அவ்வாறு உடலுக்குத் தீ மூட்டிய உறவினரும் மற்றோரும் திட்டுப் போக நீரில் மூழ்கிக் குளித்து இறந்தவனைப் பற்றிய நினைப்பையும் ஒழித்து விடுகிறார்கள் என்கிறார் திருமூலர்.

**ஊரெல்லாம் கூடி ஒலிக்க அழுதிட்டுப்**
**பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்**
**சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு**
**நீரினில் மூழ்கி நினைப் பொழிந் தார்களே.**

—திருமந்திரம்: 145

எனவே நில்லாமையே நிலைபெற்றிருக்கின்ற இவ்வுலகத்தில் மக்கள் செய்ய வேண்டிய செயல்களைப் புலப்படுத்தி, அவர்கள் வாழ வேண்டிய நெறியினை வகையுற எடுத்தோதுகின்றார் திருமூலர்.

தமிழர் பண்பாட்டின் அடிப்படையே தெய்வம் உண்டு என்று தெளிந்து அதனை வந்தித்து வணங்குவது ஆகும். ''தெய்வம் உண்டென்றிரு; தெய்வம் ஒன்றென்றிரு'' என்பது தமிழ் வழக்கு. ''ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'' என்பது திருமூலர் வாக்கு.

**உயிர்களிடத்தில் அன்புவேணும்; தெய்வம்**
**உண்மையென்று தானறிதல் வேணும்**
**வயிரமுடைய நெஞ்சுவேணும்; இது**
**வாழும் முறைமையடி பாப்பா**

—பாப்பாப் பாட்டு

என்பது பாரதியார் கண்ட வாழ்க்கை நெறி.

திருமூலரும் தெய்வ நம்பிக்கையை முதலாவது வற்புறுத்துகின்றார். அவ்விறைவனைப் பத்திரம் கொண்டு வணங்கி நிற்றல் வேண்டும் என்கிறார். ஆண்டவன் அடியிணைகளுக்கு மலரிட்டு அருச்சனை செய்வதே மன்னுயிர் தழைக்கும் நெறி என்றாலுங்கூட மலருக்கென்று முயற்சி வேண்டும். எனவேதான் ஈழத்துத் தமிழறிஞர் சுவாமி விபுலானந்தர்,

**வெள்ளைநிற மல்லிகையோ வேறெந்த மாமலரோ**
**வள்ளல் அடியிணைக்கு வாய்த்த மலரெதுவோ**
**வெள்ள நிறப் பூவுமல்ல வேறெந்த மலருமல்ல**
**உள்ளக் கமலமடி உத்தமனார் வேண்டுவது**

என்று கூறி, உள்ளத்தை ஒருமுகப்படுத்தி, காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்க நின்று கடவுளை வணங்குவதே நெறி என்பதனைப் புலப்படுத்தியுள்ளார். அம்முறையில் திருமூலரும் நெஞ்சக் கனிவோடு எளிய பத்திரங் கொண்டும் இறைவனை அருச்சித்து அவன் அருளுக்கு ஆளாகலாம் என்பதனைப் புலப்படுத்துகின்றார். இதனையே,

**யாவர்க்கு மாம்இறைவற் கொருபச்சிலை**

என்றார்.

மாந்தருக்குப் பெரிதும் துணையாய் அமைவது பசுக்களாகும். 'மாடு' என்ற சொல்லிற்குச் செல்வம்

என்பது பொருளாகும். பழங்காலத்தில் ஒருவரிடத்தில் மாடுகளைக் கொண்டே அவர்தம் செல்வ வளத்தைக் கணக்கிட்டனர். ஒரு பசுவால் வரும் வருவாயைக் கொண்டு வாழும் வாழ்க்கை புல்லிய வாழ்க்கையெனக் கருதப்பட்டது. இதனை 'ஓரான் வல்கிச் சீறில் வாழ்க்கை' என்ற தொடர் தெரிவிக்கின்றது. ஒரு நாட்டின் செல்வம் பசுவெனக் கருதப்பட்டமையால் அரசனின் செல்வக் களஞ்சியம் பசு மந்தைக் கூட்டம் என ஆனது. எனவே அந்நாளைய போரின் தொடக்கம் பகைவன் நாட்டின் பசு மந்தைத்திரளை ஓர் அரசன் தன் நாட்டிற்குக் கவர்ந்து வந்து விடுவதேயாகும் எனக் கருதப்பட்டது. கொடுங்கோல் மன்னன் ஆட்சி செலுத்தும் நாட்டில் பசுக்கள் பால் தரமாட்டா; அந்தணர் மறையோதுதலை மறந்து விடுவர்; செங்கோல் வேந்தன் சிறப்புற நாட்டைக் காத்தலை விட்டுக் கொடுங்கோல் வேந்தனாகப் போய்விடுவானே யானால் என்று திருக்குறள் குறிப்பிடுகின்றது.

> **ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்**
> **காவலன் காவான் எனின்**
>
> —திருக்குறள் : 560

என்று திருக்குறள் மொழிவதனைக் காண ஆநிரையின் சிறப்புப் புலப்படும். போர் எச்சரிக்கை செய்யும் அரசன் முதலாவது பகைவன் நாட்டிலுள்ள பசுக்களைப் பாதுகாப்பான இடத்திற்கு அனுப்புமாறு ஏற்பாடு செய்துவிடுவான். பசுக்கள், பசுக்களையொத்த பார்ப்பன மாக்கள், மகளிர், நோய்வாய்ப்பட்டோர், திருமணமாகியும் இன்னும் குழந்தைப் பேற்றினைப் பெறாதோர் ஆகியோர் அனைவரும் பாதுகாப்பான இடத்திற்குப் போய் விடட்டும் என்று அறத்தின் வழி

யிலே எச்சரிக்கை செய்து முடித்த பிறகே போர் தொடங்கப் பெறும் என்பர்.

**ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்**
**பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்**
**தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்**
**பொன்போற் புதல்வர்ப் பெறா அதீரும**
**எம்அம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மினென**
**அறத்தாறு நுவலும் பூட்கை மரம்**

—புறநானூறு 9 : 1—6

எனப் புறநானூறு புலப்படுத்துவதனைக் காண்க. எனவே திருமூலரும்,

**யாவர்க்கு மாம்பசுவுக்கொரு வாயுறை**

என்று கூறுகிறார். பசுவைக் கண்டால் ஒரு புல்லை எடுத்துப் போட்டு உன் அறவுணர்வைப் புலப்படுத்து என்று குறிப்பிடுகின்றார் திருமூலர்.

மூன்றாவதாக ஒருவர் உண்ணுமுன் பிறர்க்கென ஒரு பிடி சோற்றைத் தந்துவிட்டு உண்ண வேண்டும் என்று திருமூலர் குறிப்பிடுவார். "பசி என்று வந்தவர்க்குப் புசி என்று ஒரு பிடி கொடுத்துப் பாரப்பா" என்கிறார் இக்காலக் கவிஞர் ஒருவர். எல்லா நூல்களின் சாரமாகவும் இலங்கும் கொள்கை, தமக்குக் கிடைத்த உணவினைப் பிறருக்கும் பகிர்ந்து கொடுத்து வாழ வேண்டும் என்பதாகும் என்கிறது உலகப் பொதுமறையெனக் கொள்ளத்தகும் திருக்குறள்.

**பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்**
**தொகுத்தவற்றுள் எல்லாம் தலை.**

—திருக்குறள் : 322

எனவே தமக்குக் கிடைத்த உணவின் ஒரு பகுதியினை பிறர்க்கென வழங்கும் பெருமனம் வேண்டும் என்பார் திருமூலர்.

**யாவர்க்கு மாம்உண்ணும் போது ஒருகைப்பிடி.**

திருவள்ளுவர் பெருமான் இவ்வுலக மக்கள் இன் சொலால் மட்டுமே மகிழ்வெய்துவர் என்பதனைப் புலப்படுத்துவார். இனிய சொற்கள் இருக்கக் கடுஞ் சொற்களைப் பேசுவது, உண்ணுவதற்குக் கனி இருப்பக் காயினை விரும்பி உண்ணுவதனையொக்கும் என்பர்.

**இனிய உளவாக இன்னாத கூறல்**
**கனியிருப்பக் காய்கவர்ந் தற்று**

—திருக்குறள் : 100

இதனையே பிறிதொரு கவிஞர் ஒருவர்,

**இன்சொலால் அன்றி இருநீர் வியனுலகம்**
**வன்சொலால் என்றும் மகிழாதே**

என்பார். ஆதலின் வாயால் இன்சொல்லினையே விரும்பிப் பேச வேண்டும் என்றாகின்றது. பாரதி கூட மக்களைப் பார்த்து,

**நிதிமிகுந்தவர் பொற்குவை தாரீர்**

என்று தொடங்கி, இறுதியில்

**அதுவுமற்றவர் வாய்ச்சொல் அருளுவீர்**

என்று முடிக்கின்றார்.

எனவே பிறர் மனம் வருந்தப் பேசாமல் அவர் மனம் உவக்கப் பேசும் திறத்தில் வல்லவராகத் திகழ வேண்டும். இதனையே திருமூலர் பெருமாள்,

யாவர்க்குமாம் பிறர்க்கின்னுரை தானே

என்கிறார்.

இப்பொழுது திருமூலர் தெளிவுறுத்தும் வாழ்க்கைக் கோட்பாட்டினை ஒருசேரக் காண்போம். நாம் வணங்கும் இறைவனின் இணையடிகளில் பத்திர மிட்டு வணங்குதலும், நாம் காணும் வாயற்று உயிர் இனமாம் பசுவிற்கு உண்பதற்கென ஒரு புல்லும், நாம் உண்ணும்பொழுது அவவாறு உண்ணாத நிலையில் உயிர்க்கும் சகோதர அன்பர்களுக்கென ஒரு வாய்ச் சோறும், பிறர் மனம் மகிழ்வதற்கென இன்சொற்களும் வேண்டற்பாலன என்பதனையே பின்வரும் பாடலில் திருமூலர் பெருமான் தெளிவுறுத்துகின்றார்.

யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை
யாவர்க்கு மாம்உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம்பிறாக் கின்னுரை தானே.

—திருமந்திரம்: 252

இவ்வாறாகத் தவஞான யோகியாம் திருமூலர் பெருமான் இவ்வுலக வாழ்வின் நிலையாமையினைப் பசுமரத்தாணியென மனத்திற் பதியும் வண்ணம் தெள்ளத் தெளிய உணர்த்திப் பின் வையத்துள் வாழ்வாங்கு வாழும் நெறியினை வகையுறப் புலப் படுத்துகின்றார். திருமூலர் தெளிவுறுத்தும் வாழ்க்கை நெறி, செம்மையும் சிறப்பும், தூய்மையும் துகளறு நிலையும் கொண்ட வாழ்க்கை நெறியாக இன்றைக்கும் துலங்குவதனைக் காணலாம்.

# 7. தமிழ் இலக்கியத்தில் இராதை

## வைணவ சமயம்

உயர்வற உயர்நலம் உடையவன் எவன் அவன்
மயர்வற மதிநலம் அருளினன் எவன் அவன்
அயர்வறும் அமரர்கள் அதிபதி எவன் அவன்
துயர் அறு சுடர் அடி தொழுதுஎழு மனனே

என்றார் நம்மாழ்வார்.

இந்தப் பாசுரத்தில், பகவானாம் திருமால் தன்னைக் காட்டிலும் உயர்ந்தது எதுவும் இல்லாதபடி உயர்ந்தவன், முடிவில்லாத திருக்கலியாண குணங்களையுடையவன், அஞ்ஞானம் ஒழிந்து போம்படி ஞானத்தையும் பக்தியையும் அருளுபவன், மறப்பு இலலாத நித்திய சூரிகளுக்குத் தலைவன் என்று பலவாறு கூறப் படுகின்றது.

வாழ்க்கைக்கு இயல்பாயுள்ள இன்பதுன்பங்கள் தன்னைச் சாராதபடி கடந்து நிற்பவன் கடவுள். யாவற்றையும் கடந்து கல்லாவற்றிலும், ஊடுருவி நிற்கும் கடவுள் நாராயணன்—நாரங்களை அதாவது மன்னுயிர்களை எல்லாம் தான் தங்கியிருக்கும் இடமாகக் கொண்டவன். இந்நாராயணனையே எங்கும்

வியாபித்திருக்கும் காரணம் பற்றி விஷ்ணு என்பர். விஷ்ணுவைப் பற்றிய சமயம் வைணவம்.[1]

வைணவ சமயம் தமிழகத்தில் கடவுள் வழிபாடு தோன்றிய காலந் தொடங்கி உள்ளது.

சான்று

1. மாயோன் மேய காடுறை உலகமும்

—தொல்காப்பியம்

2. கடுந்தேர் இராமன் உடன்புணர் சீதையை
வலித்தகை அரக்கன் வெளவிய ஞான்றை
நிலம்சேர் மதர்அணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை.

—புறநானூறு

3. வென்வேல் கவுரியர் தொன்முது கோடி
முழங்கு இரும் பெளவம் இரங்கும் முன்துறை
வெல்போர் இராமன் அருமறைக்கு அவித்த
பல்வீழ் ஆலம்.

—அகநானூறு

4. மடிஇலா மன்னவன் எய்தும் அடிஅளந்தான்
தாஅயது எல்லாம் ஒருங்கு

தாம் வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு.

—திருக்குறள்

இவ்வாறே சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்களிலும் வைணவ சமயக் கடவுள் போற்றப் படுகின்றார்.

---

1. ஜி. எதிராஜுலு நாயுடு, பக்திப் பூங்கா, 'பக்தன்' காரியாலயம், சென்னை -5, 1950, பக் 1

## பண்டை வைணவத் தலங்கள்

திருமால வழிபாட்டுக்கான கோயில்கள் பண்டை முதல் தமிழ்நாட்டில் இருந்ததைச் சங்க நூல்கள் சாற்றுகின்றன.

மிகப் பழமையான விட்டுணுத் தலங்களாக நாம் காணக் கிடப்பவை, திருவேங்கடம், திருமாலிருஞ் சோலை, திருவரங்கம், காஞ்சிபுரம் ஆகியவையாம்.

## ஆழ்வார்கள்

திருமாலை வழிபட்டு வைணவ சமயத்திற்குப் புத்துணர்ச்சி அளித்த பக்தர்களே 'ஆழ்வார்கள்' எனப்படுபவர். இவர்கள் சர்வேஸ்வரனால் பக்தியும் ஞானமும் அருளப்பெற்று உலகுய்ய வந்த உத்தமர்கள் என்பது வைணவ சமயப் பெரியோர்களின் சித்தாந்தம்.

இவர்கள் வேதாந்த தத்துவங்களையும், பகவத் கீதையின் உபதேசத்தையும், தங்கள் அநுபவங்களை யும் திவ்யப் பிரபந்தப்பாசுரங்களாக அருளிச்செய்தனர்.

ஆழ்வார்களின் வைணவ சமய மறுமலர்ச்சி இயக்கம் காஞ்சிபுரத்தைத் தலைநகரமாகக் கொண்ட தொண்டைமண்டலத்தில் தொடங்கித் தாம்பிரபரணி ஆற்றினால் செழிப்புற்ற தென்பாண்டி நாடு வரை பரவி, வட நாடுகளிலும் சென்று பரவியது.

## கண்ணன்

திருமாலை ஆழ்வார்கள் கண்ணன் என்னும் திருப்பெயரால் போற்றினர். 'கண்ணழகன், எப்போதும் அடியார்களுக்குக் கண்போன்றவன், கண்ணிலே கருணை நிறைந்தவன்' என்னும் கருத்துகள் அமைய,

கண்ணுள்ளே நிற்கும் காதன்மையால் தொழில்
எண்ணி லும்வரும் என்னினி வேண்டுவம்
மண்ணும நீரு மெரியுமநல் வாயுவும்
விண்ணு மாய்வரி யுமெம்பி ரானையே?

—நம். திருவாய்மொழி 1: 10—2)

என்றார் நம்மாழ்வார்.

## திருமாலின் தேவியர்

திருமாலின் தேவியர் மூவர் எனக் குறிக்கின்றார் நம்மாழ்வார்.

உடனமர் காதல் மகளிர்
திருமகள், மண்மகள். ஆயர்
மடமகள் என்றிவர் மூவர்
ஆளும் உலகமும் மூன்றே
உடனவை யொக்க விழுங்கி
ஆலிலைச் சேர்ந்தவ னெம்மான்
கடல்மலி மாயப் பெருமான்
கண்ணனென் ஒக்கலை யானே

—நம். திரு. 1; 9: 4

என்னும் பாசுரத்தில் நம்மாழ்வார், தேவியர் மூவரை, அவர்களுடைய தகுதிச் சிறப்பு எளிதில் புலனாகும் வண்ணம் முறைப்படுத்திக் குறிப்பிட்டுள்ளார் என்பர்.[1]

முதலில் பெரிய பிராட்டியாகிய திருமகளை—இலக்குமியைக் குறிக்கின்றார்.

1. டாக்டர் க.த. திருநாவுக்கரசு, வாழ்வும் இலக்கியமும் 1979, பக். 51.

அடுத்து மண்மகளாகிய பூதேவியை—இளைய பிராட்டியைக் குறிக்கின்றார்.

பின்னர் ஆயர் மடமகள் குறிக்கப் பெறுகின்றார். முதலிருவரும் (திருமகள்—பெரிய பிராட்டி, மண்மகள் இளைய பிராட்டி) திருமாலின் இரு மனைவியராகப் போற்றுவது வைணவ மரபாகும்.

ஈண்டு ஆயர் மடமகள் என்பது ஆயர் குலக் கொழுந்தாகிய நப்பின்னையைக் குறிக்கின்ற தென்பர்.

கண்ணனாக இறைவன் இவ்வுலகில் தோன்றிய காலத்தில், ஆயர்குலக் கொழுந்தாகிய நப்பின்னைப் பிராட்டியைக் காதலித்து மணம் செய்துகொண்டார். இதனால் திருமாலிற்கு முத்தேவியரை மணவாட்டியராகக் கூறுவது தமிழ் மரபாக வளர்ந்து வந்துள்ளதைக் காணுகின்றோம்.[1]

தம்முடைய தன்மை விசேடங்களாலே, பகவானுடைய காதலுக்குரியவர்களான பட்டத்துத் தேவிமார்கள் மூவரோடும் இவர்க்கு உண்டான ஒப்புமை... வீறுடையவளாய்ப் பெரிய பிராட்டியாரைப் போன்று முடிக்கு உரியவளான ஸ்ரீ பூமிப் பிராட்டியாரோடு ஒத்த சிறப்பினை உடையவள் என்று சொல்லும்படி... நப்பின்னைப் பிராட்டிக்கே உரியதான கிருஷ்ணாவதாரத்திலும்'' என்னும் மணவாள மாமுனிகளின் உரைவிளக்கப் பகுதியும் தெளிவுறுத்துகின்றன.[2]

1. டாக்டர் க.த. திருநாவுக்கரசு, வாழ்வும் இலக்கியமும், 1979. பக், 51

2. ஆசாரிய ஹிருதயம், வியாக்கியானம் (தமிழா.பக்.305)

**ராதை யார்?**

கண்ணனைப் பற்றிக் குறிப்பிடும் போது அவனுடைய காதலியாக ராதையைக் குறிப்பிடுவர். இதுவும் கி.பி. பத்தாம் நூற்றாண்டிற்குப் பிறகு, வட இந்திய மொழிகளில் கண்ணனுடைய காதலியாக, ராதை எனும் ஆயர் மகள் சித்திரிக்கப்படுகிறாள். 'ராதா கிருஷ்ணன்' என்னும் தொடர், 'லட்சுமி நாராயணன்' 'சீதாராமன்' என்னும் தொடர்கள் போலப் பெண்மைக்கு ஏற்றம் தந்து ஆணின் பெயருக்கு முன்னமைந்து எழிலூட்டுகின்றமையை நோக்குக.

இத்தகு 'ராதை' நம் தேசியக் கற்பனையின் ஒரு 'புதிராக' இருக்கிறாள் என்பர் பேராசிரியர், டாக்டர் க.த. திருநாவுக்கரசு அவர்கள். ஏனெனில் அவள் வட இந்திய மொழிகளில் மட்டுமே கண்ணனுடைய காதலி யாக 'ராதை' என்னும் பெயரால் சித்திரிக்கப்படு கின்றாள். தமிழில் இப்பெயருடன் இவள் காணப்பட வில்லை.

அவ்வாறாயின் நப்பின்னைதான் ராதையா என்னும் ஐயம் நமக்கு எழுவது இயல்பேயாகும்.

**நப்பின்னை ராதையா?**

"நப்பின்னை கண்ணன் தேவியரில் ஒருத்தி. இவளை நீளாதேவியின் அவதாரம் என்பர்" என்று பொருள் கூறுகின்றது அபிதான சிந்தாமணி. 'நீளா தேவி' என்பதற்கு 'விஷ்ணுமூர்த்தியின் சக்தி' என்று பொருள் சொல்லுகின்றது.

'இராதை' என்பதற்கும் 'கண்ணன் தேவியரில் ஒருத்தி' என்றே பொருள் கூறுகின்றது. ஆனால்

இந்தப் பெயர்வழக்கு வடமொழி இலக்கியங்களிலேயே காணக் கிடைக்கின்றது.

வட இந்திய மொழிகளில் கண்ணனுடைய காதலியாக, ஆயர்மகளாகச் சித்திரிக்கப்படுகிறாள். அவள் நப்பின்னையைப் போன்ற பேரழகியாகவும் காட்சி தருகிறாள். இராதையின் தோற்றம் பற்றி ஒன்றும் தெளிவாகத் தெரியவில்லை.

கண்ணனுடன் சிறுவயதில், ஆயர்பாடியில் ஆடிப் பாடி மகிழ்ந்த கோபியருள், கண்ணனுடைய உள்ளத்தைக் கவர்ந்த ஓர் அழகியைப் பாகவத புராணம் சிறப்பித்துப் பேசுகிறது.

இராதை கண்ணனைவிட வயதில் மூத்தவள், திருமணம் ஆனவள். அவளிடம் நெஞ்சைப் பறி கொடுத்த கண்ணன், அவளைத் தன் காதலியாகப் போற்றி வாழ்ந்தான்; 'இராதாகிருஷ்ணன்' என்று சொல்லும் சிறப்பும் பெற்றான்.

பாகவத புராணத்தில் ஒரு செய்தி சொல்லப் படுகின்றது. அதாவது, இராதையிடம் நெஞ்சைப் பறிகொடுத்த கண்ணன் அவளைத் தன் காதலியாகப் போற்றி வாழ்ந்தான். ஒரு நாள், அவளைத் தனியே காட்டிற்குள் அழைத்துச் சென்று, கண்ணன் களியாட்டத்தில் ஈடுபட்டதாகவும் அப்புராணம் பேசுகிறது.[1]

இந்த ஒரு நிகழ்ச்சி தமிழ் இலக்கியத்திலும் காணப் படுகின்றமை நோக்கத் தக்கது.

---

1. Bhagavata Puranam, Eng. Trans. Swami Vijananda Allahabad, 1921-23, 10, 30—31.

**தொத்தார் பூங்குழல் கன்னி யொருத்தியைச்**
**சோலைத் தடங்கொண்டு புக்கு**
**முத்தார் கொங்கை புணர்ந்திரா நாழிகை**
**மூவேழு சென்றபின் வந்தாய்**

என்று கூறுகின்றது நாலாயிர திவ்வியப் பிரபந்தம். பெரியாழ்வார் குறிப்பிடும் இந்தச் செய்தியும் பாகவத புராணக் கருத்தும் ஒன்றாக இருத்தல் கூடும் என்று அறிஞர் ஒப்புகின்றனர்.

இராதை ஒரு கோபியாவாள். இந்தக் கோபியைத் தான் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிற்குப் பின்னர் வடமொழியில் இயற்றப்பட்ட பாகவத புராணத்திலும், பத்மபுராணத்திலும், பிரம வைவார்த்த புராணத்திலும் ராதையாகக் குறிப்பிட்டுள்ளனர்.[1]

இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் கண்ட நப்பின்னை, ஆழ்வார்கள் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் காணும் நப்பின்னை, வடநாட்டார் காட்டும் இராதையாக இருக்கலாமோ என்ற ஐயமுண்டு.

ஆனால், இளங்கோவடிகளும் ஆழ்வார்களும் கண்ட நப்பின்னை, கன்னிப் பெண்ணாவாள். அவளைக் காதலித்த கண்ணன், அவளைத் திருமணம் செய்து கொள்ள, எருதுகள் ஏழினை அடக்கியதாகக் கூறுவது தமிழ்நாட்டு மரபாக இருந்து வருகிறது.

**வம்பு அவிழ் கோதை பொருட்டா**
**மால்விடை ஏழும் அடர்த்த**
**செம்பவளத் திரள் வாயன்**

—நாலா. திவ்.2944
(மயிலை மாதவதாசன் பதிப்பு)

---

1. Padma Purana, Patala Khanda, 76: 15—17
Brahmavaivartta Purana, 15: 148, 58: 71; 48: 75.

**தோளி சேர் பின்னை பொருட்டு**
**எருது ஏழ் தழீஇக்**
**கோளியார் கோவலனார்**

—நாலா, திவ். 3022

**ஈட்டிய வெண்ணெய் கொடுவுண்ணப் போந்து**
**இமில் ஏற்றி வன்கூன்**
**கோட்டிடை ஆடினை கூத்து, அடல் ஆயர்தம்**
**கொம்பினுக்கே.**

—நாலா. திவ். 2498.

**காம்பணை தோள் பின்னைக்கா**
**ஏறுடனேழ் செற்றதுவும்**

—நாலா. திவ். 2835

**நிரையினால் குறைவில்லா நெடும்பணைத் தோள்**
**மடப்பின்னை**
**பொறையினாள் முலையணைவான் பொருளிடை ஏழ்**
**அடர்த்துகந்த**

—நாலா. திவ். 3087

இவையனைத்தும் நம்மாழ்வார் போற்றியவை. இனி, பெரியாழ்வாரும்,

**தூயக நங்குழல்நல் தோகைம யிலனைய**
**நப்பினை தன் திறமா நல் விடை ஏழ் அவிய**
**நல்லதி றலுடைய நாதனும் ஆனவனே**

—நாலா. திவ். 70

என்று குறிப்பிட்டுள்ளார்.

**"நப்பின்னையாம்**
**விரகதத்தைக்கு விடையேழ் தழுவினவேங்கடவன்"**

என்று திருவேங்கடத் தந்தாதி (93) கூறுகின்றது.

ஆசாரிய ஹிருதயம் (பக். 304) கண்ணன், ஏறு தழுவிய வரலாற்றைச் சிறப்பாக உரைவிளக்கம் செய்

கின்றது. மணவாள மாமுனிகள் இதை அறிவிக்கின்றார்.

திருப்பாவை வியாக்யானங்கள் (பக். 245—248) கண்ணன் கொடிய காளைகளை அடக்கி, நப்பின்னைக்கு மாலை சூட்டினான் என்னும் செய்தியைச் செப்புகின்றன.

வடமொழி பாகவதத்திலும் இச்செய்தி வருகின்றது. திருப்பாவை வியாக்கியானத்தில் கண்ணனுடைய வளர்ப்புத் தாயாகிய இடைக்குல மடந்தை யசோதையின் தமையன் கும்பகன் என்பது தெரிய வருகிறது; அவனுடைய தொழுவத்தில் ஏழு முரட்டுக் காளைகள் இருந்தன; அவை பசுக்களுக்கும், மக்களுக்கும் பெருந் துன்பம் செய்து வந்தன. கும்பகன், அக்காளைகளை அடக்குவோருக்குத் தன் மகள் நப்பின்னையைத் திருமணம் செய்து கொடுப்பதாக அறிவித்தான். ஏற்கெனவே,மாமன்மகளாம் நப்பின்னையைக் காதலித்தவன் கண்ணன். ஆகவே அவளை யடையும் அவாவினால் அக்கொடிய காளைகளை அடக்கி நப்பின்னைக்கு மாலை சூட்டினான் என்று கூறுகின்றது.

வடமொழி பாகவதம் (ஆறாம் நூற்றாண்டுப் பாகவதம்) இச் செய்தியை வேறு வகையாகக் கூறுகிறது. அது, கோசல நாட்டு அரசனான நக்கினசித்து என்பவனுக்குச் 'சத்தியவதி' எனும் அழகிய மகள் இருந்தாள். அரசன் தன்னுடைய மந்தையில் உள்ள ஏழு காளைகளை அடக்கிப் பிடித்துக் கட்டுபவனுக்குத் தன்னுடைய மகளைத் திருமணம் செய்து கொடுப்பதாக அறிவித்தான். இதனையறிந்த கண்ண

பிரான், அங்குச் சென்று காளைகளை அடக்க நினைத்தார். அவ்வெருதுகள், காலநேமி என்னும் அசுரனுடைய பிள்ளைகள் என்பதை அவர் அறிந்தார். எனவே, தாம் தனித்தனியாக ஏழு வடிவங்கொண்டு, அவற்றைப் பிடித்துக் கட்டி, அரசனிடம் அவர் சென்றார். தம் மகளை அவ்வரசன் கண்ணனுக்குத் திருமணம் செய்து கொடுத்தான். அவ்வரசிளங்குமரியான சத்தியவதி, கண்ணனுடைய தேவியர் எட்டுப் பேருள் ஒருத்தியாக விளங்கினாள் என்பது பாகவதத்தால் தெரிய வருகிறது.

**இளங்கோவடிகள் காட்டும் நப்பின்னை**

1. **கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே?**
   **கண்ணிமைத்துக் காண்பார்தம் கண்ணென்ன கண்ணே?**

—சிலப். 17; படி—2

2. **"ஆயர் பாடியின சோதைபெற்.........**
   **.........விம்மிதம் எய்தி"**

சிலப்: 16: 46—52

3. **"பொதியவிழ் மலர்க்கூந்தல் பிஞ்ஞை**

—சிலப். 17 ஒன்றன் பகுதி.

4. **வேல் நெடுங்கண் பிஞ்ஞை**

சிலப். 17. கருப்.

(அழகிய கூந்தலை உடையவள் பின்னை;
சிறந்த கண்ணழகி பின்னை.)

—சிலப். 17; 16

5. **பெய்வளைக் கையாள்**

—சிலப். 16: 49

6. **பல்வளைத் தோளி**

—சிலப் 16: 49

7. வரிவளைக்கைப்பின்னை

சிலப். 17: 28

8. சிலப். 17—கருப்பம்
9. சிலப். 17—பாட்டு 3

இனி, சீவக சிந்தாமணியில் நப்பின்னை குறிக்கப் பெறுகின்றாள்.

(சீவக சிந்தா 482)

**மாமணி வண்ணனும் தம்முனும் பிஞ்ஞையும்**
**ஆடிய குரவையி ஃதாம்**

(மணி. 19: 65—66)

என மணிமேகலை போற்றுகின்றது.

நாலாயிர திவ்வியப் பிரபந்தமே பலவகைகளில்—வண்ணங்களில் நப்பின்னையின் பொலிவினைக் கண்ணனோடு உறழ வைத்துக் காட்டுகின்றது.

தமிழகத்து இலக்கியங்கள் 'நப்பின்னை' என்னும் பெயரையே பாராட்ட, வட இந்திய இலக்கியங்களில் சிற்சில மாற்றங்களோடு ராதையாகப் புதுவடிவம் கொடுக்கப்பட்டாள் என்று ஊகிக்க வேண்டியுள்ளது.

இக்கருத்து ஆராய்ந்து நிறுவ வேண்டிய கருத்துச் சிக்கலாகும்.

மாமல்லபுரத்து சிற்பங்களுள் 'கோவர்த்தனகிரி' சிற்பம் அமைந்த மண்டபத்தில கண்ணன் அருகில் நாணமுடன் நிற்கும் நங்கை யார்?

தமிழ்நாட்டுத் தொல்பொருள் ஆய்வாளர்
அவளை 'நப்பின்னை' என்பர்,
வடநாட்டுத் தொல்பொருள் ஆய்வாளர்களோ
அவளை 'ராதை' என்பர்.

அவள் கண்ணனின் காதலி என்பதில் ஐயமில்லை.

# 8. ஒட்டக்கூத்தரும் தக்கயாகப் பரணியும்

தமிழக வரலாற்றிலும் இலக்கிய வரலாற்றிலும் பொற்காலங்கள் என்று குறிக்கப்படுவன இரண்டு காலங்களாகும். ஒன்று சங்க காலம், பிறிதொன்று பிற்காலச் சோழர் காலம். சங்க காலத்தில் கபிலர், பரணர், ஔவையார், நக்கீரர் முதலிய புலவோர் புகழ் பூத்து விளங்கியமை போல், பிற்காலச் சோழர் காலத்தில் தெய்வப்புலமைச் சேக்கிழாரும், கவிச் சக்கரவர்த்தி கம்பரும், கலிங்கத்துப்பரணி பாடிய சயங்கொண்டாரும், நளவெண்பா இயற்றிய புகழேந்தியும், தெய்வப் பரணியாம் தக்கயாகப் பரணி தந்த கவிச் சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தரும் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவர்களாவர்.

கோவை உலா அந்தாதிக்கோர் ஒட்டக்கூத்தன் என்னும் பாராட்டு, சிற்றிலக்கியங்களாம் கோவையினையும் உலாவினையும் அந்தாதியினையும் பாடிப் பெருஞ்சிறப்புப் பெற்றவர் ஒட்டக்கூத்தர் என்பதனை நன்கு வெளிப்படுத்துகின்றன. விக்கிரம சோழன், இரண்டாம் குலோத்துங்க சோழன், இரண்டாம் இராசராசசோழன் ஆகிய சோழப் பெருமன்னர் மூவர் காலத்திலும், ஒட்டக் கூத்தர் அவர்கட்குக் கல்வி

கற்பித்த ஆசிரியராய்ப் பின் அரண்மனைப் புலவராய் இறுதியில் ஞானாசிரியராய் விளங்கித் தம் தொண்ணூற்றேழாவது வயதில் சிவகதி அடைந்துள்ளார்.

தக்கயாகப் பரணி பற்றியும் ஒட்டக்கூத்தர் பற்றியும் சற்று விளக்கமாகக் காண்போம்.

**பரணி**

பரணியென்பது தமிழ் மொழியிலுள்ள 96 வகைப் பிரபந்தங்களுள் ஒன்று! போர் முகத்தில் ஆயிரம் யானைகளை வென்ற வீரன்மேற் கடவுள் வாழ்த்து, கடை திறப்பு முதலிய உறுப்புகளை அமைத்து அவனுடைய பல்வகைச் சிறப்புகளையும் பலமுகமாகப் புறப்பொருளமைதி தோன்ற ஆங்காங்கு விளக்கிக் கலித்தாழிசையாற் பாடப்படுவதென்பர்; பெரும் போர் புரிந்து வெற்றி பெற்ற வீரனைச் சிறப்பித்துப் பாடுவதையும் பரணியென்று கூறுவர்.

பரணியென்னும் பெயர்க் காரணம் பலவாறாகக் கூறப்படினும் காளியையும் யமனையும் தன் தெய்வமாகப் பெற்ற பரணியென்னும் நாண்மீனால் வந்த பெயரென்பதே பொருத்தமுடையதாகத் தோற்றுகின்றது. இது "காடு கிழவோன் பூத மடுப்பே, தாழி பெருஞ்சோறு தருமனாள் போதமெனப் பாகுபட்டது பரணிநாட் பெயரே" என்னும் திவாகரம் முதலியவற்றால் விளங்கும்.

ஏனைப் பிரபந்தங்களைப் போலப் பாட்டுடைத் தலைவன் பெயருடன் வழங்காமல் தோல்வியுற்றோருடைய பெயருடன் சார்ந்தே இச்சிற்றிலக்கியம் வழங்கும்.

பரணிநாளிற் கூழ் சமைத்துக் கூளிகள் காளிக்குப் படைப்பது மரபென்பர்; இது 'காடுகெழு செல்விக்குப் பரணிநாளிற் கூழும் துணங்கையும் கொடுத்து வழிபடுவதோர் வழக்கு' (தொல்: செய்; நூற்பா 149) என்னும் பேராசிரியர் உரையாலும், இலக்கிய வழக்குகளாலும் நன்கு அறியலாம்.

'பரணி பிறந்தான் தரணி யாள்வான்' என்னும் பழமொழியும், 'பரணி யானை பிறந்த நாளாதலின் அதுபோலப் பகையை இவன்மதியான்' என்று நச்சினார்க்கினியர் எழுதிய உரையாலும் (சீவக. 1813) பரணி நாள் வெற்றியின் தொடர்புடையதென்பதை அறியலாம்.

**தக்கயாகப் பரணி**

தக்கயாகப் பரணியென்பது தக்கன் சிவபெருமானை அவமதித்துச் செய்யப் புகுந்த யாகத்தை ஸ்ரீ வீரபத்திரக்கடவுள் அழித்து அவனுக்கு உதவி புரிய வந்த தேவர்களையெல்லாம் வென்று, அவனுடைய தலையையும் தடிந்த வரலாற்றைப் பொருளாக அமைத்துக் கவிச்சக்கரவர்த்தியான ஒட்டக்கூத்தரென்னும் புலவர் பெருமானால் இயற்றப் பட்டது. விக்கிரமசோழன் முதலிய மூவருடைய அவைக்களத்தை அலங்கரித்து விளங்கியவராயினும் இக்கவிஞர் பெருமான் அம்மூவருள் மூன்றாமவனாகிய இரண்டாம் இராசராச சோழனுடைய வீரச்செயல் முதலியவற்றை உவமை முகத்தாலும் வேறுவகையாலும் ஆங்காங்குப் பலபடப் பாராட்டிச் செல்லுவதால் இந்நூல் அவன் விருப்பப்படியே செய்யப்பட்டிருத்தல் கூடும்.

காலத்தால் முந்திய கலிங்கத்துப் பரணியினின்றும் வேறுபட்டுள்ள இதன் அமைப்பைப் பார்க்கையில் அப்பரணிக்கு முன்னரே சில பரணிகள் இருந்திருக்க வேண்டுமென்றும் அவற்றின் வழியையும், ''பின்னோன் வேண்டும் விகற்பங்கூறி'' என்பதையும் பின்பற்றி இந்நூல் இயற்றப் பெற்றிருத்தல் வேண்டு மென்றும் தோற்றுகின்றன.

கோயிலைப் பாடிய பகுதியில் காளி காமகளை விளித்து முருகக் கடவுள் ஆளுடைய பிள்ளையாராகி வந்து சமணரை வாதில் வென்ற கதையைக் கூறும் படி கட்டளையிட அவ்வாறே கலைமகள் கூறுவதாக ஆளுடைய பிள்ளையாருடைய சரித்திரப்பகுதி கூறப் படுகின்றது.

பிள்ளையார் பாண்டியனுடைய உடம்பில் திருக்கையை வைத்தவுடன் அவனுக்கு இருந்த கூன் நீங்கி உடம்பு பொன்னிறம் பெற்றது. பின்பு சமணர் களை அரசன் கழுவேற்றப்புகுகையில், ''ஈது ஆகாது'' என்று பிள்ளையார் விலக்கியருளச் சமணர் தாம் கூறிய சபதம் தவறலாகாதென்று சொல்லி வலிந்து தாமே கழுவேறினர். பிறகு பிள்ளையார் சீகாழிக்கு எழுந்தருளினார்.

**ஒருகூன் மிசை வைத்த திருக்கைபுறத்**
**தொருகூன்மிசை வைத்தனர் வைத்தலுமே**
**இருகூனு நிமிர்ந்தன தென்னவர்கோன்**
**முதுகுந்தட மார்பு மிடம்பெறவே**

தக்க.— 216

ஆதிச்செழி யற்கொரு கைம்மலர்பொன்
னடையப்புக லிக்கிறை வெப்பழலால்
வேதிகக வுடம்பொரு பொன்மயமா
யொளிவிட்டு விளங்கினன் மீனவனே

—தக்க. 217

என்று கூன் நீங்கியதைப் பாடுகின்றார் ஒட்டக்கூத்தர்.

'கூடுதலும் இடுதலும்' பகுதியில் இரண்டாம் இராசராசனுடைய முன்னோர்களையும் அவனையும் வாழ்த்துதல் காணப்படுகின்றது.

அழிவந்த வேதத் தழிவு மாற்றி
யவனி திருமகட் கரசமன்னர்
வழிவந்த சுங்கத் தவிர்த்த பிரான்
மகன்மகன் மைந்தனை வாழ்த்தினவே

தக்க. 775

என்றவாறு அவன் முன்னோர்கள் வாழ்த்தப் பட்டுள்ளனர்.

'வாழ்த்து' என்ற பகுதியில் நூலாசிரியர் தம்மை ஆதரித்தவர்களுள் ஒருவனும் இந்நூலைச் செய்வித் தோனுமாகிய இராசராசசோழனையும் பிறரையும் வாழ்த்துதல் காணப்படுகின்றது. இப்பகுதியின் ஈற்றி லுள்ள மூன்று தாழிசைகளால் உறையூரையும் காவிரி யையும் திருமகள் கலைமகள் முதலியோரையும் தமிழையும் ஆசிரியர் வாழ்த்துகின்றார்.

வாழி தமிழ்ச்சொற் றெரிந்த நூற்றுறை
வாழி தமிழ்க்கொத் தனைத்து மார்க்கமும்
வாழி திசைக்கப் புறத்து நாற்கவி
வாழி கவிச்சக் ரவர்த்தி கூத்தனே.

—தக்க. 814

மகாபுராணங்களிலும் வேறு நூல்களிலும் கூறப் பட்டிருக்கும் தக்கயாக சங்காரக் கதையினின்றும் இதிலுள்ள கதைப்போக்கு வேறுபட்டிருத்தலின் இந்த முறைக்கு ஆதாரமாக உள்ள முதல் நூல் இன்னா தென்று இப்பொழுது விளங்கவில்லை.

ஆளுடைய பிள்ளையார் சமணரை வாதில்வென்ற வரலாற்றிற் காணப்படுபவனவாய் இதன்பாலுள்ள சில செய்திகள் பெரியபுராணத்திற் காணப்பட வில்லை.

## மற்றப் பரணிகளுக்கும் இதற்கும் உள்ள வேறுபாடுகள்

டாக்டர் உ. வே. சாமிநதையர் அவர்கள் கூறி யுள்ள வேறுபாடுகள் பின்வருமாறு :

1. மற்றப் பரணிகளைப் போலப் பாட்டுடைத் தலைவனுக்கு நன்மை உண்டாக வேண்டுமென்று வாழ்த்தாமல் ஆக்குவித்தோனுக்கு நன்மை உண்டா கும்படி தெய்வங்களை வாழ்த்தியிருத்தல்.

2. உமாபாகர், விநாயகர், முருகக்கடவுள், திருஞானசம்பந்த ரென்னும் இவர்களை மட்டும் வாழ்த்தியிருத்தல்.

3. நூலுறுப்புக்களின் பிறழ்ச்சி.

4. காடு பாடியது முதலியவற்றில் யாமள நூலின் முறைப்படி வருவித்தல்.

5. சைவத்தின் ஏற்றம் புலப்படும்படி திருஞான சம்பந்தா சைனரை வென்ற கதையைத் தேவிக்கு நாமகள் கூறியது முகமாகப் புதிதாக விளங்கக் கூறியிருத்தல்.

6. கூடுதலென்னும் உறுப்பிற் பேய்கள் கூழை யாக்கிக் குடித்துப் பாட்டுடைத் தலைவனை வாழ்த் தாமல் இந்நூலை ஆக்குவித்த இராசராச சோழனை யும் அவன் முன்னோர்களையும் அவர்களுடைய நற் செய்கைகளையும் வாழ்த்துதலைக் கூறியிருத்தல்.

7. களங்காட்டுதலிற் காளி பேய்களுக்குக் களங் காட்டியதாகக் கூறியது போலன்றிக் கதைத் தொடர்பு புலப்படத் தேவிக்குச் சிவபெருமான் காட்டியதாகக் கூறியிருத்தல்.

8. ஆக்குவித்தோனிடத்துள்ள பேரன்பால் அவனைத் தனியே இறுதியில் வாழ்த்தியிருத்தல்.

இந்நூலில் பல சரித்திரச் செய்திகள் கூறப் பட்டுள்ளன. இந்நூலாலறியப்படும் கொள்கைகள், அரிய செய்திகள் முதலியவற்றை டாக்டர் உ. வே. சா. அவர்கள் தொகுத்துத் தந்துள்ளார்.

**ஒட்டக்கூத்தர்**

இவர் கூத்தரென்றும், கூத்த முதலியாரென்றும் வழங்கப்படுவார். இவர் பிறந்த ஊர் மலரியென்பர்; ''மலரி வருங்கூத்தன்'' (தண்டி. மேற்.)

தமிழ் இலக்கண, இலக்கியங்களிலும் வடமொழி யிலும் வல்லவர். சிவநேயச் செல்வர்; சிறந்த ஆசிரியர். இவர் விக்கிரம சோழன் காலத்தில் அவனு டைய அவைக்களப் புலவராகவும், குலோத்துங்

கனுக்குக் கல்வி புகட்டிய ஆசிரியராகவும், அவனுக்கும் அவன் குமாரன் இரண்டாம் இராசராசனுக்கும் அவைக்களப் புலவராகவும் இருந்தவர். பல நூல்களை இயற்றியும், இயற்றுவித்தும் தமிழ்ப்பணி புரிந்தவர். இம்மூவர்மீது 'மூவருலா'வும் குலோத்துங்கன்மீது ஒரு பிள்ளைத் தமிழும் இயற்றினார். இவரிடத்துப் பேரன்புற்ற அம்மூவருளொருவன் இவருக்கு அரிசிலாற்றங்கரையில் ஓரூரை அளித்தான். அங்கு இவர் கலைமகள் கோயில் ஒன்றைக் கட்டினார். ''ஆற்றங் கரைச் சொற்கிழத்தி வாழியே'' (தக்க 813) என்னும் அடியால் இது விளங்கும். இவ்வூர் தஞ்சை மாவட்டப் பூந்தோட்டம் புகைவண்டி நிலையத்தினருகே இன்று அமைந்துள்ளது.

இவர் இராசராசனுலாவைப் பாடி அரங்கேற்றிய பொழுது இவருக்கு அவ்வரசன் ஒவ்வொரு கண்ணிக்கும் ஆயிரம் பொன் விழுக்காடு வழங்கினான். இவரை ஆதரித்தவர்கள் மூவரேயன்றித் திருச்சிற்றம் பலமுடையான் பெருமாள் நம்பி, புதுவைக்காங்கேயன் திரிபுவனச் சோமனென்னும் செல்வர்களுமென்று இந் நூலாலும் இதனுரையாலும் பிறவற்றாலும் விளங்குகின்றது.

இவர் காலத்திருந்த புலவோர் நம்பிகாளியார், நெற்குன்றவாண முதலியார் முதலியோர் ஆவர். கம்பரும் புகழேந்தியும் இவர் காலத்தில் இருந்தாரென்பது சிலர் கொள்கை; அதற்குத் தக்க ஆதாரங்கள் கிடைக்கவில்லை.

இவர் ''பாடற் பெரும்பரணி தேடற் கருங்கவி கவிச்சக்கரவர்த்தி பரவச் செஞ்சேவகஞ் செய்த சோழன்றிருப்பெயர்'' (குலோத். பிள்ளை) என்பதில்

முதற்குலோத்துங்கன்மீது சயங்கொண்டார் கலிங்கத்துப்பரணி இயற்றியதையெடுத்துக் கூறுதலால் பிற புலவர்களைப் பாராட்டும் இவருடைய அரிய குணமும், சயங்கொண்டார்பால் இவர் கொண்ட மதிப்பும் விளங்கும்.

உலக இயல்பைக் கடந்து வருணைகளை அமைப்பதாற் கௌடப் புலவரெனப்படுவார். இதை பின்வரும் தாழிசைகளால் அறியலாம்.

மிசைய கன்றுயரு நகின்ம
ருங்குல்குடி யடிபறிந்ததழ விடுமெனத்
திசை யகன்றளவு மகனிதம்பதட
முடைய மாதர்கடை திறமினோ

—தக்க. 29

அருகுதிசையருகு கடிதடமு மிசைவெளி
அகலமடையவளர் தனதடமு மவையவை
திருகுசெருகினைய நினையநடு விடையிறு
திகிரிவரையிலர மகளிர்கடை திறமினோ

தக்க. —37

நின்ற கன்றவிடை நேடிவரை நேமியளவுஞ்
சென்ற கன்றன நிதம்பநடு வில்லைதிசையே.

—தக்க. 85

மேலும் பூதகணங்களின் செயல்களை விரித்துக் கூறும் பகுதியிலும் உலக இயல்பைக் கடந்த வருணனைகளை அமைத்துள்ளார்.

செய்யுள் செய்யும் ஆற்றலில் அக்காலத்துள்ள கவிகளுட் சிறந்து விளங்கினமையால் கவிராக்ஷசனென்றும் (சோழ மண்டல சதகம் 93-மேற்), கவிச் சக்கரவர்த்திகளென்றும் (தக்க. 813, உரைகள் 536,

776), சக்கரவர்த்திகளென்றும் (தக்க. 457-உரை), அரசனாற் காளம் என்னும் விருது பெற்றமையால் காளக்கல்வியென்றும் (தக்க. 70-உரை; குறிப்பு), இரு மொழி நூல்களுள்ளும் இன்றியமையாதனவற்றைச் செவ்வனே அறிந்து அறிந்தவற்றை நன்கு புலப் படுத்திச் செய்யுள் செய்யும் திறம் வாய்த்திருந்தமை யின் சருவஞ்ஞகவி (தக்க. 443-உரை) என்றும் இவர் வழங்கப்படுவார்.

இவர் தேவியைப் பற்றிக் கூறுவனவெல்லாம் பெரும்பாலும் 'யாமள' சாத்திரக் கருத்துகளைப் பின்பற்றியவனவென்று தெரிவதால் இவருக்கு அந் நூல்களிற் பயிற்சியுண்டென்றும் சைன முதலிய பிற சமயங்களைப் பற்றிய செய்திகளையும் பரிபாஷை களையும் எடுத்தாளுதலின் அச்சமய நூல்கள் அறிந்த வரென்றும் சொல்லலாம்.

துர்க்காபரமேஸ்வரி கலைமகளை நோக்கி ஆளுடைய பிள்ளையார் கதையைச் சொல்லும்படி கட்டளையிட்டு, அங்ஙனமே சொல்லிய கலைமகளை மனமுவந்து தன் அருகில் வீற்றிருக்கும்படி அருளிச் செய்ததாகக் கூறியிருப்பதும், தக்கயாக சங்காரத்தைக் கூறும் ஏனைய நூல்களில் வீரபத்திரதேவர் கலை மகளுடைய நாசியை அரிந்ததாகக் காணப்படும் செய்தியைக் கூறாதொழிந்ததும், வாழ்த்தில், "ஆற்றங்கரைச் சொற்கிழத்தி வாழியே" என்று பாராட்டியிருப்பதும் இவருக்குக் கலைமகள்பாலுள்ள பேரன்பைப் புலப்படுத்துகின்றன. இவர் அகத்தி யரிடத்து மிக்க பக்தியுடையவர் என்பது 40, 233, 624-ஆம் தாழிசைகளால் விளக்கமாகின்றது.

இவர் தமிழ் மொழியிலும் அதன் வளர்ச்சியிலும் அதிக ஈடுபாடுடையவர் என்பது இந்நூலால் நன்கு விளங்குகின்றது.

கடவுள் வாழ்த்தில் திருஞான சம்பந்த மூர்த்தியை வாழ்த்தியிருத்தலாலும், அவர் கதையைக் கோயில் பாடியதிற் புகுத்தி விளங்கப் பாராட்டியிருத்தலானும், பிறவற்றாலும் இவருக்கு அவரிடத்திருந்த பற்றும் பக்தியும் வெளிப்படையாகத் துலங்குகின்றன.

இவர் நன்றியறிவிற் சிறந்தவர்; இந்நூலில், பொதுவாகச் சோழர்களைச் சிறப்பித்தும் சிறப்பாகத் தம்மை ஆதரித்த சோழர்களைப் பலபடப் பாராட்டியும் காவிரிப்பூம்பட்டினத்திருந்த கொடையாளராகிய பல்லவராயரென்று பட்டம் பெற்ற நம்பி பிள்ளையையும் நல்ல சூழ்நிலையிலெடுத்துச் சிறப்பித்துமிருப்பதால் இது தெளிவாகின்றது.

காங்கேயன் நாலாயிரக் கோவை, அரும்பைத் தொள்ளாயிரம், மூவருலா, குலோத்துங்கன் பிள்ளைத் தமிழ், ஈட்டியெழுபது முதலியன இவர் செய்த நூல்கள். அன்றியும் இவர் அவ்வப்பொழுது செய்தனவாகச் சில செய்யுட்கள் தமிழ் நாவலர் சரிதை முதலியவற்றிற் காணப்படுகின்றன.

"ஒட்டக்கூத்தர் இலக்கண இலக்கியங்களில் வல்லவர்; வடமொழிக் கல்வியும் நிரம்பியவர். பழைய மரபுகளை விடாமல் போற்றி, பிறர் செய்யும் தவறுகளைக் கடுமையாக எடுத்துரைத்துக் கடிபவர்" (தமிழ் இலக்கிய வரலாறு. ப. 157) என்று டாக்டர் மு. வ. அவர்கள் குறிப்பிடுவது இங்குச் சிந்திக்கத் தக்கது.

ஒட்டக்கூத்தர் அப்பர் பெருமானைப் போல் நீண்ட நாள் வாழ்ந்தவர். சொற்சுவையும் பொருட்சுவையும் நிரம்பிய பனுவல்களை ஈந்தவர். தக்கயாகப் பரணி யென்னும் சமயப் பரணி பாடிப் புகழ் பெற்றவர். இவர் தொடங்கிவைத்த இப்பரணிப் போக்கே அஞ்ஞவதைப் பரணி, பாசவதைப் பரணி, மோகவதைப் பரணி முதலிய பரணிகளுக்கு வழிகாட்டியாயிற்று. இவர் புலவரில் புலவர், கவிஞரில் கவிஞர். இவர் இயற்றிய தக்கயாகப் பரணி இவர் பெருமைக்குச் சான்றாக என்றும் விளங்கும்.

# 9. சைவத்தின் மையம்

உலகில் வாழும் மக்கள் பல நம்பிக்கைகளைக் கொண்டு வாழ்கிறார்கள். அந்நம்பிக்கைக்குள் இறை நம்பிக்கை மிக்க வலிமையுடையதாகும். ஒவ்வொரு சமுதாய மக்களின் இறை நம்பிக்கைகளும் வேறுபட்டதால் பல சமயங்கள் உலகில் தோன்றின. அவற்றுள் காலத்தால் மிகப் பழமையான, தத்துவ வளம் மிக்க சமயம் சைவ சமயமாகும். இக்கட்டுரை சைவத்தின் மையக் கருத்துகளை விளக்குமாறு அமைகின்றது.

**சைவம்**

சிவசம்பந்தமுடையது சைவம். திருமூலர் 'சைவம் சிவனுடன் சம்பந்தமாவது' என்று விளக்குவார். 'சிவம்' என்ற சொல்லுக்கு நன்மை, முக்தி, செம்மை, அன்பு முதலிய பொருள்கள் கூறலாம்.

'சிவன் எனும் நாமம் தனக்கே உரிய செம்மேனி அம்மான்' என்னும் சிவனைப் பற்றிய அடியும் எண்ணத்தக்கது. எனவே செம்மை என்பது எதுவோ— அனைத்துக்கும் அப்பாலாய் நின்று அனைத்தையும் ஆக்குவது எதுவோ—எல்லோரும் இன்புற்றிருக்க

நினைப்பது எதுவோ அது சிவம் எனப்படும். அச்சிவ சம்பந்த முடையதே சைவ நெறியாகும்.

சிவம் என்ற சொல், சைவ சமயத்தின் முழுமுதற் கடவுளான—தலைவனான சிவபெருமானையே இன்று சிறப்பாகக் குறிப்பிடுகின்றது. ஆனால் இச்சொல் செம்மை அளிப்பது, மங்கலம் தருவது என்ற பொருளில் வேதத்தில் காணப்படுகிறது என்பர். இக்கருத்து ஒருவகையில் சமயங்கடந்த ஓர் ஆனந்த நிலையைச் சுட்டியது போலும். மேன்மையானது எதையும் சிவம் என்று சொல்லி வந்தார்கள்.

பதினைந்தாம் நூற்றாண்டு வரையில், வீட்டுலகு என்று குறிப்பிடும்போது சைன நூல்கள் 'சிவகதி' என்றே குறிப்பிடுவதை இங்கு எண்ண வேண்டும். 'தீதறு சிவகதி', 'இருளறு சிவகதி', 'சிவகதித்து வேந்து' என்பன போன்ற தொடர்கள் பரவலாக வழங்குவது, சிவம் எனும் சொல் முக்தி, பேரின்பநிலை முதலியவற்றைச் சுட்டியதை அறிய முடிகின்றது. இன்றும் காலமானார் என்பதைச் 'சிவகதி அடைந்தார்' என்று சுட்டும் வழக்கம் இதனை உறுதி செய்யும்.

'அன்பே சிவம்' என்னும் திருமூலர் வாக்கால் 'சிவம்' என்பது அன்பு வடிவாயது என்ற கருத்தையும் அறியமுடிகின்றது.

இவைகளால் சிவசம்பந்தமுடைய சைவம்—அன்பு, செம்மை, முக்தி முதலிய விரிந்த பொருளுடைய சொல் என்பது விளங்கும்.

## சைவத்தின் தொன்மை

சைவ சமயத்தின் தொன்மையை அறிய வரலாற்று அடிப்படையில் நாம் அணுக வேண்டியுள்ளது. ஆராய்ச்சியாளர் மனித வரலாற்றைப் பல காலங்களாகப் பிரித்துள்ளனர். அவை பழைய கற்காலம், புதிய கற்காலம், இரும்புக் காலம், வெண்கலக் காலம் எனப் பலவகைப்படும். இக்காலங்களிலெல்லாம் உலகத்தில் சைவம் இருந்ததா என்ற வினா, சைவத்தின் தொன்மையையறிய வழிவகுக்கும்.

அக்காலத்து நூல்கள் இன்று நமக்குக் கிடைக்கவில்லை. எனவே, அவர்கள் வழிபட்டு வந்த கல் முதலியவற்றாலான பொருள்களைக் கொண்டே அவர்தம் சமயத்தை நாம் துணிய வேண்டியவர்களாக இருக்கிறோம்.

புதிய கற்காலத்தைச் சார்ந்த, லிங்கத்தைக் குறிக்கும் கற்கள் பல கிடைத்துள்ளன. சிவபெருமான் மலைவாழ் கடவுள், யானைத் தோலையும் புலித் தோலையும் உடையவர், அவர் விலங்குகளுக்குத் தலைவர் என்னும் பொருள்படப் 'பசுபதி' என்னும் பெயரால் அழைக்கப்படுகின்றார். இவற்றையும், அவரைப் பற்றிய கதைகளையும் நோக்க — அவர் மலைமகள் கணவர் என்பதையும் நோக்க—சிவபெருமான் பழைய கற்காலத்திலும், புதிய கற்காலத்திலும் மக்களால் வழிபடப்பெற்று வந்தவராவார் என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

## அமெரிக்காவில்

வட அமெரிக்காவில் 'கொலறடா' என்னும் ஆற்றின் பக்கத்திலுள்ள குன்றின்மீது 'சிவன்கோவில்' என்ற ஓர் இடம் இருக்கிறது. அவ்விடம் பதினாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டது என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றார்கள்.

அமெரிக்காவின் பல பகுதிகளிலும் இலிங்க வணக்கம் பண்டைக்காலம் முதலே இருந்து வந்தது. அங்கு கோயிலில் லிங்கங்களை வைத்து வழிபட்டு வந்தனர். லிங்கம் தனியாகவும், லிங்கமும் ஆவுடையாரும் சேர்ந்தும் பலவாறு வழிபடப்பட்டன என்று அமெரிக்க வரலாறு அறிவிக்கின்றது. அமெரிக்கா உட்பட, உலகம் முழுவதிலும் பசிபிக் தீவுகளிலும் இலிங்க வழிபாடு இருந்தது எனின், சைவ சமயத்தின் பழமையை என்னென்பது!

## அயல்நாடுகளில் சைவம்

நடுத்தரைக் கடலிலுள்ள 'கிரீட்' என்னும் தீவில் இருந்த பண்டை நகரங்களுள் ஒன்று சிவன் எனப் பெயர் பெற்றிருந்தது. அங்கு, நிலத்திற்கடியிலிருந்து எண்ணற்ற சிறிய சிவலிங்கங்கள் ஆராய்ச்சியாளர்களால் கண்டெடுக்கப்பட்டன.

சிறிய ஆசியாவில் (**Asia Minor**) கிடைத்த புதை பொருள்களால் இடபத்தின்மீது வீற்றிருக்கும் தெய்வ வழிபாடும், இடப வழிபாடும் அங்கு இருந்தன என்பதை அறிய முடிகிறது.

வட ஆப்பிரிக்காவிலுள்ள லிபியாவின் பெரும் பகுதி பாலைவனமாகும். அப்பாலை நிலத்தில் பசுந் தரையொன்று. உண்டு அதன்பெயர் சிவன் என்பது.

கி.மு. 1500 அளவில் வாழ்ந்த மோசே என்பவர் ஏகோவா அருளிய 'பத்துக் கட்டளைகளை'யும் சிவன் என்னும் மாதத்தில் ஆறாம் நாள் சினாய் மலைமீது நின்று மக்களுக்கு எடுத்துக் கூறினார் என்று கிறித்துவ மறையின் பழைய ஏற்பாடு தெரிவிக்கின்றது.

'ஷின்டோயிஸம்' என்னும் ஜப்பானிய சமயத்தில் இலிங்க வணக்கம் முதன்மையானது. ஜப்பானில் இருந்த பொதுவிடங்களில் இலிங்கங்கள் வைத்து வழிபடப்பட்டன. ஜப்பானிய அரசாங்க ஆணையால் சென்ற நூற்றாண்டில் அவை அகற்றப்பட்டன.

## இந்தியாவில்

நமது இந்தியாவில் சிந்துவெளியில் மிகச் சிறந்த நாகரிகம் விளங்கியிருந்தது என்பது புதைபொருள் ஆராய்ச்சியால் அறியப்பட்ட உண்மையாகும். சிந்து வெளியில் கிடைத்த முத்திரையொன்றில் சிவன்—பசுபதி என்பதை உணர்த்தும் உருவம் பொறிக்கப் பட்டுள்ளது. அங்கு இலிங்கங்களும் கிடைத்துள்ளன. சிந்துவெளி நாகரிகம், வேதகால ஆரியர்க்கு முற்பட்டது. எனவே இந்தியாவில் ஆரியர் வருகைக்கு முன்னரே இலிங்க வணக்கம் இருந்தது என்பது தெளிவாகும். இப்புதை பொருள்களைக் கண்ட ஆய்வாளர்

சர் ஜான் மார்ஷல். "சிந்துவெளியிற் கிடைத்த புதுமைகளுள் முதலிடம் பெறத்தக்கது சைவத்தின் பழமையேயமாகு. அது மாக்கல்காலம் அல்லது அதனினும் முற்பட்ட காலத்திற்கு நம்மை அழைத்துச் செல்கிறது. இன்றளவும் வழக்கிலுள்ள மிகப் பழைய சமயமாக இது விளங்குகிறது" என்று வியந்து கூறியுள்ளார்.

இவ்வாறு வரலாற்றைக் கடந்து நிற்கும் சைவ சமயம் மிகத் தொன்மையானது என்பது வெள்ளிடைமலை.

## சைவ சித்தாந்தம்

சைவ சமயத்தைப்பற்றி நன்கு அறியத் துணை செய்வன சைவ சமய நூல்களும், சைவ சித்தாந்த நூல்களும் ஆகும். சைவ சமய நூல்கள், சித்தாந்த நூல்கள் ஆகியவற்றிடையே ஒரு வேறுபாடுள்ளது. சமய நூல்கள் அன்பின் அடிப்படையிலானது; சித்தாந்தம் அறிவின் அடிப்படையிலானது. இச்சிறிய அறிமுகத்துடன் சைவ சித்தாந்தம் பற்றி இனிக் காணலாம்.

'சித்தாந்தம்' என்னும் சொல்லுக்கு முடிந்த முடிபு என்பது பொருள். எதை அல்லது எவைகளைப் பற்றிய முடிவு என்றால், உலகு—உயிர்—கடவுள் என்னும் முப்பொருள்களைப் பற்றிய ஆராய்ச்சியிலும் அநுபூதியிலும் கண்ட முடிபுகள் என்று கூறலாம். இந்த முப்பொருள்களைப் பல சமய நூல்களும் தத்துவ சாத்திரங்களும் ஆராய்ந்து வெவ்வேறு முடிவுகளுக்கு வந்துள்ளன. ஒவ்வொரு வகை முடிவும் ஒவ்வொரு சித்தாந்தம் எனப்படும். சைவ சித்தாந்தமானது பிற

மத சித்தாந்தங்களை எல்லாம் நியாய முறையில் ஆராய்ந்து, முப்பொருள்களைப் பற்றித் தானும் ஒரு முடிவிற்கு வந்துள்ளது. இச்சைவசித்தாந்தத்தைச் சிறப்பு வகையில் சித்தாந்தம் என்றே குறிப்பது சைவ மரபாகும்.

கடவுளைப் 'பதி' என்றும், உயிர்களைப் 'பசு' என்றும், உலகத்தைப் 'பாசம்' என்றும், சித்தாந்த சாத்திரங்கள் கூறும். எல்லா ஆராய்ச்சிகளும் இந்த மூன்றுக்குள் அடங்கும். இவை பற்றிய அறிவை வளர்த்தல் ஆன்மநல முன்னேற்றத்திற்குத் தேவையானதாகும்.

## பதி

'கடவுள்' என்னும் பெயர் பொருள் நிறைந்ததொன்று. அதனைக் 'கட உள்' எனப் பிரித்தால், பரம்பொருள் எல்லாவற்றையும் கடந்து உள்ளது என்னும் உண்மை புலனாகிறது. கடவு உள்' என்று பிரித்தால், எல்லாவற்றின் உள்ளிருந்தும் கடவுவது, செலுத்துவது என்னும் உண்மை புலனாகின்றது. தானாக இயங்க மாட்டாத சடப்பிரபஞ்சத்தை ஒரு முறைப்படி ஏதோ ஒரு சக்தி இயக்குவதையும், அதனால் உயிர்கள் படிப்படியாய்த் தடைகளினின்றும் விடுபட்டுப் பேரானந்தப் பெருநிலை அடைவதையும் உணர்கிறோம். இப்படியுள்ள பரம்பொருள் ஒன்றேதான், 'ஒருவனே தேவன்' என்றார் திருமூலர். அப்பொருள் உருவம், அருவம், குணம், குறி இவைகளையெல்லாம் கடந்துள்ளது. நிர்மலமானது, நித்தியமானது, சலனமற்றது, அகண்டிதமாய் என்றும்

எங்கும் வியாபித்திருப்பது; அணுவுக்கு அணுவாயும், மகத்துக்கு மகத்தாயுமுள்ளது. அவ் இறைவனை "இன்ன தன்மையன் என்றறியொண்ணா எம்மான்" என்று சுந்தரர் தேவாரம் உணர்த்துகின்றது.

இறைவன் முன்னைப் பழமைக்குப் பழமையாகவும், பின்னைப் புதுமைக்குப் புதுமையாகவும் விளங்கும் சிறப்பினையுடையவன் என்பார் மணிவாசகப் பெருந்தகை.

**முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே**
**பின்னைப் புதுமைக்கும் போர்த்துமப் பெற்றியனே**

என்பது அவர் வாசகம்.

**கொடிநிலை கந்தழி வள்ளி என்ற**
**வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்**
**கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே**

என்ற நூற்பாவில் தொல்காப்பியனார் செம்பொருளாம் இறைவனை உணர்த்த 'கந்தழி' என்ற சொல்லை ஆண்டிருக்கிறார். கந்தழி என்ற சொல், கந்து—கட்டு; அழி—அற்றவிடம் என்ற பொருள் தரும். செம்பொருளாகிய இறைவன் கட்டற்றவன் என்ற உண்மை இச்சொல்லால் உணர்த்தப்படும். கட்டுடையன உயிர்கள்; கட்டில்லாதவன் இறைவன் என்று அறிந்த நிலையில் தமிழ் மக்கள் இறைவனைக் கந்தழி என்று அழைத்தனர். கட்டாகிய பாசத்தையுடைய உயிர்களாகிய பசுக்கள், பதியாக கடவுளை அடைய வேண்டுமானால், பாசமாகிய கட்டுக்களை விட வேண்டும் என்பது சைவ சித்தாந்தம்.

**பசு**

ஆன்மாக்களாகிய நமக்குப் பசுக்கள் என்று பெயருண்டு. பாசத்தால் கட்டுண்டிருக்கிறபடியால் நமக்கு இப்பெயர் கிடைத்துள்ளது. ஆன்மாவின் சொரூபம் அறிவு. அது சத்துப்பொருள்; ஆனால் பதியைப் போல் சுத்தசித்தன்று. ஆன்மாக்கள் எண்ணில்லாதவை; என்றும் உள்ளவை; எவராலும் படைக்காதவை; சிவத்திற்கும் பாசத்திற்கும் வேறானவை.

ஆன்மாக்களுக்கு இரண்டு தன்மைகள் உள்ளன. 1. பற்றுக்கோடின்றி நில்லாமை. பாசத்தையாவது அல்லது பதியையாவது பற்றியே ஆன்மா நிற்கும். 2. சார்ந்ததன் வண்ணமாதல்; எதைச் சார்ந்து நிற்கின்றதோ அதனோடு கலந்து, அதன் தன்மையைத் தான் பெற்று இலங்கும். "யாதொன்று பற்றின் அதன் இயல்பாய் நின்று" ஆண்டவனருளால், முடிவில் "பந்தம் அறும் பளிங்கனைய சித்து" சீவன். அதன் "பக்குவம் கண்டு அறிவிக்கும் பான்மை" யுடைவன் சிவன்.

பசுவாகிய ஆன்மா பதியாகிய இறைவன் அருளால் தான் அவனை அடைய முடியும்.

**அவனருளால் அவன் தாள் வணங்கி**

என்பது மணிவாசகர் திருமொழி.

**பிறப்பு மூப்புப் பெரும்பசி வான்பிணி**
**இறப்பு நீங்கியிங் கின்பம்வந் தெய்திடும்**
**சிறப்பர் சேறையுட் செந்நெறி யான்கழல்**
**மறப்ப தின்றி மனத்தினுள் வைக்கவே**

என்ற அப்பர் பெருமான் திருவாக்கு இறையருளின் பெரும் பயனை விளக்கி நிற்கும்.

**சாதலும் பிறத்தலும் தவிர்த்தெனை வகுத்துத்**
**தன்னருள் தந்த எந்தலைவன்......**

என்ற சுந்தரர் திருவாக்கும் இறையருளை விளக்கும்.

பசுக்கள் பதியை அடைய முடியாமல் தடுக்கும் பாசத்தின் நீங்கிப் பதியையடைய இறையருள் பெருந் துணை நிற்கும்.

**பாசம்**

இது ஆணவம், மாயை, கன்மம் என்னும் மூன்று பிரிவினையுடையது. இவற்றில் ஆணவம்தான் மூல மலம். இஃது ஆன்மா அறியாதபடி அதன் அறிவு முழுமையும் மறைக்கும். செருக்கு, மோகம், பேராசை, லோபம் முதலிய தீய குணங்களால் இஃது ஆன்மாக் களை அலைக்கும். ஆணவம் தன்னையும் காட்டாது; பிற பொருளையும் காட்டாது—ஆகையால் இஃது இருளினும் கொடிய பேரிருளாகும்.

மாயை என்பதும் பாசத்தின் ஒரு பகுதியாகிய சடப்பொருள். இதுவும் உள்பொருளே. மாயையி லிருந்துதான் 36 தத்துவங்கள் இறைவன் சக்தியால் தோற்றுவிக்கப்படுகின்றன. இந்த மாயை 'சுத்த மாயை', 'அசுத்த மாயை' என இரண்டாகவும், 'சுத்த மாயை', 'அசுத்த மாயை', 'பிரகிருதி மாயை' என மூன்றாகவும் பகுத்துச் சாத்திரங்கள் விளக்கிக் கூறும்.

கன்மம் என்பதும் பாசத்தின் ஒரு பகுதி. நாம் பெறும் பிறவிகளின் இயல்பை இது திடப்படுத்தி நானாவிதமான இன்ப துன்பங்களை விதிமுறைப்படி ஊட்டி வைக்கும்.

இப்பாசத்தினின்றும் உயிர்கள் நீங்க வேண்டும்.

**முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்,**
**மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்**

என்ற அப்பர் திருத்தாண்டகத் திருப்பாடல் பாசத்தின் நீங்கிய பசு பதியையடைந்த நிலையை விளக்கிக் காட்டும்.

இவ்வாறு சைவசித்தாந்தம் பதி, பசு, பாசம் பற்றி விளக்குகிறது. இவற்றின் விரிவைச் சாத்திர நூல்களுள் கண்டு கொள்க. இனிச் சைவ சமய அருள் நூல்கள் கூறும் இன்றியமையாக் கருத்து களைக் காணலாம்.

**அன்பு**

'அன்பே சிவம்' என்னும் தொடரில் சைவத்தின் கடவுட்கொள்கை முழுவதும் அடங்கு'ம் எனலாம்.

**அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்**
**அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்**
**அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்**
**அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே**

என்பது சைவ நூற்களில் மிகப் பழமையான திருமந்தி ரத்தில் திருமூலர் கூறும் அரிய உண்மை ஆகும். 'அரும்பொரு'ளாக உள்ள இறைவன் அன்பில் உள்ளான் என்பதனை யுணர்ந்த நிலையில்தான் தேவாரத் திருவாசகப் பாசுரங்கள் எழுந்தன; திருவைப்

பிலுள்ள பிற நூல்கள் பாடப்பட்டன. தாயுமானாரும், பட்டினத்தடிகளும், குமர குருபரரும், வள்ளலாரும் பிறரும் இறைவனை அன்பு வடிவினனாக, அடியாரோடு நேர்த் தொடர்பு கொண்டு தன் அன்பைப் பொழிபவனாகவே கண்டார்கள். அந்த அன்புக்கு ஆட்பட்டுத் தலைவணங்கி அதன் திறத்தை வியந்து போற்றுகின்றார்கள்.

மணிவாசகர், "இன்பமே என்னுடை அன்பே" என்று இறைவனைப் பாடுகின்றார். இவ் இறையன்பு ஆட்கொள்ளும் அன்பு என்ற கருத்து அனுபவ விளக்கம் சைவநூல்களில் காணக் கிடக்கின்றது. அணைக்கும் இறையன்பின் ஆழத்தைக் காட்டத் திருவிளையாடல் புராணத்தில் வரும் மாபாதகந் தீர்த்த படலம் ஒரு சிறந்த சான்று ஆகும்.

அடுத்து சைவத்தில் அடியார்களிடம்—உயிர்களிடம் செலுத்தப் பெறும் அன்பு—பெற்றோர், உடன் பிறந்தோர், மனைவி, மக்கள், சுற்றம், அயலார், ஊர், நாட்டார் என்று விரிந்து, மேலும் விலங்கு, பறவை, கொடி என்று மற்ற உயிர்களிடத்தும் படர்ந்து, உயிரினங்கள் அனைத்தினும் இறைமையை உணரத் தலைப்பட்ட காலத்து மெய்யுணர்வு தோன்றும். 'பெறவே வேண்டும் மெய்யன்பு' என்பது திருவாசகம். அம்மெய்யுணர்வு மேலிடவும், பாசபந்தம் நீங்க, மக்கள் பேரா இன்பநிலை எய்தப் பெறுவர்.

இம்மெய்யுணர்வே,

**அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோயராய்**
**ஆவுரித் தின்றுழலும் புலையரேனும்**
**கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகில்**
**அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே**

என்று அப்பர் பெருமானைப் பாட வைத்தது.

இம்மெய்யுணர்வே புலால் உண்ணாத பெரு நிலையை வேரூன்றச் செய்வதாகும்.

**தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிதூ னுண்பான்**
**எங்ஙனம் ஆளும் அருள்**

என்று திருவள்ளுவப் பெருந்தகை கூறுமாறு போல, புலால் உண்ணல் அருளையும் அன்பையும் மீறிய செயலாகும். சைவ மரபின்படி 'இலங்கும் உயிர் அனைத்தும் ஈசன் கோயில்'களாகும். எனவே உயிர்க் கொலை, புலால் உண்ணல் ஆகியவற்றை மறுத்து, எல்லா உயிர்களிடத்தும் அன்பு, அருள் ஆகிய வற்றைப் பொழிவதே சைவ மரபாகும்.

## தொண்டு

நான், எனது என்ற ஆணவங்களின் நீங்கிய தொண்டு சைவத்தில் பெரிதும் வற்புறுத்தப்படுகிறது. பெரியபுராணம் சைவ அடியார்களின் தன்னலங் கருதாப் பெருந்தொண்டை — சிவத்தொண்டை விரிவாக விளக்கிக் கூறுகிறது. பெரியபுராணத்தின் பாவிகமே 'தொண்டு' என்று கூறினாலும் அது மிகையாகாது.

**தன்கடன் அடியேனையும் தாங்குதல்**
**என்கடன் பணிசெய்து கிடப்பதே**

என்னும் அப்பர் வாக்கு, சமயத் தொண்டை நன்கு விளக்கி நிற்கும். கூறியவாறே உழவாரப்பணி, திருஞான சம்பந்தருக்குப் பல்லக்குத் தூக்கியது ஆகிய செயல்களைச் செய்தவர் அப்பர் பெருமான்.

ஆன்மா கடவுளையடைய முடியாமல் தடுக்கும் நான், எனது என்னும் மாயை அறுந்து, உயிர் பேரின்பம் அடைய இத்தொண்டு வழிவகுக்கும்.

சமுதாயத்தை விட்டு ஒதுங்கி ஓடும் ஒதுங்கல் கொள்கையைச் சைவம் வலியுறுத்தவில்லை. மாறாகச் சமூகத் தொண்டைப் பெரிதும் வலியுறுத்திக் கூறுகின்றது.

## விருந்தோம்பல்

விருந்தினர்களைப் பேணுவதில் நமது நாடு பெயர் பெற்றது. விருந்து பேணும் சிறப்பொழுக்கத்தைப் பற்றித் திருவள்ளுவர் தனி அதிகாரத்தையே வகுத்திருக்கிறார் என்பதன் மூலம் இவ்வொழுக்கம் நமது நாட்டில் எத்துணை மேன்மையாகக் கருதப்பட்டது என்று தெளிவாகும்.

சைவ ஒழுக்கத்தில் 'விருந்தோம்பல்' ஓர் இன்றியமையாத அங்கமாகக் கருதப்பட்டது. சைவராயினார் பிறவிப் பயன் எய்த வேண்டுமானால் அவர்கள் இரண்டு செயல்களை மேற்கொள்ள வேண்டும். முதலாவது மதிசூடும் அண்ணலார் அடியார் தமை அமுது செய்வித்தல். கண்ணினால் அவர் நல்விழாப் பொலிவு காண்டல் இரண்டாவது. சேக்கிழார் பெருமான் இவற்றை அறுதியிட்டுக் கூறுகிறார். இதற்கு அவர் மூலமாகக் கொண்டது,

**ஒட்டிட்ட பண்பின் உருத்திரப்பல் கணத்தார்க்கு**
**அட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்**

என்னும் சம்பந்தரது திருமயிலைப் பாசுரமாகும். பெரியபுராணத்துள் பல திருத்தொண்டர்களது செயற்கருஞ் செயல்கள் பேசப்பட்டுள்ளன. அவற்றுள்,

சிவனடியார்களைப் பேணி, அவர்களுக்கு வேண்டுவன நல்கி, அமுது செய்வித்து, அதனால் முக்தி பெற்ற தொண்டர்கள் பதின்மருக்குக் குறையாமல் இருக்கிறார்கள். இதனால் விருந்தோம்பல் சைவ சமயத்தின் தலையாய பண்பாகும் என்பதைஅறியலாம்.

## அருள் நூல்கள் ஓதுதல்

அருள் என்ற சொல்லுக்குக் கொடை, சக்தி முதலிய பல பொருள்கள் உண்டு. அருள் என்பது அன்பின் முதிர்ச்சியால் உண்டாவது. அதனால்தான் 'அருளென்னும் அன்பின் குழவி' என்றார் வள்ளுவப் பெருந்தகை. அன்பு என்பது தொடர்புடையாரிடத்தும், அருள் என்பது தொடர்பில்லாதார்மாட்டும் தோன்றும் ஒருவகை உள்ள நெகிழ்ச்சியாகும். இத்தகைய அருள் உள்ளம் படைத்த பெரியோர்களால் எழுதப்பட்ட நூல்கள் 'அருள் நூல்கள்' எனப்படும்.

உயிர் என்பது என்ன? அஃது எப்படியிருக்கும்? அஃது எங்கிருந்து வருகிறது? அது தன் வினை முடிந்த பின் எங்கே செல்லுகிறது? என்பன போன்ற செய்திகள் மனிதனால் உணர இயலாதவையாக இருக்கின்றன. இச்செய்திகள் யாருக்கும், எக்காலத்தும் தெரியலாகாது என்று எச்சக்தி மறைத்து வைத்திருக்கிறதோ, அந்தச் சக்தியையே நாம் அருள் என்றும் கடவுள் என்றும் கூறுகிறோம். அச்சக்திக்கு மிக அண்மையில் நம்மைக் கொண்டு சேர்த்து, அதன் அருளுக்குப் பாத்திரமாவதற்கு வழிகாட்டுவதுதான் அருள் நூல்களின் பயன். அவை மனம் என்னும் குரங்கைத் தன் விருப்பம் போல் செலவிடாது, ஒரு நிலைப்படுத்துவது எல்லோர்க்கும் இயலாது. அத்தகையோர், அருள் நூல்களைப் பயின்று வந்தால் சிந்தைக்

கும் மனத்துக்கும் நல்ல பயிற்சி ஏற்படும். ஒருமைப் பாடுள்ள மனத்தின் துணையால் அரிய காரியங்களை யும் சாதிக்க இயலும்.

மனிதன் அறிவு அழிவுக்கு வழிகோலாமல், ஆக்கத்திற்குப் பயன்பட வழிவகுப்பன அருள் நூல்களாகும்.

**சமயப் பொறை**

இன்று சமயத்தின் பெயரால் உலகில் பல கலவரங் கள் நிகழக் காண்கிறோம். இவை உண்மை நிலையை அறியா மாபெருங் குறையால் நிகழ்வனவாகும். சைவ சமயம் தொடக்கத்திலிருந்தே சமயப் பொறையை— எல்லாச் சமயங்களையும் மதிக்கும் பான்மையை வலியுறுத்தியுள்ளது.

சைவம் பிறரைப் பழிக்காதது, பிறரைக் குறை கூறாதது. ஊர் ஒன்றுதான்; அதற்கு வழிகள் ஆறு உள; அதுபோல் அறுவகைச் சமயங்களும் இறை வனை அடைவதற்கு வெவ்வேறு வழிகளாவன. பசுக்கள் பல வண்ணமாயிருப்பினும், அவற்றின் பால் ஒரே வண்ணமாய் இருப்பது போல, சமயங்கள் பலவாயினும் அவை கூறும் முடிவானபொருள் ஒன்றே என்பன சைவ சாத்திரம் கூறும் கருத்துகளிற் சில. விரிவிலா அறிவுடையார்கள் புதிதாக ஒரு சமயத்தைப் பகையுணர்ச்சியால் தோற்றுவித்தாலும் கூட, அதுவும் என் பிரானுக்கு ஏற்றதாகும் என்பார் அப்பர். அறுவகைச் சமயத்தோர்க்கும் அவரவர் பொருளா யிருப்பதோடு, இறைவன் அவற்றைக் கடந்து அப்பாலான தன்மையுடையவனாயுமிருக்கிறான் என்ற எண்ணம் சைவத்தில் மேலோங்கியிருக்கிறது. இதனால் சமயப்பொறை ஏற்படுகின்றது. 'சைவம்

தனித்தும் எல்லாச் சமயங்களிலும் ஊடுருவிப் பாய்ந்தும் நிற்பது' என்று தமிழ்ப் பெரியார் திரு.வி.க. அவர்கள் சைவத்தின் சமரசம் என்ற தம் நூலுள் விளக்குகிறார்.

**முடிவுரை**

மேற்கூறிய செய்திகளால் சிவ சம்பந்தமுடையது சைவம் என்பதும், அது மிகத் தொன்மையான சமயம் என்பதும் அச்சைவத்தைப் பற்றி அறிய அருள் நூல்களும், சைவ சித்தாந்த நூல்களும் துணை செய்கின்றன என்பதும், அன்பு, தொண்டு, விருந்தோம்பல், அருள் நூல்கள் ஓதுதல் ஆகியவை சைவத்தின் முதன்மைக் கருத்துகளாகும் என்பதும் புலனாகும். சைவ சமயம் எல்லாச் சமயங்களையும் மதித்துப் போற்றும் சமயப்பொறை கொண்ட சமயம் என்பதும் தெரியலாகும்.

## துணை நூல்கள்

அருணாசலம், ப. **சைவ சமயம்** (ஓர் அறிமுகம்) நாகர்கோவில், 1979.

அருணாசலம், மு., **சைவ சமயம்,** பாரி நிலையம், சென்னை, 1969.

சுந்தரமூர்த்தி, கோ., **சைவ சமயம்,** சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, இரண்டாம் பதிப்பு, 1979.

தயானந்தன் பிரான்சிஸ், **தமிழ்ச் சைவம்,** கிறித்துவ இறையியல் நூலோர் குழு, சென்னை, 1972.

**சைவ சமயச் சொற்பொழிவுகள்,** சைவ சித்தாந்த மகா சமாசம், சென்னை. 1959.

# 11. தமிழில் பக்திப் பனுவல்கள்

**(குமரகுருபரர், சிவப்பிரகாசர், தாயுமானவர், இராமலிங்கர், இக்காலத் தமிழ்க் கவிஞர்கள்)**

முன்னைப் பழமைக்கும் பழமையாய்ப் பின்னைப் புதுமைக்கும் புதுமையாய்ப் பேர்த்தும் அப்பெற்றி யனாய் இறைவன் விளங்குவது போலவே, தமிழ் மொழியும் பழமைக்குப் பழமையாய், புதுமைக்குப் புதுமையாய்ச் சிறந்தொளிர்கின்றது. தமிழ் இலக்கியப் பேரியாறு காலங் காலமாய்க் கோலம் பல புதுக்கிக் கொள்ளை வனப்புடன் ஓடிக் கொண்டிருக்கின்றது. மொழியின் வாயிலாக வாழ்க்கையை வடித்து நிற்பது இலக்கியமாகின்றது. ஒரு காலத்தெழுந்த இலக்கியம், அக்காலச் சூழலை, மக்கள் வாழ்க்கைப் பின்னணி யினை விளங்க எடுத்துரைக்கின்றது. எனவே ஓர் இலக்கியம், அஃது எழுந்த காலத்தின் விளைவு எனலாம். **(A Literature is the product of the age)** ஒரு காலத்தெழுந்த இலக்கியத்தில் அக்காலத்தின் பின்னணி தவறாது இடம் பெற்றிருக்கக் காணலாம்.

காதலும் போரும் பழந்தமிழ் இலக்கியங்களின் பிழிவாக அமைந்துள்ளன; இடைக்கால இலக்கியங் களின் பிழிவாகச் சமயமும் தத்துவமும் அமைகின்றன; அறிவியலும், மனிதவியலையொட்டிய கருத்துகளும்

இக்கால இலக்கியங்களின் கொள்கைகளாக விளங்கக் காணலாம். (Love and war forened the themes of the ancient classics; Religion and philosophy of the modieval poems as Science and humanity predominate the modern writings''—Prof. M. S. Purnalingam Pillai 'Tamil Literature').

இடைக்கால இலக்கியங்கள் பக்தி இயக்கத்தின் விளைவால் முகிழ்த்தவைகளாகும். 'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கப் பாடிய' அடியவர் தம் மனவெழுச்சிகளின் உந்துதலிற் பிறந்தவைகளாகும். தவத்திரு தனிநாயக அடிகளார் தமிழ்மொழி பற்றிப் பின் வருமாறு குறிப்பிட்டிருக்கக் காணலாம் :

> "அளவிலும் சுவையிலும் தமிழிலுள்ள திருப்பாடல்கள் போல், பிற இலக்கியங்களில் இல்லை. எனவே, மொழிநூல் முறையில் எத் துணை வழுவுடையதாயிருப்பினும், ஆங்கிலம் வணிகத்தின் மொழி என்றும், இலத்தீன் சட்டத் தின் மொழி என்றும், கிரேக்கம் இசையின் மொழி என்றும், ஜெர்மன் தத்துவத்தின் மொழி என்றும், பிரெஞ்சு தூதின் மொழி என்றும், இத்தாலியன் காதலின் மொழி என்றும் கூறுவது ஒருபுடை ஒக்குமெனின், தமிழ் இரக்கத்தின் மொழி எனலுமாம்."

இவ்வாறு பக்தி மொழியாகப் பாராட்டப் பெறும் தமிழ் மொழியினை—நாயன்மார்களும், ஆழ்வார்களும் நன்முறையில் வளர்த்த நற்றமிழினைப் பிற்காலத்தே குமரகுருபரரும், சிவப்பிரகாசரும், தாயுமானவரும் இராமலிங்கரும் தோன்றிப் பக்திப் பனுவல்கள் பல

பாடினர். இவர்களால் சைவ சமயமும் சமரச நோக்கும் வளர்ந்தன. இவர்கள் பாடிய பாடல்கள் இலக்கிய உலகில் புதிய திருப்பங்களை ஏற்படுத்தின எனலாம்.

முதலாவது இவர்தம் வாழ்வு குறித்தும் படைப்பு கள் குறித்தும் ஓரளவு காண்போம்.

பதினேழாம் நூற்றாண்டின் இணையிலாப் புலவராய்த் திகழ்பவர் குமரகுருபரர் ஆவர். திக்கெலாம் புகழும் திருநெல்வேலி மாவட்டத்தில் ஸ்ரீவைகுண்டம் என்னும் திருத்தலத்திற்கு அருகில் உள்ள கைலாச புரத்தில் சைவ வேளாள மரபில் சண்முக சிகாமணிக் கவிராயருக்கும் சிவகாம சுந்தரி அம்மையாருக்கும் மகவாய் பிறந்த இவர் ஐந்து வயது வரை பேசாத மூங்கையாய் இருந்தார். கவலையுற்ற தாய் தந்தையர் திருச்செந்தூர் சென்று செந்திலாண்டவன் சந்நிதியில் குழந்தையைக் கிடத்திக் கந்தவேள் அருள் வேண்டிப் பாடு கிடந்தனர். செந்திலாண்டவன் அருளால் பேசும் சக்தி பெற்ற குமரகுருபரர் நாளடைவில் கவிதை இயற்றும் ஆற்றலும்பெற்றார். இவர் பாடிய 'மீனாட்சி யம்மை பிள்ளைத் தமிழ்', பிள்ளைத் தமிழ் இலக்கி யத்தில் சிறப்பு வாய்ந்த நூலாகும்.

மதுரைச் சோமசுந்தரக் கடவுள்மீது பாடிய 'மதுரைக் கலம்பகம்' சொற்சுவை பொருட்சுவை மிகுந்தது. இவர் பாடிய 'நீதிநெறி விளக்கம்' கல்வி பற்றிய இவர்தம் சிந்தனையைக் கவினுறக் கிளத்தி நிற்கிறது. திருவாரூரிற் பாடிய 'திருவாரூர் நான்மணி மாலை'யும் சிறப்புடையது. 'சிதம்பர மும்மணிக்

கோவை' தமிழிற்கும் புதிய அணியாய் அமைந்தது. 'காசிக் கலம்பகம்', 'சகலகலா வல்லி மாலை' காசியில் இவராற் பாடற்பெற்ற சிறந்த நாவல்களாகும். தம் குருநாதர் மீது இவர் பாடிய 'பண்டார மும்மணிக் கோவை' சிறப்புடைய நூலாகும். வடநாடு சென்று, இந்துஸ்தானி மொழி கற்று, டெல்லி பாதுஷாவின் மதிப்பினைப் பெற்று, காசியில் ஒரு மடம் கட்டிச் சைவ சமயம் வளரப் பாடுபட்டார். தமிழ் இலக்கிய வரலாற்றில் இவர் ஒரு தனித்த சிறப்பிடத்தினைப் பெறுகிறார்.

சிவப்பிரகாசர் பதினெட்டாம் நூற்றாண்டின் இணையிலாப் புலவர் ஆவர். 'கற்பனைக் களஞ்சியம்' என்று பாராட்டப் பெறுபவர். வீரசைவ சமயத்தைச் சார்ந்த இவர், அச்சமயத்தை வளர்க்கப் பெரிதும் பாடு பட்டார். தொண்டைநாட்டுத் துறைமங்கலம் என்னும் ஊரினர். தருமபுர ஆதீன வித்துவான் வெள்ளியம்பலத் தம்பிரானிடம் கல்வி பயின்றார். திருச்செந்தூர் முருகன் மீது 'நிரோட்டக யமக அந்தாதி' பாடினார். இதழ்கள் ஒன்றோடு ஒன்று பொருந்தாமல் வரும் சொற்களை அமைத்துப் பாடப் பெறுவது இந்நூலின் தனிச் சிறப்பாகும்.

சைவ சமய குரவர் நால்வர்மீது இவர் கொண்ட ஆரா அன்பினைத் தம் 'நால்வர் நான்மணி மாலை'யில் புலப்படுத்தியுள்ளார். வீர சைவ சமயத்தின் பெருமை யினை விளக்கும் காப்பியமாம் 'பிரபுலிங்க லீலை' இவர் இயற்றிய நூல்களில் தலைசிறந்த நூலாகக் கருதப்படுகின்றது. இந்நூலில் சிவப்பிரகாசரின் கற்பனைச் சிறப்பினையும் சொற்பொருள் நயத்தினை

யும் காணலாம். 'நன்னெறி' இவர் இயற்றிய நீதி நூலாகும். திருவண்ணாமலையில் கோயில் கொண்டிருக்கும் அருணாசலேசுவரர் மீது பாடப் பெற்றது 'சோணசைலமாலை'யாகும். திருக்கோவையார்க்கு அடுத்தபடியாகக் கருதப் பெறும் 'திருவெங்கைக் கோவை' இவரது படைப்பேயாகும்.

பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே சமயத் துறையில் தெளிந்த அறிவினைப் பெற்று ஒளிவீசித் திகழ்ந்தவர் தாயுமானவர் ஆவர். திருச்சிராப்பள்ளியில் மலைக்கோட்டையில் எழுந்தருளியிருக்கும் சுவாமியின் திருப்பெயர் தாயுமானவர் என்பதாகும். இவர் தந்தையார் பெயர் கேடிலியப்பப் பிள்ளை; தாயார் பெயர் கஜவல்லி அம்மை என்பதாகும். திருமறைக் காட்டில் சைவ வேளாளர் குடியிற் பிறந்து, மௌன குருவிடம் கல்வி பயின்ற இவர், வட மொழி, தென்மொழி இரண்டிலும் புலமை பெற்றுத் திரிசிரபுரத்தில் அக்காலத்தில் நாயக்கப் பேரரசின் பிரதிநிதியாக இருந்து ஆட்சி நடாத்திய விசயரகுநாத சொக்கலிங்க நாயக்கரிடம் வேலையில் அமர்ந்து, பின்னர்த் துறவு பூண்டார். யோக ஞானங்களில் சிறந்த இவர், சைவ சமய உண்மைகளையும், சித்தாந்தக் கொள்கைகளையும் தம் பக்திப் பாடல்களில் தெளிவாக உணர்த்துகின்றார்.

**"எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே அல்லாமல்**
**வேறொன் றறியேன் பராபரமே"**

என்ற உயர்ந்த குறிக்கோளினைக் கொண்டு சமரச ஞானம் பிறங்கிட வாழ்ந்தவர் இவராவர்.

உறவினரின் வற்புறுத்தலால் மட்டுவார்குழலி என்னும் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டு சில காலம் இல்லறத்தில் ஈடுபட்டு அதன் பயனாகப் பிறந்த குழந்தைக்குக் கனகசபாபதி என்னும் பெயரிட்டார். இவருடைய பாடல்கள் வாழ்விற்கு அமைதி தரும் போக்கின எனலாம்.

பத்தென்பதாம் நூற்றாண்டில் சமயத்துறையில் ஓர் ஒளிவிளக்காய்த் திகழ்ந்தவர் இராமலிங்க அடிகளாவர். தென்னார்க்காடு மாவட்டம் மருதூரில் பிறந்த இவர், சென்னையிலும் கருங்குழியிலும் சில காலம் வாழ்ந்து இறுதியில் வடலூரில் தமது ஐம்பத்தொன்றாம் வயதில் மறைந்தார். இவருடைய தந்தையார் பெயர் இராமையாபிள்ளை; தாயார் பெயர் சின்னம்மாள். இளம் வயதிலேயே கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கிய இவர், 'மனுமுறை கண்ட வாசகம்' என்னும் தமிழ் உரைநடை நூலை எழுதியுள்ளார். இவரியற்றிய 'திருவருட்பா' கொல்லாமை என்னும் ஜீவகாருண்ணிய ஒழுக்கத்தினைச் சிறக்கப் பேசுகின்றது.

கண்மூடிப் பழக்கங்கள் மண்மூடிப் போக வேண்டும் என்றும், சாதிசமயச் சழக்குகள் மடிய வேண்டும் என்றும், சன்மார்க்கம் தழைக்க வேண்டும் என்றும், பாரக மடங்கலும் பசிப்பிணி அகல வேண்டும் என்றும் தம் வாழ்நாள் முழுதும் பாடுபட்ட சீர்திருத்தச் செம்மல் இவராவர். தம் வாழ்க்கையில் அற்புதங்கள் பலவற்றை நிகழ்த்திய இவர்தம் மறைவு இன்றும் சர்ச்சைக்குரியதாக விளங்குகின்றது. 'சாகாக் கல்வி' என்றும், 'சாகாத வாழ்வினை இச்சகத்

திலேயே பெற்று விடலாம்' என்றும் இவர் தமமுடைய பாடல்களில் வற்புறுத்தியிருக்கக் காணலாம்.

இக்காலத்தில் பக்திப் பாடல்கள் எழுதுவோர் பலரெனலாம். ஆயினும் அவர்களில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவராக விளங்குபவர் கவியரசு கண்ணதாசன் ஆவர். இவர் சிறுகூடற்பட்டி விசாலாட்சி அம்மையையும், திருவேங்கடத்து வேங்கடவனையும் நெக்குருகிப் பாடியுள்ள பாடல்கள் கல் மனத்தையும் கரையச் செய்யும் பான்மையன வாகும். இவருடைய தெய்வப் பாடல்கள் படிப்போர் மனத்தில் ஓர் எழுச்சியைத் தந்து நிற்கும் முறையில் அமைந்திருக்கக் காணலாம்.

''புலவர் ஒருவர் தாம் கண்டறிந்த ஒன்றையோ, கேட்டறிந்த ஒன்றையோ, நன்றாக உள்ளத்தில் உணர்ந்து, கற்பனையோடு வளர்த்து, கலைவடிவம் தந்து சொற்களால் புலப்படுத்துவது நல்ல இலக்கியம் ஆகும்'' என்று நல்ல இலக்கியத்தின் தன்மையினைப் பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் விளக்கியுள்ளார்.[3]

கலைகளில் சிறந்தது இலக்கியக் கலையாகும். நில்லாத அழகினை நிலைபெறச் செய்வது இலக்கியமே எனலாம். அந்திச் செக்கர் வானத்தின் அழகுக் காட்சியினை நாம் நினைத்த நேரத்தில் பார்த்துக் கொண்டிருக்க முடியாது. ஆனால் அந்த அந்திச் செக்கர் வான அழகைத் தீஞ்சுவைக் கவிதையில் கவிஞனொருவன் சித்திரமாகத் தீட்டி வைத்து விடுவானேயானால் அஃது உலகுள்ளளவும் நிலைத் து

நிற்கும் பெற்றித்தாகும். இன்னுஞ் சொல்லப் போனால் கவிதையைப் படைக்கும் கவிஞன் பிரம்மா என்னும் படைப்புக் கடவுளின் படைப்பாவான். அவன் காலத்தில் அழியக் கூடியவன்; ஆனால் அவன் படைத்த கவிதையோவெனில் காலங்கடந்தும் வாழும் நீர்மைத்தாகும். இதனையே குமரகுருபரர் பின்வருமாறு ஒரு பாட்டில் குறிப்பிட்டிருக்கக் காணலாம்.

**"கலைமகள் வாழ்க்கை முகத்தது என்னும்**
**மலரவன் வண்டமிழோர்க்கு ஒவ்வான் மலரவன்செய்**
**வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு**
**மற்றவர் செய்யும் உடம்பு."[4]**

இவருடைய பாடல்களின் சிறப்புக் குறித்து டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்கள் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார் :

"ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளுடைய செய்யுட்களில் தனிச்சிறப்புப் பெற்று விளங்குவது அவற்றின் இன்னோசையேயாகும். ஏனைப் பாட்டுக்களிலிருந்து இவருடைய செய்யுட்களைச் செவிப் புலன் கொண்டே வேறுபடுத்தி விடலாம். இவற்றைக் கேட்கும்போது நமக்குத் தென்பாண்டி நாட்டுப் பொருநை நதியின் ஓட்டம் ஞாபகத்துக்கு வருகின்றது. சொற்களும் சொற்றொடர்களும் ஒன்றனோடு ஒன்று செவிக்கினிமை தரும்வண்ணம் பொருந்தி அமைந்துள்ளன. பொருளிலே கருத்துச் செல்வதற்கு முன் செய்யுட்களின் ஓசை நம் கருத்தை இழுக்கின்றது.

"சொல்லின்பத்தை விளைவிப்பனவாகிய கருவிகள் அனைத்தும் கம்பீரமாகச் செல்லும் இவருடைய செய்யுள் நடையில் நன்கு அமைந்துள்ளன. எவ்வகை

யாப்பையும் பேராற்றலையும் அமைக்கும் இம்முனிவருக்குச் சொற்களும் தொடை நயங்களும் சிறிதும் முயற்சியின்றி இயல்பாகவே வந்து அமைகின்றன. வழியெதுகையும் முரண்டொடையும் அச்செய்யுட்களின் ஓசையைப் பொலிவுறுத்துகின்றன. சந்தத்தை இவர் மிக எளிதின் அமைத்துள்ளார்.

"விருத்தங்களிலும் வெண்பாவிலும் இவருக்கே உரிய ஓசைநயம் மேம்பட்டு விளங்குகின்றது. அகவல்களிலும் வேறு செய்யுட்களிலும் இவருடைய கருத்துக்கள் தெளிவாக விளக்கப் பெற்றுள்ளன."[5]

குமரகுருபரருக்குத் தமிழ்மொழிமாட்டுத் தணியாத காதல் இருந்தது. தமிழைத் 'தெய்வத் தமிழ்' என்பர் இவர். இளமைக்காலத்தே கந்தவேளிடத்து இவர் முற்றிய தமிழ்ப் புலமையையே முறையே வேண்டுகின்றார்.

**"ஆசுமுத னாற்கவியு மட்டாவ தானமுஞ்சீர்ப்**
**பேசுமியல் பல்காப் பியத்தொகையும்—ஓசை**
**எழுத்துமுத லாமைந் திலக்கணமுந் தோய்ந்து**
**பழுத்த தமிழ்ப்புலமை பாவித்து"** [6அ]

முற்றிய வயதிலும் கலைமகளை வேண்டும் போதும் தமிழ்ப் புலமையே வேண்டுமென வேண்டுகிறார்.

**"நாடும் பொருட்சுவை சொற்சுவை தோய்தர நாற்கவியும்**
**பாடும் பணியிற் பணித்தருள்வாய்"** [6ஆ]

குமரகுருபரர் முருகப் பெருமானும் பரமசிவனும் ஒருவரே எனுங் கொள்கை உடையவர். கந்தர் கலிவெண்பாவில் இவர் பரமசிவனுக்குரிய இயல்புகளை முருகக் கடவுளுக்கு அமைத்துப் பாடியுள்ளார்.

**மறைமுடிவில் நின்று நிறை செல்வன்**[7]
**தனிமுத்துக் கொரு வித்து.**[8]

மேலும் இவர் முருகப் பெருமான்மீது கொண்ட முருகிய காதற் பக்தி,

**"மெய்கண்ட தெய்வம்இத் தெய்வம்அல்**
**லாற்புவியில் வேறில்லை"**[9]

என்ற பாடல் அடியால் விளக்கமுறும்.

முருகு என்றால் அழகு, இளமை, மணம், தெய்வத் தன்மை எனப் பொருள் கொள்வார் தமிழ்ப் பெரியார் திரு.வி.க. அவர்கள்.[10] குமரகுருபரர் முருகனில் அழகில் உள்ளந்தோய்ந்து ஈடுபட்டுப் பாடுவதனைப் பின்வரும் அவர் தம் பாடல்களிற் காணலாம்:

**"இயபெ நடையும் வடிவும் அழகும் எழுத அரியன"**[10]**அ**

**"அழகு கனிந்து முதிர்ந்த இளங்கனி"**[10]**ஆ**

**"வடிவி னழகும் எழுத வரிய புயமும் நதிய செச்சையும்**
**மருமம் விரவு இரவுமரையின் மணியும் மணிகொன் கச்சையும்**
**கடவு மயிலு மயிலும் ஒழுகு கருணை வதன பத்மமும்**
**கமல விழியும் விழியும் மனமும் எழுதி எழுதிநித்தலும்**
**அடிகள் எனவுன் அடிகள் பணியும் அடியர்"**[10]**இ**

எனப் பாடியுள்ளார்.

குமரகுருபரர் காப்புச் செய்யுளில் விநாயகரைப் பரவிப் பாடியுள்ளார். மதுரைச் சித்தி விநாயகரையும், வேளூர், சிதம்பரத்துக் கற்பக விநாயகரையும் பாடியுள்ளார்.

'சிறுகட் பெருங் கொலைய மழவிளங்களிறு" என்றும், 'அஞ்சு கஞ்சக் கரக் கற்பதும்' என்றும், 'ஒருகோட்டு மழக் களிறு' என்றும் இவர் பிள்ளை யாரைப் பாடியுள்ளார்.

மதுரை மீனாட்சியைச் 'சங்கம் வளர்ந்திட நின்ற பொலன்கொடி'யாக,'ஒருவன் உள்ளத்தில் அழகொளிர எழுதிப் பார்த்திருக்கும் உயிரோவியமாக'க் கண்டு உவக்கின்றார். சோமசுந்தரரைப் பாடும்பொழுது நான் மாடக்கூடலில் அவர் நிகழ்த்திய திருவிளையாடல்களை நயம்படக் குறிப்பர். இவர் சைவராயினும் பிற சமயக் காழ்ப்புக் கொள்ளாதவர் இவர் என்பது, திருமாலை இவர் 'பழமறைகள் முறையிடப் பைந்தமிழ் பின் சென்ற பச்சைப் பசுங்கொண்டலே' என்றும், 'கருணை பூத்தலர்ந்த கலைக்கண்ணன்' என்றும், 'கொண்டல் மணிவண்ணன்' என்றும் பாடியிருப்பது கொண்டு அறியலாம்.

ஆயினும் இவர் சைவ சமயத்தில் பெரிதும் நெஞ்சந் தோய்ந்தவர் என்பதனை,

**''மறைமுடிவாம் சைவம்**
**அருட்பெருஞ் சைவம்**
**திவ்வியம் பழுத்த சைவ சித்தாந்தம்''**

என்று இவர் பாடியுள்ள தொடர்கள் கொண்டு தெளியலாம்.

'கடவுளைப் பாடுதலே கற்றதன் பயன்' என்பது குமரகுருபரர் கொண்ட கொள்கை எனலாம். புல னுணர்வுகளைப் பாடாமல் புலனுணர்வுக்கு அப்பாலாய்

இலங்கும் இறைவனை—இறை நெறியை இனிதுறப் பாடியவர் குமரகுருபரர் எனலாம். இவருடைய பாடற் சிறப்பினையும் நெஞ்சப் பொதுமையினையும் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் பின்வருமாறு பாராட்டுவர் :

> "ஒரு கடவுள், ஒரு மொழி, ஒரு கலை, ஒரு நாடு என்னும் வரையறையின்றிப் பல கடவுளரையும் பல மொழிக் கருத்துக்களையும், பல கலைச்செய்திகளையும், பல நாட்டு வருணனைகளையும் இவருடைய செய்யுட்களிற் காணுகின்றோம். இந்நாட்டின் தென் திசையிலுள்ள செந்தூரையும், வடநாட்டிலுள்ள காசியையும் இவர் கண்டறிந்து பாடுகின்றார். தாம் பிறந்த பாண்டி நாட்டையும், குருவைப் பெற்ற சோழநாட்டையும், வாழ்ந்து வந்த கங்கைக் கரையையும் வருணிக்கின்றார். சிவபெருமான் முதல் கலைமகள் வரையுள்ள தெய்வங்களைப் பாராட்டுகின்றார். சைவ பரிபாஷைகளோடு வைணவ பரிபாஷைகளையும் ஒருசார் அமைக்கின்றார். இவற்றால் இவர், 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்' என்னும் மனோபாவமும், விரிந்த உலகியலறிவும் உடையவர் என்பதை உணரலாகும்."[11]

குமரகுருபரர் பாடியுள்ள நூல்கள் வருமாறு : (1) கந்தர் கலிவெண்பா (2) மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் (3) மதுரைக் கலம்பகம் (4) நீதிநெறி விளக்கம் (5) திருவாரூர் நான்மணிமாலை (6) முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ் (7) சிதம்பர மும்மணிக்கோவை

(8) சிதம்பரச் செய்யுட் கோவை (9) பண்டார மும் மணிக்கோவை (10) காசிக் கலம்பகம் (11) சகல கலாவல்லி (12) கைலைக் கலம்பகம் (13) காசித்துண்டி விநாயகர் பதிகம்.

இப்பதின்மூன்றனுள்ளும் கைலைக் கலம்பகத்தில் பல செய்யுட்கள் காணப்படவில்லை. காசித்துண்டி விநாயகர் பதிகம் முழுவதுமே கிடைக்கவில்லை.

எல்லா வகை யாப்பு வடிவங்களிலும் பாடவல்லவர் குமரகுருபரர் என்பது பின்வரும் அட்டவணையால் விளங்கும். இவ் அட்டவணையால் அவர் பாடிய பாடல்கள் எவ்வெவ் யாப்பு வகையின் பாற்பட்டு அமைந்துள்ளன என்பது தெளிவாகக் காணலாம்.

வெண்பா—189
வெண்டாமுடை—5
வெண்டுறை—5
வெளிவிருத்தம்—2
ஆசிரியப்பா—41
ஆசிரியத்தாழிசை—2
ஆசிரியத்துறை—4
ஆசிரிய விருத்தம்— 298
கலிப்பா—38
கலித்தாழிசை—9
கலித்துறை—96
கலிவிருத்தம்—6
வஞ்சிப்பா – 2
வஞ்சித்தாழிசை—1
வஞ்சித்துறை—3
வஞ்சி விருத்தம்—4
மருட்பா—6

இவ்வாறாகக் குமரகுருபரர் பல்வேறு யாப்பமைதி களைக் கையாண்டு, கடவுளர் பலர் மீதும் பாடல்கள் புனைந்து, தெய்வத் தமிழ் இலக்கியம் செழிக்கச் சிறக்கத் தொண்டு செய்துள்ளார் எனலாம்.

சிவப்பிரகாசர் வீரசைவத்தை வளர்ப்பதற்கென்றே வாழ்ந்தவர். வீரசைவக் கருத்துகளைப் பெய்து 'பிரபுலிங்கலீலை' என்னும் காப்பியம் சமைத்தவர். இக்காப்பியம் இவருக்குக் 'கற்பனைக் களஞ்சியம்' என்னும் சிறப்புப் பட்டம் தந்தது எனலாம். தேவார மூவரிடத்தும் மாணிக்கவாசகரிடத்தும் இவர் அளவிலா அன்பு செலுத்தியவரென்பது இவரியற்றிய 'நால்வர் நான்மணிமாலை'யால் விளங்கும். மணி வாசகப் பெருந்தகையின் திருவாசகத்தில் இவர் பெரிதும் ஈடுபட்டு உளம்உருகி நின்றவர் என்பதனைப் பின்வரும் 'நால்வர் நான்மணி மாலை'ப் பாடற்பகுதி விளக்கும்.

**திருவா சகமிங் கொருகா போதின்**
**கருங்கன் மனமும் கரைந்துக் கண்கள்**
**தொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய**
**மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி**
**அன்ப ராகுந ரன்றி**
**மன்பதை யுலகில் மற்றைய ரிலரே.**[13]

"யான் பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்" என்ற பரந்துபட்ட கொள்கையிற் பாரில் வாழ்ந்தவர் தாயுமான தயாபரர் ஆவர். மேலும் அவர்,

**"எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே**
**அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே"**

—பராபர : 221

என்று வாழ்ந்தவரான காரணத்தால் இவர் சமயப் பொதுமை கண்ட சமசர ஞானியெனப் போற்றப் பெறுகின்றார்.

தாயுமானவர் பாடியுள்ள பாடல்கள் 1454 ஆகும்; இவற்றுள் மாலை 587, கண்ணிகள் 865, அகவல் 1, வண்ணம் 1 அடங்கும்.

தமக்கு இறைவன் குரு வடிவல் தோன்றி அறம் பொருள் இன்பம் வீடு எனும் நாற்பேற்றினை உணர்த்தியதாகக் குறிப்பிடுகின்றார்:

**அறம்பொரு ளாதி திறம்படு நிலையில்**
**குருவா யுணர்த்தி.**

மேலும் இவர் வெறும் பேச்சால் மட்டும் கடவுளின்பம் கிட்டிவிடாது என்று குறிப்பிடுகின்றார்:

**''வாசக ஞானத்தால் வருமோ சுகம்''.**

**''கேட்டதையே சொல்லுங் கிளிபோல நின்னருளின்**
**நாட்டமின்றி வாய்பேசல் நன்றோ பராபரமே''.**

இவற்றால் இறைவனை நூலறிவால் அறிய முடியாது. ஞான அறிவால்தான் அறிய முடியும் என்னும் தாயுமானவரின் உள்ளக்கிடக்கை புலனாகின்றது.

தாயுமானவர் இறைவனைத் தாயாகவும் தலைவனாகவும் எண்ணி இவ் இருவகையிற் பாடல்களைப் புனைந்துள்ளார்.

இவருடைய பாடல்களில் பின்வரும் தொடர்கள் ஆழ்ந்து கற்று நெஞ்சில் தேக்கி நினைவில் நிறுத்த வேண்டியவைகளாகும்.

**'ஆசைக்கோர் அளவில்லை'**
*—பொருள் வணக்கம் ;* 10

**'எல்லா முன் அடிமையே'**
*—கருணாகரக் கடவுள் :* 3

**'அவனன்றி ஓரணுவு மசையாது'**
*—எங்கும் நிறைகின்ற பொருள் :* 1

**'கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்'**
*—சித்தர்கணம் :* 10

**'யான் வரும்போது ஏது துணை'**
*—வண்ணம் இறுதி அடி*

**'எண்ணரிய பிறவிதனின் மானிடப்**
**'பிறவிதான் யாதினும் அரிதுகாண்'**
*—சித்தர்கணம் :* 4

**'இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ'**
*—சித்தர்கணம் :* 4

**'வல்லான் வகுத்ததே வாய்க்கால்'**
*—சுகவாரி :* 3

**'இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பாரென்று**
**எண்ணவோ திடமில்லையே'**
*—சச்சிதானந்த சிவம்*

**'காயாத மரமீது கல்லேறு செல்லுமோ'**
*—சச்சிதானந்த சிவம் :* 8

**'வாயார உண்டபேர் வாழ்த்துவதும்**
**நொந்தபேர் வைவதுவும் எங்களுலக வாய்பாடு'**
*—சச்சிதானந்தசிவம் :* 8

தாயுமானவர் தத்துவக் கொள்கை குறித்து டாக்டர் மு. வ. அவர்கள் கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டுள்ளார்.

"தாயுமானவர் கண்மூடி நம்புகின்றவர் அல்லர். தாம் கண்டதை ஆராய்ந்து பார்த்துக் கூறினார். அதனால் அவருடைய நம்பிக்கை கண்மூடி நம்பிக்கையல்ல. தெளிவின் பயனாக ஏற்பட்ட நம்பிக்கை. ஆகவே அவருடைய சமயம் அறிவியல் முறைப்படி அமைந்த ஒரு சமய நெறி என்று கூறலாம். அறிவியல் அடிப்படையில் அமைந்த சமயம் அனைத்துலகச் சமயம் (Scientific Religion, Universal Religion) என்று இன்று அறிஞர்கள் போற்றுகின்ற அந்தப் போக்கிலே அவர் விளங்கியதைப் பாடல்களால் அறியலாம்"[13]

டாக்டர் மு. வ. அவர்கள் மேற்காணும் தம் வானொலியுரையில் தாயுமானவர் பாடல்கள் பற்றி முடிவுரையாகச் சொல்லியிருப்பது வருமாறு :

"தமிழ்நாடு கண்ட சான்றோர்க்குள்ளே தாயுமானவர் ஒருவர். அவருடைய பாடல்கள் மிக உயர்ந்த பாடல்கள். 'அங்கிங்கெனாதபடி' என்ற தொடங்குகின்ற அந்தப் பாடல் முதற்கொண்டு, ஆனந்தக் களிப்பாகப் பாடுகின்ற 'சங்கர சங்கர சம்போ' என்று தெருவிலே செல்கின்ற பண்டாரங்கள் மெட்டிலே பாடிய பாடல் வரையிலே ஆழ்ந்த பக்தி உணர்ச்சியையும் தெளிவான ஞானமார்க்கத்தையும் நாம் காணலாம். இத்தகைய சிறந்த ஞானபக்தி நிறைந்த பெருமா

னுடைய பாடல்கள் தமிழ் மொழிக்கும் தமிழகத்துக்கும் தாயுமானவர் அளித்த செல்வங்களாகும்.''

தாயுமானவர்,

**''நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம்**
**அன்பே மஞ்சன நீர் பூசை கொள்ள வாராய் பராபரமே''**

என்று பாடியுள்ள கருத்தினை நோக்க ஒரு தெளிவு பிறக்கக் காணலாம். உள்ளம் கள்ளமின்றி இருந்தால் இறைவன் உறையும் திருக்கோயிலாகும் என்பது தான் அது.

இராமலிங்கர் வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் தம் உள்ளம் வாடியவர். அருளாளராய்ப் பிறங்கியவர்:

**''அம்பலப் பாட்டே அருட்பாட்டு**
**அல்லாத பாட்டெல்லாம் மருட்பாட்டு''**

என்றும்,

**'தொடுக்கின்றேன் மாலைஇது மணிமன்றில் நடிக்கும்**
**துரை அவர்க்கே அவருடைய தூக்கிய கால்மலர்க்கே'**

என்றும் அவர் பாடியுள்ளார். எல்லையில் கூத்து நிகழ்த்தும் தில்லைக்கூத்தனைப் பாடும் பொன்னம்பலப்பாட்டே பாட்டு என்றும், மற்றும் அவனைப் போற்றிப் பாடாதவை வெறுஞ் சொற்களின் ஈட்டமே என்றும் இராமலிங்கர் கூறுகின்றார்.

**''ஆட்டுக்குக் காலெடுத்தாய் நினைப்பாடலர்**
**ஆங்கு இயற்றும்**
**பாட்டுக்குப் பேர் என்கொல்? பண் என்கொல்**
**நீட்டிய அப்பாட்டெழுதும்**

**''ஏட்டுக்குமைஎன்கொல்? சேற்றில் உறங்க**
**இறங்கும் கடா**
**மாட்டுக்கு வீரம் என்கொல்? பஞ்சணை**
**என்கொல் மதித்திடினே.''**

தாம் தொடுக்கும் சொன்மாலையாம் திருவருட்பா என்னும் திருவலங்கலை அணிய இறைவன் திருவுளங் கொள்வன் எனும் நம்பிக்கையில் உள்ளம் உவகை பூக்கப் பெருமிதங்கொண்டு பா இசைக்கின்றார் வடலூர் வள்ளற் பெருமான்.

**''என்மாலை மாத்திரமோ யார்மாலை எனினும்**
**இறைவரையே இலக்கியமாய் இசைப்பதெனில்**
**அவைதாம்**
**நன்மாலையாகும் அந்தச் சொல்மாலை தனக்கே**
**நான் அடிமை தந்தனன்பல் வந்தம்செய் கின்றேன்.''**
—திருவருட்பா 5797

வள்ளற்பெருமானின் திருப்பாடல்கள் எளிமையும் இரக்கச்சுவையும் கலந்து இழைந்து நிற்கின்றன. உலக உயிர்கள்படும் வாதை காரணமாகத் தாம் பாடும் துன்பத்தின் பிரதிபலிப்பே தம் பாடல்கள் என்றார்:

**''ஏனுரைத்தேன் இரக்கத்தால் எடுத்துரைத்தேன்,''**

**''இரக்கம் ஒருவில் என்னுயிரும் ஒருவும்.''**

**''என்னையும் இரக்கம் தன்னையும் ஒன்றாய் இருக்கீவ.''**

**''இசைவித்து இவ்வுலகில் மன்னி வாழ்வுறவே**
**வருவித்தான் கருணை வள்ளல்.''**

**"நான்படும் பாடு சிவனே உலகர் நவிலும் பஞ்சு
தான்படுமோ சொல்லத்தான் படுமோ எண்ணத்தான்
படுமோ
கான்படு பண்ணியின் மரன்படுமாறு கலங்கி நின்றேன்
என்படுகின்றனை என்று இரங்காயென்னில்
என்செய்வேன்"**

'யான் பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்' என்று சொன்ன தாயுமானவரைப் போலவே இவரும்,

**'நான்பெற்ற நெடும்பேற்றை ஓதிமுடியாது
என்போல் இவ்வுலகம் பெறுதல் வேண்டுவனே"**

என்று இறைவனிடம் முறையிடுகின்றார்.

பசித்து வந்தவர் புசித்துப் பசியாறி முகம் மலர அவர்க்கு உணவு வழங்க வேண்டும் என்பது இராமலிங்கர் கண்ட நெறியாகும். மணிமேகலைக் காப்பியத்திற்குப் பின்னர் இந்நெறி பெருமளவில் இராமலிங்கர் பாடல்களில்தான் வற்புறுத்தப்பட்டிருப் பதைக் காணலாம். சாதி சமயச் சழக்கற்று மக்கள் மாநிலத்தில் வாழ வேண்டும் என்றும், கண்மூடிப் பழக்கங்கள் மண்மூடிப் போக வேண்டும் என்றும் இராமலிங்க அடிகள் அயராது பாடுபட்டார்.

**"சாதியும் மதமும் சமயமுஞ் தவிர்ந்தேன்
சாத்திரக் குப்பையுந் தணந்தேன்
ஓதிய அனைத்தும் நீயறிந்தது நான்
உரைப்பதென் னடிக்கடி யுனக்கே.
நால்வருணம் ஆசிரமம் ஆசாரம் முதலா
நவின்றகலைச் சரிதமெலாம் பிள்ளை விளையாட்டே
மேல்வருணந் தோல்வருணங் கண்டறிவா ரிலைநீ
விழித்திதுபா ரென்றெனக்கு விளம்பியசற்குருவே."**

வடலூர் வள்ளற் பெருமானுடைய வாழ்வின் கொள்கையினை ஜீவகாருண்ணியம் அல்லது **'உயிரிரக்கம்'** என்று ஒரு சொற்றொடரிற் கூறிவிடலாம். அவருடைய இரக்க உள்ளத்தினைப் பின்வரும் இரு பாடல்களும் உணர்த்தும் :

**"காணுறு பசுக்கள் கன்றுகளாதி**
**கதறிய போதெல்லாம் பயந்தேன்**
**ஏணுறு மாடுமுதல் பலமிருக**
**மிளைத்தவை கண்டுள மிளைத்தேன்**
**கோணுறு கோழிமுதற் பலபறவை**
**கூவுதல் கேட்டுளங் குலைந்தேன்**
**வீணுறு கொடியர் கையிலே வாளை**
**விதிர்த்தல் கண்டென்னென வெகுண்டேன்."**

**"வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம்**
**வாடினேன் பசியினால் இளைத்தே**
**வீடு தோறிரந்தும் பசியறாதயர்ந்த**
**வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்**
**நீடிய பிணியால் வருந்துகின்றாரென்**
**நேருறக் கண்டுளம் துடித்தேன்**
**ஈடில் மானிகளாய் ஏழைகளாய்**
**நெஞ்சிளைத்தவர் தமைக்கண்டே இளைத்தேன்."**

**"தன்னூன் பெருக்கத்தான் பிறிதூன் உண்பான்**
**எங்ஙனம் ஆளு அருள்."**

என்று திருவள்ளுவர் தன் உடல் பெருக்கத்திற்கு ஊன் உண்ணாத நிலையை வற்புறுத்திச் சொன்னார்.

பின்வந்த தாயுமான தயாபரர்!

**"கொல்லா விரதம் குவலயம் எல்லாம் ஓங்க**
**எல்லார்க்கும் சொல்லுவது என்இச்சை பராபரமே."**

என்று கொல்லாமையை வற்புறுத்தினார். வடலூர் வள்ளற் பெருமானோவெனில் மேலும் வலிவு கூட்டிக் கொல்லாமையை வற்புறுத்தியிருக்கக் காணலாம்.

**"ஆருயிர் கொல்லார் மேலோர்**
**அறவினை யறிந்த நல்லோர்**
**தீமனம் அடக்க வல்லார்**
**இவர்களே தேவராவார்**
**காமராய்க் கற்பழித்தோர்**
**களவுசெய் துடல்வளர்த்தோர்**
**மாமிசம் தின்போரெல்லாம்**
**மானிடப் புலையர் தாமே."**

பிறவுயிர்களைக் கொன்று தின்போர், கங்கை முதலான புண்ணிய நதிகளிற் பொருந்தி நீராடினாலும், கடவுளைப் பூசித்தாலும், மாரிபோல் வாரி வழங்கினாலும், ஞானசாத்திரங்கள் பலவற்றை நவை நீங்கக் கற்றிருந்தாலும் நரகருலகடைந்து நலிவுறுவது திண்ணம் என்று அழுத்தமாகக் குறிப்பிடுகின்றார் :

**"கங்கையில் புகுந்திட்டாலும் கடவுளைப் பூசித்தாலும்**
**மங்குல்போல் கோடிதானம் வள்ளலாய் வழங்கிட்டாலும்**
**சங்கையில்லாத ஞானசாத்திரம் உணர்ந்திட்டாலும்**
**பொங்குறு புலால் புசிப்போன் போய்நர கடைவன்**
**அன்றே."**

சிறுதெய்வ வழிபாடு பெருகி, அச்சிறுதெய்வங்களுக்குக் கள்ளும் புலாலும் ஆட்டுக் கிடையும் கோழிகளும் படையலிடும் வழக்கம் பெருகிப் போயிருந்த காலத்தில் இராமலிங்கர் தோன்றினார். எனவே அத்தகைய சிறுதெய்வ வழிபாட்டினை உறுதியாகக் கண்டிக்கிறார் வள்ளற் பெருமான் :

**"நலிதரு சிறிய தெய்வம் என்று ஐயோ**
**நாட்டிலே பலபெயர் நாட்டிப்**
**பலிதர ஆடு பன்றிகுக் குடங்கள்**
**பலிக்கடா முதலிய உயிரைப்**
**பொலிவுறக் கொண்டே போகவுங்கண்டே**
**புந்தி நொந்து உளம்நடுக் குற்றேன்**
**கலியுறு சிறிய தெய்வங் கோயில்**
**கண்ட காலத்திலும் பயந்தேன்."**

சுருங்கச் சொன்னால் இராமலிங்கரின் கோட்பாட்டினைப் பின்வரும் அவர் பாடல் புலப்படுத்தும் எனலாம்.

**"எத்து ணையும் பேதமுறா தெய்வுயிரும் தம்முயிர்**
**போலெண் ணி யுள்ளே**
**ஒத்துஉரிமை யுடைய வராயுவக்கின் றார்**
**யாவரவ ருளந்தான் சுத்த**
**சித்துருவா யெம்பெருமா னடம்புரியு மிடமென**
**நான்தேர்ந் தேனந்த**
**வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திடஎன்**
**சிந்தைமிக விழைந்த தாலோ."**

## முடிவுரை

குமரகுருபரர், சிவப்பிரகாசர், தாயுமானவர், இராமலிங்கர் ஆகிய இந்நால்வரும் சைவ சமய நெறியினைப் பரப்பிய சான்றோர்கள் எனப் பொதுப்படையாகச் சொன்னாலும், குமரகுருபரரை வடநாட்டிலும் சைவ சமய மடம் கட்டிச் சமயச் சொற்பொழிவுகள் ஆற்றிப் பலதிறத்தனவான நூல்களை இயற்றித் தெய்வத் தமிழ்த்தொண்டு செய்தவர் எனலாம். பிள்ளைத்தமிழ், கலம்பகம், கோவை முதலான சிறு

பிரபந்தங்களையும் சிந்தை இனிக்கப் பாடிய பெரும் புலவர் என்று இவரை நாம் கொண்டாடலாம். பெண்பாற்பிள்ளைத்தமிழ் நூல்களில் இவருடைய மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழே சிறந்தது எனலாம். மீனாட்சியம்மையை இவர் போற்றிப் பரவும் திறம் படித்து மகிழத்தக்கது. செந்தில் வடிவேலனை இவர் 'கந்தர் கலிவெண்பா'க் கொண்டு கவினுறப் பாடியுள்ளார். தம் குருநாதர் மீது 'பண்டார மும்மணிக் கோவை'யும் யாப்பு இலக்கண மேற்கோட் செய்யுட்கெனச் 'சிதம்பரச் செய்யுட்கோவை'யும் இவர் பாடியுள்ளார்.

சிதம்பர மும்மணிக் கோவையில் இவர் அமைதி யான நல்வாழ்விற்கென இரண்டடிகளைத் தந்துள்ளார்.

**"செல்வம் என்பது சிந்தையின் நிறைவே**
**அல்கா நல்குரவு அவாவெனப் படுமே"**

என்பவைதான் அவ்வடிகள். கலைமகளாம் சரசுவதி தேவியை நெஞ்சுருகப் பாடிக் களிக்கிறார் குமரகுருபரர். கவிதா சக்தியையே கலைமகளாக உருவகம் செய்து இவர் பாடியுள்ள பாடலில் இவர்தம் தமிழ் நெஞ்சத் தினைக் காணலாம் :

**"அளிக்கும் செந்தமிழ்த் தெள்ளமுது**
**ஆர்ந்து உன் அருட்கடலில்**
**குளிக்கும் படிக்கு என்று கூடும்கொலோ?**
**உளங்கொண்டு தெள்ளித்**
**தெளிக்கும் பனுவல் புலவோர்**
**கவிமழை சிந்தக்கண்டு**
**களிக்கும் கலாபமயிலே,**
**சகலகலா வல்லியே!"**

சிவப்பிரகாசர் வீரசைவ சமயத்தைப் பரப்புவதில் முன்னின்ற புலவர் பெருமக்களில் முதலாமவர் எனலாம். வீரசைவத்தைச் சிறப்பித்துப் பாடும் இவர் பெண்ணின் பெருமையையும் போற்றினார். சைவ சமயக் குரவர்மாட்டு ஆழ்ந்த பக்தி செலுத்தியவர் இவராவர். இவர் கவிதைகளில் அளவிற்கு மீறிய கற்பனை வளத்தினைக் காணலாம். எனவே 'கற்பனைக் களஞ்சியம்' சிவப்பிரகாசர் என இவர் பின்வந்த பெருமக்களால் பெருமையுடன் அழைக்கப் படுகின்றார்.

இனிய நல்வாழ்விற்குத் தாயுமான தயாபரரின் பாடல்கள் பெரிதும் துணை நிற்கக் காணலாம். கீழ்க்காணும் அவர்தம் பாடலைப் படிப்பவர் சிறந்த சீலமுடையவர்களாய் மனக்கவலையின்றி வாழ்வர் என்பது திண்ணம். அப்பாட்டின்கண் அமைந்துள்ள பொருளை முதற்கண் கண்டுவிட்டுப் பின் பாடலைக் காண்போம்.

"எத்தனை வகையாகக் கற்றாலும் உயர்ந்த அறங்களைக் கேட்டாலும் என் உள்ளம் ஒடுங்க வில்லை."

"நான் என்னும் அகங்காரம் என் உள்ளத்தை விட்டு எள்ளளவு கூட மறைந்து விடவில்லை."

"எல்லாவற்றிலும் ஆசை வைக்கும் தன்மை என் மனத்தில் குடிகொண்டுள்ளது."

"ஈகையும் இரக்கமும் இந்தப் பிறவியிலே நான் காணாதவைகள்."

"சீலம், தவம், விரதம் என்பவற்றை நான் கனவிலே கூடக் கண்டதில்லை."

"எப்பொழுதும் பொய்தான் புகல்வேன்; சற்றும் மெய் பேசுவது கிடையாது."

"பிறர் மெச்ச அறிவுரைகள் புகல்வேன். நான் கூறும் அறிவுரைகளைப் பின்பற்றி நடந்து, உன் அருளைப் பெறாமல் வீணே கழிக்கிறேன். நான் ஓர் அறிவிலி."

இந்தக் கருத்தமைந்த பாடற்பகுதி வருமாறு :

**"எத்தனை விதங்கள்தான் கற்கினும் கேட்கினும்என்**
**இதயமும் ஒடுங்கவில்லை;**
**யான்எனும் அகந்தைதான் எள்அளவும் மாறவில்லை**
**யாதினும் அபிமானம்என்**
**சித்தமிசை குடிகொண்டது; ஈகையொடு இரக்கம்என்**
**சென்மத்தும் நான் அறிகிலேன்**
**சீலமொடு தவம் விரதம் ஒருகனவில் ஆயினும்**
**தெரிசனம் கண்டும் அறியேன்**
**பொய்த்தமொழி அல்லால் மருந்துக்கும் மெய்மொழி**
**புகன்றிடேன்; பிறர் கேட்கவே**
**போதிப்பது அல்லாது சும்மா இருந்துஅருள்**
**பொருந்திடாப் பேதை நானே."**

இராமலிங்கர் கந்தகோட்டத்துச் சண்முகரை விளித்து வேண்டும் வரமே உயர்வரம். இறைவனை ஒருமையுடன் நினைக்கும் உத்தமர் தம் உறவும், உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாதவர் நட்பும், இறைவன் புகழ் பாடும் நிலையும், பொய் பேசாத் தன்மையும், மதமான பேய் ஏறாத மனமும் பெண்ணாசை துறந்த பெருநெஞ்சும், இறைவனை மறக்காத மனமும், அறிவும் அவன்அருளும் நோயற்ற

வாழ்வும் வேண்டும் எனக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்குகின்றார்.

இவ்வாறாகத் தெய்வநெறி பாலிக்கும் பெரும் புலவர்களாகக் குமரகுருபரரும், சிவப்பிரகாசரும், தாயுமானவரும், இராமலிங்கரும் பிறங்கினர். இக்காலத்திலும் கவிஞர் பலர் இறைநெறியை வற்புறுத்தி இனிய பாடல்கள் புனையும் நெறியில் திளைத்து வாழ்ந்து வருகின்றனர். தமிழ்மொழி இரக்கத்தின் மொழியாக-பக்தியின் மொழியாகத் துலங்குகின்றது.

## குறிப்புகள்

1. **Prof. M. S.** Purnalingan Pillai—'Tamil Literature.
3. எழுதுவது எப்படி? பக். 1
4. நீதிநெறி விளக்கம்
5. ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, ஆராய்ச்சி, முன்னுரை, பக். XIX
6. அ. கந்தர் கலிவெண்பா; கண்ணிகள் 118, 119
6. ஆ. சகலகலாவல்லி மாலை
7. முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்; காப்புப்பருவம்—4
8. ,, தாலப்பருவம்—6
9. ,, அம்புலிப்பருவம்—6
10. முருகன் அல்லது அழகு

10. அ. முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்; வருகைப்பருவம் : 10

10. ஆ. ,, செங்கீரைப்பருவம் : 7

10. இ. ,, முத்தப்பருவம் : 10

11. ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, ஆராய்ச்சி—முன்னுரை

13. 'தாயுமானவர்' திருச்சி வானொலி உரை—திரு. இரா. முத்துக்குமாரசுவாமி கட்டுரை.

('தாயுமானவர் இலக்கியக் கொள்கை', 'தமிழ் இலக்கியக் கொள்கை' உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடு)

# 12. குமரகுருபரர் வாழ்வும் தொண்டும்

## பெருவாழ்வு

தாமிர பரணியாற்றின் வடகரையில் ஸ்ரீவைகுண்ட மென்னும் திருத்தலத்தின் அருகில் ஸ்ரீகைலாசம் என்னும் பகுதியில் வழிவழியாகத் திருமுருகப் பெருமானிடத்து நிலைத்த பக்தியும் தமிழ்ப் புலமையும் வாய்ந்த சைவ வேளாளர் குலத்துதித்த சண்முக சிகாமணிக் கவிராயருக்கும் சிவகாமசுந்தரி அம்மை யாருக்கும் சுமார் முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னால் பிறந்தவர், சைவமும் தமிழும் தழைக்கச் செய்த குமரகுருபரர் ஆவர்.

குமரகுருபரர் பிறந்த ஐந்தாண்டுகள் வரை பேச்சு வராத ஊமைக் குழந்தையாக இருந்தார். இதனால் கவலையுற்ற பெற்றோர்கள் திருச்செந்தூருக்கு எடுத்துச் சென்று செந்திலாண்டவர் திருச்சந்நிதியில் கிடத்திவிட்டுப் பாடு கிடந்தனர். முன்னியதை முடித்து வைக்கும் முருகப் பெருமான் அருளால் பேச்சு வராத குழந்தை பேசும் திறம் பெற்றது. அம்மட்டோ ! பாடும் திறமும் பெற்றது. முருகனருளைப் பெற்ற குமரகுருபரர் கல்வியில் நல்ல தேர்ச்சி பெற்றுக் கந்தர்

கலிவெண்பா என்னும் நூலினை முதற்கண் பாடினார். தாம் பிறந்த தலத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீகைலாச நாதர் மீது கைலைக் கலம்பகம் என்னும் ஒரு பிரபந்தம் இயற்றினார். குமரகுருபரருக்கு ஞானசாத்திரங்களே யன்றித் தமிழ் இலக்கிய இலக்கணங்களிலும் நல்ல புலமை வந்து சேர்ந்தது.

இதன் பயனாக மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், மதுரைக் கலம்பகம், திருவாரூர் நான்மணிமாலை, முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ், சிதம்பர மும்மணிக்கோவை, சிதம்பரச் செய்யுட்கோவை, நீதிநெறி விளக்கம், பண்டார மும்மணிக்கோவை, சகலகலாவல்லி மாலை, காசிக் கலம்பகம் முதலான நூல்களைத் தம் வாழ்நாளில் இயற்றித் தமிழிற்குத் தலைசிறந்த தொண்டாற்றியுள்ளார். இவருக்குச் சிவஞான உபதேசம் செய்தருளியவர் திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தில் நான்காம் பட்டத்தில் குருமூர்த்தியாக விளங்கிய ஸ்ரீமாசிலாமணி தேசிகர் ஆவர்.

துறவுநிலை அருள வேண்டுமென்று தம்ஞானாசிரி யரிடம் குமரகுருபரர் கேட்க, அவர் அதற்கு முன் தலயாத்திரை செய்து வரும்படி பணித்தல் அவ்வாதீன மரபாதலின் அக் குருமகா சந்நிதிதானம் அவரைக் காசி யாத்திரை செய்து வரும்படி கட்டளையிட்டனர். காசிக்குச் சென்று திரும்பி வர நெடுங்காலம் ஆகுமே என்று கவன்ற குமரகுருபரரை நோக்கி ஸ்ரீமாசிலாமணி தேசிகர் சிதம்பரம் வரை சென்றுவரப் பணித்தார்.

அவ்வாறே சிதம்பரம் சென்று சில நூல்களை இயற்றித் திரும்பிய குமரகுருபரர் காசிக்கும் சென்றார்.

காசியை அக்காலத்தில் ஆண்ட டில்லி பாதுஷாவின் மனத்தில் இடம் பெற்றுச் சிவத்தொண்டு சில காசியில் புரிய வாய்ப்பேற்படுத்திக் கொள்ள வேண்டும் என்று எண்ணிய குமரகுருபரர் அப்பாதுஷாவின் தாய்மொழி யாகிய ஹிந்துஸ்தானி மொழியை விரைவில் அறிந்து கொள்ள அருள்பாலிக்க வேண்டுமென்று சகலகலா வல்லி மாலை பாடிக் கலைமகள் அருளினைப் பரவினார். கலைமகள் திருவருள் வாய்க்கப் பெற்ற குமரகுருபரர் பாதுஷாவிடம் ஹிந்துஸ்தானி மொழி யிலேயே பேசி, அவர் மனத்தினைக் கவர்ந்து, காசியில் கேதார கட்டத்தில் மடம் கட்ட ஓர் இடம் பெற்றார்.

> கேதார கட்டத்திலுள்ள கேதார லிங்கத்தை முகம்மதியர் மறைத்திருந்தன ரென்றும் குமரகுருபர முனிவர் அம்மூர்த்தியை வெளிப்படுத்தி ஆலயம் முதலியனகட்டுவித்து நித்திய நைவேத்தியங்கள் நடத்தச் செய்தன ரென்றும் இன்றும் ஆகம விதிப்படி தமிழ் நாட்டு முறையில் சில திருவிழாக்கள் அங்கே நிகழ்கின்றனவென்றும் சிலர் கூறுவர்.

என்று டாக்டர் உ. வே. சாமிநாதையர் குறிப்பிடுவார். (குமரகுருபரர் சுவாமிகள் பிரபந்தத் திரட்டு; குமரகுருபர சுவாமிகள் சரித்திரச் சுருக்கம்)

## செய்யுள் திறம்

தமிழ்த்தாத்தா டாக்டர் உ. வே. சாமிநாதையர் குமரகுருபரர் பற்றிக் குறிப்பிடும் மேலும்சில செய்திகள் மனங்கொளத் தக்கனவாகும். அவை வருமாறு :

குமரகுருபர முனிவர் காசியில் தங்கியிருந்த மடத்திற்குக் குமாரசாமி மடமென்று பெயர். அங்கே இவர் சிவபோகம் செய்து கொண்டு வாழ்ந்து வந்தார். அக்காலத்தில் காசித்துண்டி விநாயகர் பதிகமும் காசிக் கலம்பகமும் இவரால் இயற்றப் பெற்றன. இவர் தாம் வாழ்ந்திருந்த மடாலயத்தில் புராணசாலை ஒன்று ஏற்படுத்தி அங்கே ஹிந்துஸ்தானி பாஷையிலும் தமிழிலும் புராணப் பிரசங்கமும் செய்ததுண்டு. சிறந்த ராமபக்தராகிய துளஸிதாஸர் அந்த பிரசங்கங்களைக் கேட்டு உவந்தனரென்றும், கம்பராமயணத்திலுள்ள கருத்துக்களைத் தாம் ஹிந்துஸ்தானியில் இயற்றிய இராமாயணத்தில் அமைத்துக் கொண்டனரென்றும் கூறுவர்.

ஸ்ரீகுமரகுருபர சுவாமிகளுடைய செய்யுட்களில் தனிச் சிறப்புப் பெற்று விளங்குவது அவற்றின் இன்னோசையேயாகும். ஏனைப் பாட்டுக்களிலிருந்து இவருடைய செய்யுட்களைச் செவிப்புலன் கொண்டே வேறுபடுத்தி விடலாம். இவற்றைக் கேட்கும்போது நமக்குத் தென்பாண்டி நாட்டுப் பொருநை நதியின் ஒட்டம் நம் ஞாபகத்துக்கு வருகின்றது. சொற்களும் சொற்றொடர்களும் ஒன்றினோடு ஒன்று செவிக்கினிமை தரும் வண்ணம் பொருந்தி அமைந்துள்ளன. பொருளிலே கருத்துச் செல்வதற்கு முன் செய்யுட்களின் ஓசை நம் கருத்தை இழுக்கின்றது.

> சொல்லின்பத்தை விளைவிப்பனவாகிய கருவிகள் அனைத்தும் கம்பீரமாகச் செல்லும் இவருடைய செய்யுள் நடையில் நன்கு அமைந்துள்ளன; எவ்வகை யாப்பையும் பேராற்றலுடன் அமைக்கும் இம்முனிவருக்குச் சொற்களும் தொடை நயங்களும் சிறிதும் முயற்சியின்றி இயல்பாகவே வந்து அமைகின்றன. வழியெதுகையும் முரண்டொடையும் அச்செய்யுட்களின் ஓசையைப் பொலிவுறுத்துகின்றன. சந்தத்தை இவர் மிக எளிதில் அமைத்துள்ளார். விருத்தங்களிலும் வெண்பாவிலும் இவருக்கே உரிய ஓசைநயம் மேம்பட்டு விளங்குகின்றது. அகவல்களிலும் வேறு செய்யுட்களிலும் இவருடைய கருத்துக்கள் தெளிவாக விளக்கப் பெற்றுள்ளன.

இனி, டாக்டர் உ. வே. சா. அவர்கள் குறிப்பிட்டுள்ள இக்கருத்துக்களை ஆராய்ந்து காண்போம்.

## தமிழ்ப்பற்று

குமரகுருபரர் என்றவுடன் முதற்கண் அவருடைய அளவிடற்கரிய தமிழ்ப்பற்று விளக்கமுறும். தாம் தம் வாழ்வில் முதன்முதலில் பாடிய கலிவெண்பாவிலேயே,

> **ஆசுமுதல் நாற்கவியும் அட்டாவ தானமும் சீர்ப்**
> **பேசுமியல் பல்காப் பியத்தொகையும்—ஓசை**
> **எழுத்துமுத லாம்ஐந் திலக்கணமும் தோய்ந்து**
> **பழுத்த தமிழ்ப்புலமை பாவித்து**
>
> —*கந்தர் கலிவெண்பா*; 118—119

என்று உலகியற் பொருள்களில் எதனையும் விரும்பாத இவர் சொல்நயத்துடன் கவிபுனையும் பெற்றியினைப் பெரிதும் விரும்பி வேண்டுகின்றார். மேலும் இவர் பாடிய சகலகலாவல்லி மாலையில் காணப்பெறும் கீழ்க்காணும் பகுதிகள் இவருடைய ஆராத தமிழ்க் காதலைப் புலப்படுத்தும் எனலாம்.

**நாடும் பொருட்சுவை சொற்சுவை தோய்தர நாற்கவியும்**
**பாடும் பணியிற் பணித்தருள்வாய்**

—சகலகலாவல்லி மாலை. 2

**பண்ணும் பரதமுங் கல்வியும் தீஞ்சொற் பனுவலும்யான்**
**எண்ணும் பொழுது எளிது எய்த நல்காய்**

—சகலகலா வல்லி மாலை. 10

தமிழின் சிறப்பினைப் பல்லாற்றானும் இவர் தம்முடைய செய்யுட்களிற் புலப்படுத்தியுள்ளார் என்று டாக்டர் உ. வே. சா. அவர்கள் பின்வருமாறு பட்டியலிட்டுக் காட்டுவர்.

அருந்தமிழ்
இசை முத்தமிழ்
கலைத்தமிழ்த் தீம்பாலமுதம்
கொத்து முத்தமிழ்
கொழித்தெடுத்துத் தெள்ளித் தெளிக்குந் தமிழ்
கொழி தமிழ்
கொழுத்த தமிழ்
சங்கத் தமிழ்
செழுந்தமிழ்ச் செல்வம்
செந்தமிழ்த் தெள்ளமுது
சொற்சுவை பழுத்த தொகைத்தமிழ்

தண்டமிழ்
தருசுவை யமுதெழ மதுரம தொழுகு பசுந்தமிழ்
தலைச்சங்கம் பொங்கும் பொன் முத்தமிழ்
தீஞ்சுவைக் கவியும் தண்டேனறையும்
வடித்தெடுத்த சாரங்கனிந் தூற்றிருந்த பசுந்தமிழ்
துறைத்தமிழ்
தெள்ளுதமிழ்
தெலரி தமிழ்
தென்னந் தமிழ்
தேக்கமழ் மதுரமொழுகிய தமிழ்
பண்ணுலாம் வடிதமிழ்
புத்தமுதம் வடிந்தொழுகும் தீந்தமிழ்
பைந்தமிழ்
மதுரித்துவட்டெழு முத்தமிழ்
முத்தமிழ்
முதுசொற்புலவர் தெளிந்த பசுந்தமிழ்
முதுதமி ழுத்தி
மும்மைத் தமிழ்
வண்டமிழ்
வண்டமிழ்க் கடல்
விரைத்தேன் பில்குந் தேந்தமிழ்

இவ்வாறெல்லாம் தமிழிடத்துத் தோய்ந்த அன்புடைய குமரகுருபரர், அவ்வன்பைத் தம்மட்டோடுநிறுத்திக் கொள்ளாமல், தம்மையொத்த புலவர்களும் தெய்வத் தமிழ்மாட்டுப் பேரன்பு பூணுதல் வேண்டும் என்பதனை எடுத்துரைப்பாராய்ப் பின்வருமாறு பேசுகின்றார்.

**செஞ்செவி கைப்பயான் தெரித்த சின்மொழி
அஞ்செவி மடுத்தாங் களித்தனன் அதனால்**
சகலகலாவல்லி மாலை: 101, 21—22

**தேத்தமிழ் தெளிக்கும் செந்நாப் புலவீர்
..............
பாத்தொடுத் தடுத்த பரஞ்சுடரை
நாத்தழும் பிருக்க ஏத்துமின் நீரே**
—காசிக் கலம்பகம்: 101, 24—30

இல்லறம், துறவறம் ஆகிய இரண்டு குறித்தும் சிதம்பர மும்மணிக் கோவையில் இவர் தந்துள்ள விளக்கங்கள் அருமைப்பாடு உடையனவாகும்.

## இல்லறம்

இல்லறத்தின் இலக்கணம் வருமாறு :

**இல்லறம் துறவறம் எனச் சிறந் தனவே
அந்நிலை யிரண்டினுள் முன்னது கிளப்பிற்
கற்றநூல் துறைபோய்க் கடிமனைக் கிழவன்
நற்குணம் நிறைந்த கற்புடை மனைவியோடு
அன்பும் அருளும் தாங்கி இன்சொலின்
விருந்து புறந்தந்து அருந்தவர்ப் பேணி
ஐவகை வேள்வியும் ஆற்றி இவ்வகை
நல்லற நிரப்பிப் புல்புகழ் நிறீஇப்
பிறர்மனை நயவா அறன்மனை வாழ்க்கைக்கு
வரையா நாளின் மகப்பேறு குறித்துப்
பெருநலம் துய்க்கும் பெற்றித் தன்றே.**
—சிதம்பர மும்மணிக்கோவை 2: 23—33

இதன் பொருள் வருமாறு :

"நல்ல நூல்களைக் கற்று, அவற்றின் வழி நின்ற கற்புடைய மனைவியோடு மகப்

பேற்றை விரும்பி, நன்னாளில் இன்பந் துய்த்து, அன்பும், அருளும் உடையவனாகி, இன்சொற் கூறி, விருந்தினரை உபசரித்து, அருந்தவத்தினரைப் பாதுகாத்து, ஐவகை வேள்வியை யாற்றிப் பிற நல்ல அறங்களை நிறைவேற்றிப் புகழ் பூண்டு பிறன்மனையை நயவாமல் வாழ்தல் இல்லறம்''

என்னும் கருத்து விளக்கமுறுகின்றது.

## துறவறம்

இனித் துறவறம் குறித்துக் குமரகுருபரர் குறிப்பிட்டிருப்பனவற்றைக் காண்போம்.

**மற்றையது கிளப்பின் மனையற நிரப்பி**
**முற்றுணர் கேள்வியின் மதுக்குறை வெய்திப்**
**பொருளும் இன்பமும் ஒரீஇ அளவொடு**
**பொறையும் ஆற்றலும் நிறைபே ரொழுக்கமும்**
**வாய்மையும் தவமும் தூய்மையுந் தழீஇ**
**ஓரறி வுயிர்க்கு உறுதுயர் ஓம்பிக்**
**காலோய் நடைய ளாகித் தோலுடுத்து**
**என்பெழு மியாக்கையன் துன்புறத் துளங்காது**
**வரையும் கானும் எய்திச் சருகொடு**
**கானீர் அருந்திக் கடும்பனிக் காலத்து**
**மாநீர் அழுவத் தழுங்கி வேனிலில்**
**ஐவகை அழலின் மெய்வருந்த வருந்தி**
**இவ்வகை யொழுகும் இயல்பிற் றன்றே.**

—சிதம்பர மும்மணிக்கோவை : **34—46**

இதன் பொருள் வருமாறு :

"இல்லறம் பூண்டு வாழ்ந்தபின், ஞான சாஸ்திரங்களைக் கேட்டு, மெய்யறிவு வாய்க்கப் பெற்றுப் பொருளையும் இன்பத்தையும் நீங்கி. அருள், பொறை, ஆற்றல், ஒழுக்கம், வாய்மை, தவம், தூய்மையென்னும் குணங்கள் பொருந்தி, ஓரறிவுயிர்க்கு வரும் துன்பத்தையும் பாதுகாத்துக் காலால் நடந்து, தோலுடுத்து, என்பு தோற்றும்படி உடல் இளைத்துத் துன்பங்களுக்கு நடுங்காமல் மலை, காடு என்பவற்றிற்குச் சென்று சருகையும் நீரையும் காற்றையும் அருந்திப் பனிக் காலத்தில் தண்புனலில் மூழ்கியும், வேனிற் காலத்தில் பஞ்சாக்கினியிலிருந்தும் தவம் புரிந்து ஒழுகுவது துறவறம்"

இவ்வாறு டாக்டர். உ. வே. சா. அவர்கள் பொருள் விளக்கம் காண்கின்றார் (குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு; ஆராய்ச்சி)

## கல்வி

இனிக் கல்வி குறித்துக் குமரகுருபரர் கூறுவனவற்றைக் காண்போம்.

கல்வி கற்புடைய மனைவியை ஒப்பது; அம்மனைவியினாற் பெறும் காதற் புதல்வனே இனிய செய்யுள் ; சொல்வன்மை செல்வமாகும்; அந்தச் செல்வத்தால் அவையிலுள்ளார் மனம் மகிழச் செய்ய ஒருசிலராலேயே ஒல்லும் என்பது குமரகுருபரருடைய கருத்தாகும்.

**கல்வியே கற்புடைப் பெண்டிர் அப்பெண்டிர்க்குச்**
**செல்வப் புதல்வனே ஈர்ங் கவியாச் சொல்வளம்**
**மல்லல் வெறுங்கையாம் மாணவை மண்ணுறுத்தும்**
**செல்வமும் உண்டு சிலர்க்கு.**

—நீதிநெறி விளக்கம்: 3

மேலும் நீதிநெறி விளக்கத்தில் இளமை நிலையாமை, செல்வம் நிலையாமை, யாக்கை நிலையாமை என்னும் தொன்றுதொட்ட அரிய கருத்துகளைப் பின்வருமாறு உரைப்பர்.

**நீரிற் குமிழி இளமை நிறைசெல்வம்**
**நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்—நீரில்**
**எழுத்தாகும் யாக்கை நமரங்காள் என்றே**
**வழுத்தாத எம்பிரான் மன்று.**

—நீதிநெறி விளக்கம்—காப்புச் செய்யுள்.

இதனால் நீரில் தோன்றும் குமிழி போன்றது இளமை என்றும், அந்நீரில் எழும் அலைகளைப் போன்றன இளமை என்றும், அந்நீர் மேல் எழுதிய எழுத்துப் போன்றது உடம்பு என்றும், அதனால் சிவபெருமானை வழுத்துவதே வாழ்வாக அமைய வேண்டும் என்றும் குமரகுருபரர் குறிப்பிடுகின்றார்.

மேலும் படைப்புக் கடவுளாம் பிரம்மாவைக் காட்டிலும், படைப்பிலக்கியம் படைக்கும் புலவன் உயர்ந்தவன் என்று கூறுகிறார் குமரகுருபரர். காரணம் பிரம்மன் படைக்கும் மனிதர்கள் காலப் போக்கில் மடிந்து முடிகிறார்கள். ஆனால் புலவோர் படைக்கும் அரிய இலக்கியப் படைப்புகள் காலங் கடந்தும் வாழும் அமரத்துவ நிலையினைப் பெற்றவை என்று குறிப்பிடுகின்றார்.

**கலைமகள் வாழக்கை முகத்தது எனினும்**
**மலரவன் வண்டமிழோர்க்கு ஒவ்வான் மலரவன்செய்**
**வெற்றுடம்பு மாய்வனபோல் மாயாபுகழ்கொண்டு**
**மற்றிவர் செய்யும் உடம்பு**

—*நீதிநெறி விளக்கம்*; 6

**அறநெறிகள்**

குமரகுருபரர் ஒரு பெருந்தமிழர்; சைவ நெறி புரந்த தவச் செல்வர்; தமிழின்மாட்டுத் தனிப் பேரன்பு செலுத்தியவர்; தமிழ்மக்கள் வாழ்வாங்கு வாழ்ந்து உய்தியினை இறுதியிற் பெற்றுச் சாகாநிலை கூட வேண்டும் என்று கருதிய உத்தமராவர். எனவே தம்முடைய நூல்களில் தமிழினம் ஈடேற்றம் காண ஒப்பற்ற பல கருத்துகளை—அறநெறிக் கருத்துகளை வலியுறுத்தியுள்ளமையைக் காணலாம்.

செல்வம் என்பது நம்முடைய மனத்தில் எழுகின்ற நிறைவாகும். மீண்டும் மீண்டும் கட்டுக்கடங்காமல் ஆசை படர்ந்துகொண்டிருந்தால் அதுவே வறுமைக்கு வாய்ப்பாகும் என்றார்.

**செல்வம் என்பது சிந்தையின் நிறைவே**
**அஃகா நல்குரவு அவாவெனப் படுமே.**

—*சிதம்பர மும்மணிகோவை*; 26 : 20—21

அடுத்து, ஒருவன் தனக்குப் பிறர் பெருமதிப்புத் தர வேண்டும் என்று விரும்பினால் முதற்கண் தான் அவர்களுக்கு மதிப்புத் தர வேண்டும் என்கிறார்.

பிறராற் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாதே நோற்பது ஒன்று உண்டு—பிறர்பிறர்
சீரெல்லாம் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யாாக்கும் தாழ்ச்சி சொலல்.

—நீதிநெறி விளக்கம்; 19

## பிள்ளைத் தமிழ்

பிள்ளைத்தமிழ் நூல்களில் இவர் பாடியருளிய மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழும் முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழும் தனிச்சிறப்பு வாய்ந்தவை களாகும். அதிலும் குறிப்பாக மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் தெய்வநலஞ் சான்றதெனலாம். ஏனெனில் இவர் திருமலைராயன் அவையில் பாடிய "தொடுக்குங் கடவுள்" எனத் தொடங்கும் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழின் வருகைப் பருவப் பாடல் உமையம்மையே உவந்து பரிசு நல்கிய பாட லாகும். அப்பாடல் வருமாறு :

தொடுக்கும் கடவுட் பழம்பாடல்
தொடையின் பயனே நறைபழுத்த
துறைத்தீந் தமிழின் ஒழுகுநறுஞ்
சுவையே அகந்தைக் கிழங்கை அகழ்ந்து
எடுக்கும் தொழும்பர் உளக்கோயிற்கு
ஏற்றும் விளக்கே வளர்சிமய
இமயப் பொருப்பில் விளையாடும்
இளமென் பிடியே எறிதரங்கும்
உடுக்கும் புவனம் கடந்துநின்ற
ஒருவன் திருவுள் ளத்தில்அழகு
ஒழுக எழுதிப் பார்த்திருக்கும்
உயிரோவியமே மதுகரம்வாய்

**மடுக்கும் குழற்காடு ஏந்தும் இள**
**வஞ்சிக் கொடியே வருகவே**
**மலயத் துவசன் பெற்றபெரு**
**வாழ்வே வருக வருகவே.**

*—மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்:*
**வருகைப் பருவம்**

## இசை பற்றிய செய்திகள்

பண்ணோடு பாடலைச் செவி மடுக்காமல் துறவிகள் வாழ வேண்டும் என்று இவர்,

**பெண்மை வியவார் பெயரும் எடுத்தோதார்**
**கண்ணொடு நெஞ்சுறைப்ப நோக்குறவார்**
—பண்ணொடு

**பாடல் செவிடார் பண்பல்ல பாராட்டார்**
**வீடில் புலப்பகையி னார்**
*—நீதிநெறி விளக்கம்:* **84**

நீதி நெறி விளக்கத்தில் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு குறிப்பிட்டிருப்பதற்கு, பெண்கள் பாடும் பாடலைச் செவிமடார் என்று ஓர் அமைதி கூற வேண்டும். ஏனெனில் பண்ணொடு பாடலைச் செவி மடாமை துறவிறர் இயல்பு என்று கூறினர். இவர் பண்ணை வெறுத்தவர் அல்லர் என்பது இவரது செய்யுட்களினால் புலனாகும். சகல கலாவல்லி மாலையில் இவர் கலைமகளை நோக்கித் தமக்குப் பண்ணும் பரதமும் கல்வியும், இனிய சொல்லமைதியுடைய பாட்டும், தாம் வேண்டும்பொழுதெல்லாம் தம்மை வந்து அடைய வேண்டும் என்று வேண்டுவதனைக் காணலாம்.

**பண்ணும் பரதமும் கல்வியும்**
**தீஞ்சொற் பனுவலும்யான்**
**எண்ணும் பொழுது எளிது எய்தநல்**
**.........காய்.**

—சகலகலாவல்லி மாலை: 7

தமக்கு இத்தகைய அரிய பேற்றினைக் கலைமகள் அருளிய காரணத்தினால்தான் அக்கலைமகளைக் கண்கண்ட தெய்வம் என்று கழிபேருவகையுடன் பாராட்டிசைக்கின்றார்.

**மண்கண்ட வெண்குடைக் கீழாக**
**மேற்பட்ட மன்னரும் என்**
**பண்கண் டளவில் பணியச்செய்**
**வாய்படைப் போன்முதலாம்**
**விண்கண்ட தெய்வம்பல் கோடியுண்**
**டேனும் விளிம்பில் உன்போல்**
**கண்கண்ட தெய்வம் உளதோ**
**சகல கலாவல்லியே**

—சகலகலாவல்லி மாலை; 10

எனவே பதினேழாம் நூற்றாண்டின் மிகப் பெரும் புலவராகக் குமரகுருபரர்,சைவமும் தமிழும் தழைத்தினி தோங்கப் பாடுபட்ட—இல்லற வாழ்வைத் துறப்பினும் தமிழைத் துறக்காத தவவலிமை சான்ற தகைசால் பெருந்தகை ஆவர் என்பது அவருடைய வாழ்வாற் புலப்படும் செய்திகளாகும்.

# 12. "குமரகுருபரர் உணர்த்தும் இலக்கியக் கொள்கை"

## இலக்கியம்

"இலக்கியம்" என்று நாம் எதைக் குறிப்பிடு கிறோம்? இச்சொல்லின் மூலம் என்ன? இச்சொல் "லக்ஷ்யம்" (இலட்சியம்) என்ற வடமொழிச் சொல்லி லிருந்து பிறந்தது எனச் சிலர் கூறுகின்றனர். 'இலக்கு' என்ற தமிழ்ச் சொல்லிலிருந்து உருவானது என்று சிலர் சொல்கின்றனர். இதில் எது சரி என்ற விவாதத்தில் நாம் இறங்க வேண்டா. இரண்டில் எதுவாயினும் இருமொழிச் சொற்களும் 'குறிக்கோள்' என்ற அர்த்த பாவத்தையே சுட்டுகின்றன. எனவே குறிக்கோளைக் கொண்டது இலக்கியம் என்று நாம் முடிவு கட்டலாம். இதன் மூலம் இலக்கியத்தில் குறிக் கோள்—அதாவது கருத்து—உள்ளடக்கம் தான் பிரதானமானது என்றும் நிர்ணயிக்கலாம்"[1] என்று "இலக்கியம்' 'என்ற சொல்லின் பொருளை விரித் துரைக்கிறார் திரு. தொ. மு. சிதம்பர ரகுநாதன் அவர்கள்.

"புலவர் ஒருவர் தாம் கண்டறிந்த ஒன்றையோ, கேட்டறிந்த ஒன்றையோ, நன்றாக உள்ளத்தில்

உணர்ந்து, கற்பனையோடு வளர்த்து, கலைவளம் தந்து சொற்களால் புலப்படுத்துவது நல்ல இலக்கியம் ஆகும்[2]" என்று நல்ல இலக்கியத்தின் அமைப்பை விளக்குகிறார் டாக்டர் மு. வ.

இவ்விலக்கியம் பற்றிய கல்வி, இலக்கியக் கொள்கை, இலக்கியத் திறனாய்வு, இலக்கிய வரலாறு என மூவகைப்படும். அவற்றுள் இலக்கியக் கொள்கை என்பது, இலக்கியத்தின் பொருள், புறநிலை அமைப் பாகிய அதன் வடிவம், வெளியீட்டு முறை என்ற மூன்றுமே ஆகும். இவற்றைக் குமரகுருபரர் தம் இலக்கியங்களில் எவ்வெவ்வாறு உணர்த்துகிறார் என்பதைக் காண்பதே நோக்கம்.

இலக்கியம், செய்யுள், உரைநடை ஆகிய இரு வடிவங்களிலும் அமைகினறன. அகப்பாட்டு, புறப் பாட்டு, பக்திப்பாட்டு, காவியம் ஆகியன செய்யுள், வடிவில் அமைந்தவை. இன்று தொடர்கதை, சிறுகதை, கட்டுரை முதலியன உரைநடையில் அமைகின்றன. நாடகம், செய்யுள், உரைநடை ஆகியன இரண்டிலும் அமைகின்றன. குமரகுருபரரின் பாடல்கள் பக்திப் பாடல்களாய் அமைந்துள்ளன.

## குமரகுருபரரின் பிரபந்தங்கள்

குமரகுருபரர் யாத்த பிரபந்த நூல்களின் எண்ணிக்கையில் கருத்து வேறுபாடுகள் உள்ளன. தேவர்பிரான் கவிராயர் என்பவர் தாம் இயற்றிய சிறப்புப் பாயிரத்தில்.

**"கலிவெண் பாவெனும் ஒலிபெறும் அலங்கல்அக்**
**குகன்திரு முடிதனுக்கு உகந்திடச் சூட்டிப்**
**பிள்ளைக் கவிமுதல் வெள்ளைக் கிழத்தி**
**மாலையீ றாகச் சால்பமை பிரபந்தம்**
**முந்நான் கியற்றி"**

எனவும், நீதி நூல் விளக்கம் எனும் ஏதமில் பனுவலையும் இயற்றினார் எனவும் ஆக மொத்தம் பதினான்கு நூல்களைச் செய்ததாகக் கூறுவர்.[3]

டாக்டர். உ. வே. சாமிநாதையர், காசி மடத்துப் பழமையான எட்டுப் பிரதிகளையெல்லாம் ஆய்ந்து (1) கந்தர் கலிவெண்பா (2) மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் (3) மதுரைக் கலம்பகம் (4) நீதிநெறி விளக்கம் (5) திருவாரூர் நான்மணி மாலை (6) முத்துக் குமார சுவாமி பிள்ளைத் தமிழ் (7) சிதம்பர மும்மணிக் கோவை (8) சிதம்பரச் செய்யுட் கோவை (9) பண்டார மும்மணிக்கோவை (10) காசிக் கலம்பகம் (11) சகலகலா வல்லி மாலை (12) கைலைக் கலம்பகம் (13) காசித் துண்டி விநாயகர் பதிகம் ஆகிய பதின்மூன்று நூல்களே குமரகுருபரர் அருளியவை என்று உறுதி செய்கிறார்.[4]

மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை, மீனாட்சியம்மை குறம், சிவகாமி அம்மை இரட்டை மணிமாலை எனும் வேறு மூன்று பிரபந்தங்களும் குமரகுருபரர் இயற்றியனவாக சில அச்சுப் பிரதிகளிற் காணப்பட்டாலும், அவை காசி மடத்துப் பழைய எட்டுப் பிரதிகளில் காணப்படாமை, பரம்பரையாகப் பாடம் சொல்லுபவர்கள் இம்மூன்றையும் குமரகுருபரர் நூல்களாகச் சேர்த்துச் சொல்லாமை, மேலும் சொற் பொருளதிமைகளாலும் பிற பிரபந்தங்களோடு மாறு

படுதல் ஆகிய காரணங்களால், முன்கூறிய பதின்மூன்று மட்டுமே குமரகுருபரர் அருளியவை என முடிவு செய்கிறார் டாக்டர் உ. வே. சா. அவர்கள்

அப்பதின்மூன்றுள்ளும், கைலைக் கலம்பகத்தில் பல செய்யுட்கள் காணப்படவில்லை. காசித்துண்டி விநாயகர் பதிகம் முற்றுமே கிடைக்கவில்லை. முழுமையாகக் கிடைக்கும் பதினோரு பிரபந்தங்களின் வாயிலாகக் குமரகுருபரர் உணர்த்தும் இலக்கியக் கொள்கையைக் காண்போம்.

## இலக்கியம் என்ற சொல்லாட்சி

குமரகுருபரர் பிரபந்தங்களிலும் இலக்கியம் என்ற சொல்லாட்சி யாண்டும் காணப்படவில்லை. கவி, கவிதை, பண், பாட்டு, செய்யுள், பனுவல், தமிழ் எனும் சொற்கள் இலக்கியம் எனும் பொருளில் வழங்கப் பெற்றுள்ளன.

**"ஆசுமுதற் நாற்கவி"[5]**

**"நாடும் கமலேசர் நான்மணிமா லைக்குமிகப்**
**பாடும் கவிதைநலம் பாவிக்கும்"[6]**

**"பண் கண்டளவிற் பணியச் செய்வாய்"[7]**

**"பாட்டும் பொருளும் பொருளாற்பொருந்தும்பயனும்"[8]**

**"தூக்கும் பனுவற் துறைதோய்ந்த கல்வி"[9]**

**"எழுத்துமுத லாமைந் திலக்கணமும் தோய்ந்து**
**பழுத்த தமிழ்ப் புலமை"[10]**

என வரும் சில தொடர்களில், மேற்கூறிய சொல்லாட்சிகளைக் காணலாம். செய்யுள் என்ற

சொல்லாட்சி, சிதம்பரச் செய்யுட் கோவை என்ற பிரபந்தத்தின் தலைப்பாகவே வந்திருக்கிறது.

## இலக்கியத்தின் உயர்வு குறித்துக் குமரகுருபரரின் கருத்து

கலைகளில் சிறந்தது இலக்கியக் கலையே. நிலையில்லாமல் மாறும் அழகின்பத்தை நிலைபெறச் செய்ய இலக்கியம் பயன்படுகிறது. மேற்கு வானத்தில் மாலையில் காணப்படும் அந்தி அழகு நொடிக்கு நொடி மாறிக் கொண்டே இருக்கிறது. உள்ளம் வியந்து போற்றும் அழகு மிக்க சிறந்த காட்சியை வானத்தில் கண்டு மகிழ்கிறோம். சிறிது நேரம் கழிந்த பிறகு மீண்டும் அதைக் கண்டு மகிழ விரும்பினால், அந்த அழகு புலன்களுக்கு எட்டாத ஒன்றாக ஆகிவிடுகிறது. ஒரு நாள் ஒரு வேளை உள்ளத்தில் தோன்றிய புதிய உணர்ச்சி மற்றொருநாள் மற்றொரு வேளையில் தோன்றுதல்அரிதாகிறது. இவ்வாறு மறைந்து மாறிப் போகும் அழகையும் உணர்ச்சியையும், படைப்பாளி தான் படைக்கும் இலக்கியத்தின் மூலம், நிலையுள்ளதாக ஆக்கிவிடுகிறான். அத்தகைய படைப்பாளி,உயிர்களைப் படைக்கும் பிரமனைக் காட்டிலும் உயர்ந்தவன் என்கிறார் குமரகுருபரர் ஒரு பாடலில்.

**''கலைமகள் வாழ்க்கை முகத்தது எனினும்
மலரவன் பண்டமிழோர்க்கு ஒவ்வான்—மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யும் உடம்பு''**

என்பதே அந்தப் பாடல்.

## இலக்கியக் கொள்கைகள்
### பொருள் பற்றிய கொள்கைகள்

எந்த ஒரு பொருள் பற்றியும் இலக்கியம் படைக்கலாம். இன்ன பொருள் பற்றிப் பாடலாம்; இன்ன பொருள் பற்றிப் பாடலாகாது என்ற வரையறை இல்லை. வெண்ணிலவு, செங்கதிர், விண்மீன், கருமுகில், மலை, காடு, ஆறு, கடல், மான், முயல், கிளி, மயில், குழந்தை முதலியவைகள் பற்றியும் பாடலாம், உயர்ந்த இமயமலையையும் பாடலாம். சிறிய குண்டுசியைப் பற்றியும் பாடலாம். பாட்டின் பொருள் உயர்ந்ததாயினும் பாடுவோரின் அனுபவம் உயர்ந்ததாய் இல்லாவிடில், அப்பாடல் சிறக்காது. குமரகுருபரர் உயர்ந்ததாம் இறைபொருள் பற்றி, உயரிய தம் அனுபவம் கொண்டு பாடியவர்.

"வாயே நீ வாழ்த்து கண்டாய்; மதயானை உரிபோர்த்துப் பேய் வாழும் காட்டகத்தே ஆடும் பிரான் தன்னையே வாயே நீ வாழ்த்துக் கண்டாய்." என்ற திருநாவுக்கரசர் வாக்குக்கேற்ப, இறைவனை வாழ்த்துவதையே, வாழ்த்திப் பாடுவதையே தம் வாழ்க்கைப் பணியாகக் கொண்டவர் குமரகுருபரர். எப்பாரும் எப்பதமும் எங்கணும் சென்றே இறைவன் அருட்புகழை இயம்புவதையே அன்றாடப் பணியாகக் கொண்டார் அவர்.

சைவ வேளாளர் குலத்தில் பிறந்து, ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் எனும் சைவ ஆசிரியருக்கு அடியவராகிச் சைவ சந்நியாசம் பூண்டு வாழ்ந்த இவர், சைவக் கடவுளர்களையே பாடல் பொருளாகக் கொண்டு பாடியுள்ளார். விநாயகரும் கந்தனும்

மீனாட்சியம்மையும் சோமசுந்தரரையும் பாட்டுடைத் தெய்வங்களாய் வைத்துப் பரவி இருக்கின்றார்.

## முருகப் பெருமான்

இவர் இளமையிலே தம்மை ஆட்கொண்ட முருகக் கடவுளிடத்தே தனியன்பு பூண்டவர். அவரையே வழிபடு கடவுளாகக் கொண்டவர். முருகக் கடவுளைப் பாட்டுடைத் தலைவராய்க் கொண்டு கந்தர் கலிவெண்பா, முத்துக்குமார சுவாமிப் பிள்ளைத் தமிழ் எனும் இரு பிரபந்தங்களை இயற்றியிருப்பதோடு, பிறவிடங்களிலும் அவருடைய புகழ்வகைகளை விரித்துரைப்பார்.

முருகருடைய திருவவதாரத்தைக் கந்தர் கலிவெண்பாவில் கூறுகிறார். சரவணப் பூந் தொட்டியில் விளையாடியது, இந்திரனை எதிர்த்தது, நான்முகனைக் குட்டிச் சிறையிருத்தியது, சிவபெருமானுக்குப் பிரணவோபதேசம் புரிந்தது, வீரவாகு தேவர் உள்ளிட்ட ஒன்பது வீரர்களைத் துணை கொண்டது, கிரவுஞ்ச மலையின்மேல் வேலெறிந்தது, சூரசங்காரம் செய்தது, தேவயானையை மணம் புரிந்தது, வள்ளி நாயகியை ஆட்கொண்டு மணந்தது முதலான செய்திகளைச் சுவைபடக் கூறுகிறார்.

முருகப் பெருமானும், பரமசிவமும் ஒருவரே எனும் கொள்கையுடையவர் இவர். கந்தர் கலிவெண்பாவில் பரமசிவத்திற்குரிய இயல்புகளை, முருகருக்கு அமைத்துப் பாடியுள்ளார்.

**"மறைமுடிவில் நின்று நிறை செல்வன்"**[12]

**"தனிமுத்துக் கொரு வித்து"**[13]

**"அறிவுள் அறிவை அறியும் அவரும் அறியவரிய பிரமம்"**[14]

**"அழியாத வீடும் தரக் கடவன்"**[15]

என சிவத்தின் இயல்புகளை முருகனுக்கு ஏற்றுவர்.

முருகன் முழுமுதலுமானவன் என்பதை,

**"ஆதிப் பிரானென்று மும்முதற்**
**கடவுளும் அடித்தொழும் பாற்ற"**[16]

**"முத்தேவாம் இறைவரும் முறைமுறை**
**பணிய விருக்கு முதற் தேவே**[17]

**"மூலமெனக் குலநான்மறை ஒலிடு முழுமுதலே"**[18]

என வரும் பாடல் அடிகளில் உணர்த்துகிறார்.

முருகப் பெருமான், தமக்கு அருள் செய்ததை இவர்,

**"திருவடித் துணையென் முடிபதித்தவடு**
**ஆறாத மெய்ப்பக ழாளி"**[19]

என்று பாடுகிறார்.

முருகன் பேரில் இவர் கொண்டிருந்த முறுகிய பக்தியை

**"மெய்கண்ட தெய்வம்இத் தெய்வம் அல்லாற்புவியில்**
**வேறில்லை"**[20]

என்ற பாடல் அடியால் அறியலாம்.

**"என்னுயிர்க்கு ஒக்கும் இளஞ்சேய்"**[21]

என்று இவர் முருகனைப் பாராட்டுவதனால், இவர் அக்கடவுளை மறப்பினும், இவர் நா மறவாது என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

இம் முனிவர்பிரானுடைய நாமமாகிய குமரகுருபரர் என்பது முருகனுடைய திருநாமங்களில் ஒன்றே. இவர் அப்பெயராலேயே முருகனை,

**"அருள்குடி கொண்ட குமரகுருபரன்"**[22]

எனக் குறிக்கிறார்.

முருகு என்றால் அழகு, எழில் எனப் பொருளாகும். இவர் "இயலு நடையும் வடிவும் அழகும் அரியன்."[23] "அழகு கனிந்து முதிர்ந்த இளங்கனி"[24] என்று போற்றுகிறார். எழுதற்கரிய அத்திரு வுருவை முருகனடியார்கள் விழிகளிலும் மனத்திலும் எழுதி எழுதி இன்புறுவார்கள் என்பதை,

**"வடிவி னழகும் எழுத வரிய புயமும் நறிய செச்சையும்**
**மருமம் விரவு குரவு மரையின் மணியும் மணிகொள்**
**கச்சையும்**
**கடவு மயிலு மயிலும் ஒழுகு கருணை வதன பத்மமும்**
**கமல விழியும் விழியும் மனமும் எழுதி எழுதி நித்தலும்**
**அடிகள் எனவுன் அடிகள் பணியும் அடியார்."**[25]

எனப் பாடுகிறார்.

**விநாயகர்**

காப்புச் செய்யுட்களில் விநாயகரைப் பாடும் இவர் மதுரைத் தலத்திலுள்ள சித்தி விநாயகரையும், வேலூரிலுள்ள கற்பக விநாயகரையும், சிதம்பரத்தில் உள்ள கற்பக விநாயகரையும் பாடியுள்ளார். இவர்,

**"சிறுகட் பெருங் கொலைய மழவிளங் களிறு."**

**"தொந்தித் தந்தி"**

**"கரட மதகரி"**

**"கம்ப மதத்தர்"**

**"படாமணி மத்தகத் தந்தி"**

**"அஞ்சு கஞ்சக்கரக் கற்பகம்"**

**"மால் யானைக் கன்று"**

**"ஒரு கோட்டு மழக் களிறு"**

என்றெல்லாம் விநாயகரைப் பாராட்டுவார். "மலையிலே உண்டான கன்னிப்பிடி யளித்த ஓரானை என் மனத்துள் வந்து பாசமாகிய தளையை அறுத்துப் பாவமாகிய கடலைக் கலக்கி நேசமாகிய தளையிலே பட்டு நிற்கும்" என்று புகழ்கிறார்.

## மீனாட்சி அம்மை

இவ்வம்மை, திருமாலுக்குத் தங்கை என்பதும், இறைவன் நடனம் புரியும்போது, தாளங்கொட்டி ஆடுவதும், சதாசிவ மூர்த்தியின் துடையில் வீற்றிருத்தலும் கூறி, மேலும் அம்மையின் கண்களிலிருந்து கலைமகளும் திருமகளும் உதித்தது, அம்மையின் கலா பேதங்களில் சந்திரன் ஒன்றாக இருப்பது, அம்மை கரும்புவில்லையும் பஞ்ச பாணத்தையும் கொண்டிருப்பது தன் கரத்தில் கிளியை ஏந்தியிருப்பது முதலான பல செய்திகளைக் கூறியிருக்கிறார்.

மீனாட்சியம்மையின் திருப்பெயர்களாக அங்கயற்கணம்மை, அணங்கரசு, அபிடேக வல்லி,

அபிராம வல்லி, கயற்கட் குமாரி, கற்பூர வல்லி, கவுரியர் குலமணி, குமரித் துறையவள், கோமகள், சங்கம் வளர்ந்திட நின்ற பொலன்கொடி, சுந்தரவல்லி, தடாதகாதேவி, பாண்டிப்பிராட்டி, மங்கையர்க்கரசி, மகரத் துவசமுயர்த்த பொலங்கொடி, மதுராபுரித் தலைவி, மதுரைக்கரசு, மதுரைத் துரைமகள், மதுரைப் பெருமாட்டி, மரகதவல்லி, மலயத்துவசன் வளர்த்த பசுங்கிளி, மாணிக்கவல்லி, மும்முலைத் திருவழுதிமகள், வைகைத் துறைவி, வைகைவள நாட்டரசு எனப் பல பெயர்களைக் கூறியுள்ளார்.

### சோமசுந்தரர்

"சிவபெருமான் அருவம் நான்கு, உருவம் நான்கு, அருவுருவம் ஒன்று என நவந்தருபேதமாகவும், அட்டமூர்த்தியாகவும் விளங்குகிறான். அவன் எண்குணத்தான் திகம்பரன், தன் திருச் செவியில் வீணை வாசிக்கும் கந்தர்வர்களைக் குழைகளாக அணிந்தவன், சூரிய மண்டலத்திடையே வீற்றிருப்பவன், புவனங்களே திருமேனியாக உடையவன், மலைகளே அவன் புயங்கள், ஆகாயமே திருமேனி, அண்ட கூடமே திருமுடி, பாதலமே பாதம், அவனே மும்மூர்த்தியாக இருந்து முத்தொழிலையும் நடத்துகிறான்" என சிவபெருமான் தன்மைகளை விவரித்திருக்கிறார்.

மேலும், அங்கம் வெட்டியது, இந்திரன் பழி தீர்த்தது, இறையனாரகப் பொருள் நூலை அருளியது, உக்கிரபாண்டியருக்கு வேலளித்தது, உலவாக் கோட்டையாடியது, கரிக்குருவிக்கு அருள் செய்தது, கல்யானைக்குக் கரும்பருந்தியது, கால்மாறியாடியது, ஞானசம்பந்தரது ஏடு வையையில் எதிரேறச் செய்தது,

தருமிக்குப் பொற்கிழி யளித்தது, நரியைப் பரியாக்கியது, நாரைக்கு முத்தி கொடுத்தது, பழியஞ்சியது, பன்றிக் குட்டிகளுக்குப் பால் கொடுத்தது, பாண்டியன் சுரந் தீர்த்தது, பாணபத்திரருக்குப் பலகையிட்டது, பிட்டுண்டது, மண் சுமந்தது, மாபாதகம் தீர்த்தது, மாமிக்குக் கடல் வருவித்தது, யானையெய்தது, வலை வீசியது, வளை விற்றது, விருத்த குமார பாலரானது, விறகு விற்றது, வெள்ளை யானை சாபந் தீர்த்தது, கடல் வற்ற வேல் விட்டது, மேகத்திற்குத் தடையிட்டது, முதலான சோமசுந்தரரின் மதுரைத் திருவிளையாடல்களையும் குமரகுருபரர் பாடியிருக்கிறார்.

சோமசுந்தரக் கடவுளின் திருநாமங்களாக அபிடேகச் சொக்கர், அழகிய சொக்கர், கடம்பவனச் சொக்கர், கடம்பவனேசர், கற்பூரச் சொக்கர், கலியாண சுந்தரர், சவுந்தரமாறர், சுந்தரர், சொக்கர் பெருமான், பழியஞ்சிமார், புழுகுநெய்ச் சொக்கர் ஆகியவற்றைக் கூறியுள்ளார்.

சோமசுந்தரர் சுந்தர பாண்டியராக எழுந்தருளி அரசாண்டவராதலின் அவரைச் சுந்தர மீனவன், சவுந்தரமாறன், கைதவக் களிறு எனப் பாராட்டி உள்ளார்.

## பிற கடவுளர்

சைவ சமயக் கடவுளரைப் போற்றிப் பாராட்டும் இவர், திருமால், திருமகள், இந்திரன், இந்திராணி, துர்க்கை, நந்தி, பிரமர், முப்பத்து முக்கோடி தேவர், யமன், வருணன், கலைமகள் முதலான தெய்வங்களையும் உரிய இடங்களில் பரவுகிறார்.

திருமாலை,

"பழமறைகண் முறையிடப் பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப்பசுங் கொண்டல்" "துழாய்முடித் தீர்த்தன்" "திருவைப் புணர்பொற்புயமைப் புயல்" "தாமரை கண் துயிலு மால்" "கருங்கடல் வண்ணன்" "மலர்மகள் கொழுநன்" "கருணை பூத்தலர்ந்த கமலக் கண்ணன்" "கொண்டல் மணிவண்ணன்" எனப் போற்றுகிறார். தசாவதாரச் சிறப்பினையும் பாடுகிறார்.

இவ்வாறு சைவ, வைணவப் பாகுபாடின்றித் திருமாலைப் போற்றிப் பாடியிருப்பினும், இவர் சைவ சமயத்தையே பெரிதும் சிறப்பித்துப் பாடியிருக்கிறார்.

**"மறைமுடிவாம் சைவம்".**[26]

**"அருட்பொருள் சைவம்"**[27]

**"திவ்வியம் பழுத்த சைவ சித்தாந்தம்"**[38]

எனப் பாராட்டுகிறார்.

"கற்ற பயன், கடவுளைப் பாடல்" எனும் உயரிய கொள்கையைத் தம் இலக்கியப் பொருட் கொள்கையாய்க் கொண்டவர் குமரகுருபரர். திருமாலை பரவும் சைவ—வைணவ ஒற்றுமை நெறியையும் போற்றி வளர்த்தார் எனலாம். புலன் உணர்வுகளைப் பாடாமல், புலனுக்கு எட்டாத இறைப் பொருளை இனிதாகப் பாடியிருக்கிறார். இவருடைய இறை நெறியை—சமணப் பொதுமையைப் போற்றும் டாக்டர். உ. வே. சா. அவர்கள்,

"ஒரு கடவுள், ஒரு மொழி, ஒரு கலை, ஒரு நாடு என்னும் வரையறை யின்றிப் பல கடவுளரையும் பலமொழிக் கருத்துக்களையும், பல கலைச் செய்தி களையும் பலநாட்டு வருணனைகளையும் இவருடைய செய்யுட்களிற் காணுகின்றோம். இந்நாட்டின் தென் திசையிலுள்ள செந்தூரையும், வடநாட்டிலுள்ள காசியையும் இவர் கண்டறிந்து பாடுகின்றார். தாம் பிறந்த பாண்டி நாட்டையும், குருவைப் பெற்ற சோழ நாட்டையும், வாழ்ந்து வந்த கங்கைக் கரையையும் வருணிக்கின்றார். சிவபெருமான் முதல் கலைமகள் வரையுள்ள தெய்வங்களைப் பாராட்டு கின்றார். சைவ பரிபாஷைகளோடு வைணவப் பரி பாஷைகளையும் ஒருசார் அமைக்கின்றனர். இவற்றால் இவர், "யாதும் ஊரே, யாவரும் கேளிர்" என்னும் மனோபாவமும், விரிந்த உலகியலறிவும் உடையவர் என்பதை உணரலாகும்" என்பர்.[29]

## அகத்திணை

குமரகுருபரர், அகப் பொருள் இலக்கணச் செய்திகளை எடுத்தாள்வதிலும், அவ்விலக்கண அமைதிபெறச் செய்யுள் அமைப்பதிலும் மிக வல்லவர். அகத்திணைக்குரிய முதற்பொருள் இரண்டனுள் ஒன்றாகிய நிலம், குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என ஐவகைப்படும். குமரகுருபரர் தம் பிரபந்தங்களில் ஆங்காங்கே சில நிலங்களையும் அவற்றின் கருப்பொருள் பற்றிய செய்திகளையும் கூறுகிறார்.

மலையும் மலையைச் சார்ந்த இடமும் குறிஞ்சி, அதற்கு முருகக் கடவுள் தெய்வம். தமிழர் மரபு குமரகுருபரர் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழில்

நிலத்தை வருணித்து, அதற்கு முருகன் தலைவ னாதலை உணர்த்துகிறார். "தண்ணென் குறிஞ்சித் தவந்தலை யளிப்பவன்"[30] என்பதில் குறிஞ்சியைக் கூறினார். குமரகுருபரர் பிரபந்தம் பாட எடுத்துக் கொண்ட தலங்களுட் பெரும்பாலான மருதநிலத்தில் அமைந்தவை. அந்நில வருணனை மிகுதியாகக் காணப்படுகிறது.

**"மருதக் கோமகன் குடிகொண்ட சோணாடு"**

என்று முருகனை விளிப்பர். தில்லை, தருமபுரம், காசித்திருத்தலங்கள் மருதத் தலங்களே.

**"மருதம்சூழ் திருந்து பெருவளஞ் சுரக்கும்
தருமையம் பதி"[32]**

**"இறும்பூது பயக்கும் நறும்பணை மருதக்
கன்னிமதி லுடுத்த காசிமா நகரம்"[33]**

என அத்தலங்களைப் பாடுவர்.

தாழையாகிய நெய்தல் நிலக் கருப்பொருளும், வயலிலுள்ள சங்கும் முத்துமாகிய மருதநிலக் கருப் பொருளும மயங்கும் திணை மயக்கத்தை.

**"நெய்தலோடு தழீஇய மருதவேலித் தெய்வப் புலியூர்"[34]**

என்று பாடுவர்.

தலைவனும் தலைவியும் ஒத்த அறிவு முதலியன உடையராதல் வேண்டும் எனும் அகப்பொருள் இலக்கணத்தை இவர் பண்டாரமும் மணிக்கோவை யில் எடுத்தாளுகிறார். ஞானாசிரியரைத் தலைவராக வும் அடியாரைத் தலைவியாகவும் உருவகம் செய்து அவ்விருவருக்கும் ஒப்புமை கூறுகிறார்.[35]

தலைவனும் தலைவியும் எதிர்ப்படுங்காலத்து, அவர்கள் நெஞ்சம் ஒன்றுபடும் உள்ளப்புணர்ச்சியைத் தடாதகைப் பிராட்டியார் திருக்கயிலாயத்தில் சிவ பெருமானைக் கண்டபோது, அப்பிராட்டியார் திருமார்பிலிருந்த மூன்றாவது நகில் மறைந்த செய்தியைக் கூறும்போது, அந்நகில் காதலரோடு உள்ளப் புணர்ச்சி செய்யும் கருத்தால் உள்ளே ஒடுங்கியதென்று கூறுகிறார்.

**''முலை மூன்றிலொன்று**
**கைவந்த கொழுநரொடும் உள்ளப் புணர்ச்சிக்**
**கருத்தான் அகத்து ஒடுங்க''**[36]

என்கிறார்.

மடலூர்வோர் செஞ்சடை விரித்தும், வெண்பொடி பூசியும் எருக்கங்கண்ணி சூடியும் வருதலை இவர், சிவபெருமானின் இயற்கைக் கோலத்தோடு இயைத்துக் காட்டுவர்.[37] அகப்பொருளிலக்கணம் கூறும் சேரிப்பரத்தை, காமக்கிழத்திகளை முறையே ஆணவம், சுத்தவித்தைகளாக உருவகித்துக் கூறுவர்.[38]

தலைவன் குறிப்பறிதல் துறையில் பாடும் மூன்று பாடல்கள், தலைவியின் நலம் பாராட்டியும், பாங்கனுக்குத் தலைவியினது இயலிடம் கூறியும், தலைவியை முன்னிலையாக்கித் தன்நிலை கூறுதலும், மடலேறுவான் என்றலும், பொருள் முற்றி மீளும் தலைவன் இடைச்சுரத்தில் தலைவியின் உருவெளிப்பாடு கண்டு கூறுதலும், மேகத்தோடு கூறுதலும், பாங்கனோடு உரைத்தலும், பள்ளியிடத் தழுங்கலும் ஆகிய தலைவன் கூற்றுப் பாடல்களைக் குமரகுருபரர் பாடியுள்ளார்.

தலைவனது வரவை எதிர்நோக்கித் தலைவி கடற்சுழியிழைத்துப் பார்த்தல், மடலேறுவதாகக் கூறல், பரத்தையிற் பிரிந்த தலைவனிடமிருந்து வந்த பாணனை நோக்கிக் கூறல் ஆகிய தலைவி கூற்றுப் பாடல்களையும் குமரகுருபரர் பாடியுள்ளார்.

தலைவன் நகுதல், தலைவனே மணம் செய வேண்டல், மடலேறப் புகின் அவள் அவயம் எழுத அரிதெனல், தலைவி கையுறை ஏற்றதை அறிவுறுத்தல் ஆகிய தோழி கூற்றுப் பாடல்களும் உள்ளன.

தலைவியின் விரகதாபப் பாடல்கள் குமரகுருபரர் பிரபந்தங்களில் மிகுதி. அவள் பிறை கண்டு அஞ்சல், மன்மதனுக்குஅஞ்சல்,குயில் முதலியவற்றிற்கு அஞ்சல் பருவம் கண்டு அஞ்சல், ஊனின்றியும் துயிலின்றியும் வாடி அழுதல், பசலை மிகுதல், தூதுவிடுத்தல் முதலிய அகப் பொருட் பாடல்களைக் குமரகுருபரர் பாடியுள்ளார்.

## புறத்திணை

போர் செய்யப் புகுவார், பகை வேந்தனது ஆநிரையைக் கோடல் தமிழ் மரபு. நிரைகோடற் புகுமுன் நற்சொல்லாகிய நிமித்தம் பார்த்தலும், ஒற்றரைக் கொண்டு பகைவர் நிலை, நிரையின் நிலை முதலியவற்றை ஆய்தலும் வழக்கம். இவற்றைக் கூறும் செய்யுட்களை வெட்சித்திணையில் முறையே விரிச்சி, வேய் என்னும் துறையிலடக்குவர் புறப்பொருள் வெண்பாமாலை யுடையார். இத்துறைச் செய்திகளை,

**"வேய்ச்சொற் றொக்க வாய்ச்சொற் போல**
**விரிச்சியிற் கொண்ட விரைத்திற நோக்கி**
**வினைமேற் செல்லுநர் பலரே யனையர்க்(கு)**
**கவ்வினை முடிவதுஉங் காண்டும்"**[39]

என்று குமரகுருபரர் கூறியுள்ளார்.

மறவர் மகளைக் கொள்ள எண்ணி ஓரரசன் தூதுவிட அத்தூதனை இகழ்ந்து மறுக்கும் செய்தியைக் கூறுவதும், கலம்பக உறுப்பினுள் ஒன்றாக மறமென்று வழங்கப் பெறுவதுமாகிய இரண்டு செய்யுட்கள் இவர் பாடியுள்ளார். அவை மகட்பாற் காஞ்சியின்பாற்படும்.[40]

போர்க் களத்தில் கவந்தமாடுதலும், கழுகு பந்தரிடுதலும், பேய்கள் தசையுணவு கொண்டு களித்தலும் இவர் பாடியுள்ளார். புறமுதுகிட்டோரைக் கொல்லாது விடுத்தல் தழிஞ்சியெனும் துறை ஆகும். போர்க்களத்துப் பின்னிட்டோரை முருகக் கடவுள் கொள்ளாமல் விடுவதைக் குமரகுருபரர் பாடியுள்ளார்.

**"வென்றோர் வாகை முடிப்பதை**
**........." பானுப்**
**பகைவன் முதலாய பாலருடன் சிங்க**
**முகனைவென்று வாகை முடித்தோய்."**[41]

எனப் பாடியுள்ளார்.

அகத்திணை, புறத்திணை இலக்கணங்களை அறிந்தவரான குமரகுருபரர், தம் பிரபந்தங்களில் எடுத்துக் கொண்ட முதற்பொருளாம் இறைப் பொருள் சிறக்க, துணைப் பொருளாய் அவற்றை எடுத்தாண்டிருக்கிறார்.

## வடிவம் பற்றிய கொள்கை

தமிழில் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா வஞ்சிப்பா என நால்வகைப் பாக்களும், தாழிசை, துறை, விருத்தம் எனப் பாவினங்களும், அவற்றில் சிற்சில வகைகளும், கவிதையின் வடிவங்களாம்.

"முழுமை உடையதாகவும் ஒருமுகமான இயைபு உடையதாகவும் விளங்குவதே நல்ல வடிவமாகும். கூறத்தக்கன எல்லாம் கூறி முடிந்தன, குறை இல்லை என்ற நிறைவு அளிப்பது முழுமை எனப்படும். கூறிய பகுதிகள் எல்லாம் தொடர்புற்றுச் சிதைவுறாமல் ஒன்றோடொன்று இயைந்து நிற்பதே இயைபு எனப்படும்"[13] என்ற வடிவத்தை விரித்துரைப்பர் டாக்டர் மு. வ.

பாவும், பாவினமுமாகிய யாப்புகளைப் பொருட் சிறப்பமையப் பாடுவதில் குமரகுருபரர் வல்லவர்.

கலிவெண்பா வடிவில் அமைந்தது கந்தர் கலி வெண்பா. சந்தவிருத்தங்கள் அமையப் பாடப்பட்டவை இவருடைய மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் நூல்கள். ஒருபோகு வெண்பா, கலித்துறை, வெண்டுறை, வஞ்சித்துறை, இன்னிசை வெண்பா, ஆசிரியப்பா பலவகை விருத்தங் களால் கலந்து செய்யப்படுவதுவே கலம்பகம். அவ்வகையில் அமைந்ததுவே குமரகுருபரரின் மதுரை, காசிக் கலம்பகங்கள். நான்மணிமாலை என்பது வெவ்வாறு வகையாக நான்கு மணிகளைத் தொடுத் தமைந்த மாலைபோல வெண்பா, கட்டளைக் கலித் துறை, ஆசிரிய விருத்தம், ஆசிரியப்பா என்பவை

முறையே அந்தாதியாக அமைய நாற்பது செய்யுட்கள் பாடுவது, இவ்வகையில் அமைந்து குமரகுருபரரின் திருவாரூர் நான்மணிமாலை, மும்மணிக்கோவை மூன்று வேறு மணிகளாலாய மாலையைப் போல ஆசிரியப்பா, வெண்பா, கலித்துறை யென்பன அந்தாதியாக அமைய முப்பது செய்யுட்கள் பாடுவது சிதம்பர மும்மணிக்கோவை. பண்டார மும்மணிக் கோவை இரண்டும், கோவை வகையில் அமைந்த குமரகுருபரர் நூல்கள். இவருடைய சிதம்பரச் செய்யுட்கோவை யாப்பிலக்கணத்திற்குரிய இலக்கிய மாகவே செய்யப்பட்டுள்ளது.

இவர் பாடிய செய்யுட்களுள் வெண்பா 189, வெண்டாழிசை 5, வெண்டுறை 5, வெளிவிருத்தம் 2, ஆசிரியப்பா 41, ஆசிரியத் தாழிசை 2, ஆசிரியத்துறை 4, ஆசிரிய விருத்தம் 298, கலிப்பா 38, கலித் தாழிசை 7, கலித்துறை 96, கலி விருத்தம் 6, வஞ்சிப்பா 2, வஞ்சித் தாழிசை 1, வஞ்சித்துறை 3, வஞ்சி விருத்தம் 4, மருட்பா 6.

எல்லா வகை யாப்பு வடிவங்களிலும் பாட வல்லவர் குமரகுருபரர் என்பதை மேற்காட்டிய எண்ணிக்கை விவரம் தெளிவுறுத்தும்.

பலவகைத் தொடைகள் அமைய வடிவமைத்துப் பாடுவதில் குமரகுருபரர் வல்லவர்.

வழியெதுகை அமைத்து இவர் செய்த செய்யுட் தொடர்களில் சில.

**"பிள்ளையின் வள்ளன்மை கொள்ளுமொரு**
**பாண்டிப்பிராட்டி"** 13

**"இரைத்துத் திரைத்து நுரைத்து"**[44]

**"மூதண்ட வேதண்ட கோதண்ட மோம"**[45]

**"வாளிகள் கூளிகள் காளிகள் நாளியி லாளியென"**[46]

**"கொடிமுல்லை விடுகொல்லைக் கடிமுல்லை
வெள்ளைப் பள்ளை"**[47]

**"கரும்பும் சுரும்பும் அரும்பும் பொரும்படைக்
காமர்வேள்"**[48]

முதலாக எண்ணிறந்த எடுத்துக் காட்டுகளைக் காட்டலாம்.

முரண்தொடை அமைத்துப் பாடுவதிலும், இவ்வாசிரியர் வல்லவராய்த் திகழ்கிறார்.

**"வெண்புயலும் கரும்புயலும்"**[49]

**"செங்கயல் கிடக்கும் கருங்கட் பசுந்தோகை"**[50]

**"சிறுமதிடும் பெருமதியின் உகப்படரும் காலம்"**[51]

**"சிற்றம் பலம்கண்டு பேரம் பலத்தைச் செய்யாதவரே"**[52]

**"கருமிடற்றன் செஞ்சடையன் வெண்ணீற்றன்"**[53]

ஆகிய பல தொடர்களில், முரண் தொடையைச் சிறப்பாக அமைத்துப் பாடியிருக்கிறார்.

மோனை, எதுகை, முரண் தொடைகளை முயன்று அமைத்தால், அவ்விலக்கியக் கலை சிறப்புறாது. அத்தொடைகள் ஆசிரியரின் முயற்சியின்றியே அவ்விடங்களில் அமையவேண்டும். "முயற்சி இன்றித் தக்க அளவில் அமையும் எதுகையும் மோனையும் வீணானவை அல்ல; அவை அடிகளை நினைவூட்ட உதவுவதோடு, ஒருவகைக் கவர்ச்சியும் தந்து,

செவிக்கும் மனத்திற்கும் இனிமை பயந்து, ஆசிரியரின் உணர்ச்சிக்கு ஏற்பக் கற்பவரின் உள்ளத்திலும் உணர்ச்சி அலைகளை எழுப்புகின்றன; ஆனால் வலிந்து முயன்று அமைத்த எதுகையும் மோனையும் விழிப்புடன் படிப்பவர்க்கு அதற்கு மாறாக வெறுப்பை உண்டாக்கிவிடும்'' என்கிறார் டக்கர் எனும் அறிஞர்.[54] குமரகுருபரர், தம் பிரபந்தங்களில் இத்தொடை வகைகளை முயன்று முயன்று அமைத்தாரில்லை. புண்ணியத்தால் உடன் பிறந்த புலமையால், எண்ணாமல் எங்கிருந்தோ கொட்டியோ, தம் பிரபந்தங்களுக்கு நல்ல வடிவங்களை அமைத்திருக்கிறார் அவர்.

## உத்தி பற்றிய கொள்கைகள்

கவிஞன், தன் பொருள் விளக்கத்திற்காகக் கையாளும் முறைகள் கவிதை உத்திகள் அல்லது இலக்கியம் என்று அழைக்கப்படும். இவை குமரகுருபரர் பிரபந்தங்களில் அமைந்துள்ள தன்மையைக் காண்போம்.

## கற்பனை

கற்பனைச் சிறகு கொண்டு, கவிஞன் பறப்பதால் சிறந்த கவிதை பிறக்கிறது. கற்பனைக் கண் கொண்டு கவிஞன், கடந்ததை, நிகழ்வதை, இனி நிகழப் போவதைக் கண்டு, கவிதையாக்குகிறான். உள்ளதை உள்ளவாறும், உள்ளம் விழைந்தவாறும் ஒரு பொருளைப் பற்றிப் பாடக் கவிஞனுக்குத் துணை செய்வது கற்பனையே ஆகும்.

இலக்கியத் திறனாய்வாளர்கள் கற்பனையைப் பல வகைகளாய்ப் பாகுபடுத்துவர். படைப்புக் கற்பனை, இயைபு கற்பனை, கருத்து விளக்கக் கற்பனை, ஆக்கக் கற்பனை, நினைவுக் கற்பனை எனப் பல வகையாகப் பாகுபடுத்தினாலும், உண்மைக் கற்பனை, வெறுங் கற்பனை எனும் இவ்விரு பாகுபாடு களை எல்லோரும் ஒப்புவர்.

குமரகுருபரர் வெறுங்கற்பனை அமைந்த பாடல் களையே பெரிதும் யாத்துள்ளார். ஒரு நகரத்தின் செல்வ வாழ்வைக் கற்பனை செய்கிறார் குமரகுருபரர். மேகங்கள் நிறைந்து வானத்தே படலம் இட்டாற் போல் உள்ளன. நகரத்தின் மாடிகளில் கட்டிய கொடிகள் அந்த முகில் படலத்தைக் கிழிப்பவை போல் உயர்ந்துள்ளன. அந்தக் கொடிகள் மிகப் பலவாய் நெருங்கியிருத்தலால், வானளாவி உயர்ந்த சோலை போல் தோன்றுகின்றன. மாடத்தின் தோரணம் அமைந்த முகப்பு மிக உயரமாக உள்ளபடியால், வானத்தே திரியும் சந்திரன் அவ்வழியாகச் செல்லும் போது தவழ்ந்து ஏறும்படியாக உள்ளது. சந்திரன் அவ்வாறு தவழ்ந்து செல்லும் காட்சியைக் காண் கின்றனர் மாடியில் உள்ள மகளிர். அவர்கள் அப்போது மது உண்டு மயங்கிய நிலையில் இருப்பதால் சந்திரனைத் தேன்கூடு என்று எண்ணி விடுகின்றனர். உடனே தம் காதலரை அழைத்து, "இந்தக் கூட்டின் தேன் வேண்டும். இதைக் கொணர்ந்து தாருங்கள்" என்று வேண்டுகிறார்கள். காதலராகிய ஆடவர் உடனே வந்து சந்திரனைப் பற்றிப் பிழிந்து ஊற்றத் தொடங்குகிறார்கள். அப்போது சந்திரன் நொந்து, "அய்யோ, இது தண்டனையாக முடிந்ததே? நான் உங்கள் காதலியரின்

ஒளிமிக்க முகத்துக்கு ஒப்பானவன் என்று இனிச் சொல்ல மாட்டேன். என்னை உயிரோடு விடுங்கள்'' என்று மன்னிப்புக் கோருகிறான். உடனே அவர்கள் சந்திரனை விட்டு விடுகிறார்கள். இப்படிப்பட்ட வெறுங்கற்பனையை அமைத்துப் பாடியிருக்கிறார் குமரகுருபரர், முத்துக் குமாரசாமி பிள்ளைத் தமிழில்.[55]

இதுபோன்ற கற்பனைகள் பலவற்றை இவருடைய பிற பிரபந்தங்களிலும் காணலாம்.

மீனாட்சியம்மை ஊசலாடும்போது அண்ட பகிரண்டமும் அசைந்ததாகக் கற்பனை செய்திருக் கிறார் கவிஞர். பாடல் பாடி அம்பிகை ஊசலாடுங்கால் அப்பாட்டைக் கேட்டும் ஊசலாட்டைக் கண்டும் சிவபெருமான் திருமுடியசைக்க, அத்திருமுடியிலுள்ள ஆதிசேடனும் அசைந்தான்; அதனால் பூமியசைந்தது; சராசரங்கள் யாவும் அசைந்தன என்கிறார் குமரகுருபரர்.[56]

சிவபெருமான் திருமுடியில் அணிந்த பிறையோடு, உமாதேவியார் திருமுடியிற்சூடிய முத்தாலாகிய பிறை யென்னும் அணியும் சேர்ந்திருக்கும் தோற்றம், பூர்ணச் சந்திரனை ஒத்திருந்தது. அதை முழுமதி யென்றே கருதிச் செம்பாம்பாகிய கேது வந்து படம் விரித்து ஆடியது. முருகன், அக் கேதுப் பாம்பைத் தான் சூடும் காந்தளென்று மயங்கி அதைப் பறிக்கச் சென்றான்; உடனே கேதுப்பாம்பு வெருண்டோடியது. முருகன் ஏமாற்றமடைந்தான்; சிவபெருமான் முடியில் உள்ள பிரமன் தலை, இயல்பாகவே நகும் இயல்பில் இருக்கும்; ஆனால் ஏமாற்றமடைந்து நிற்கும் முருகன் செயலை எண்ணியே அத்தலை நகுவதாக எண்ணிய முருகன், ''என்னைப் பார்த்தா சிரிக்கின்றாய்? முன்பு

குட்டுப்பட்டதை மறந்து விட்டாயோ?'' என்று கோபத்தோடு கூறி முருகர் இதழ் அதுக்கினர் என்று கற்பனை செய்திருக்கிறார், குமரகுருபரர்.[57]

சிவபெருமானின் திருவடி காண, ஏனமாய் உருவெடுத்துப் பூமியைக் குடைந்து சென்றும், காணாமல் அயர்ந்தவர் திருமால். ஆனால் சிவபெருமானோ தில்லையில் திருவடி தூக்கி ஆடிக் கொண்டிருக்கிறார். திருவடி காணாது மயங்கிய திருமால், அவர் கால்தூக்கி ஆடுவதைக் கண்டு விட்டால், சிவபெருமானின் திருவடியைத் தாம் கண்டு விட்டதாக பெருமை கொள்வார் அல்லவா? அவ்வாறு இருக்க, அவர் ஆடலாமா? என்று வினவுவாருக்கு, ''நடராசப் பெருமான் தூக்கியது இடத் திருவடியே. அவ்வடி திருமாலின் தங்கையாகிய உமைக்கு உரியது; ஆதலின் திருமால் கண்டாலும் குறைவின்று என்று தூக்கினர் போலும்'' என்று கற்பனை செய்கிறார் குமரகுருபரர்.[58] இன்னும் அவர் தென்திசை நோக்கித் திருவடி தூக்கியிருப்பது, தென்திசைக்குரிய எமனை ''வாரற்க வந்தால் மீண்டும் உதைபடுவாய்'' என்று அறிவுறுத்தலே என்றும் கற்பனை செய்திருக்கிறார் குமரகுருபரர்.[59] இதுபோன்ற கற்பனை உத்திகள், கணக்கில் அடங்காதவை; இவர் யாத்த பிரபந்தங் களில் உள.

## உவமை உருவகம்

''உண்மையைக் கூறுமிடத்து ஒரு புலவனுடைய சிறப்பை அறிவதற்கு அவன் கையாளும் உவமை ஒன்றே போதுமானது எனலாம். அன்றாடம் நூற்றுக் கணக்கான பொருள்களை நாம் காண்கிறோம்.

ஆனால் இப்பொருள்களினிடையே காணப்பெறும் ஒப்புமை நம் அறிவில் படுவதில்லை; பட்டாலும் அவற்றின் உண்மை விளங்குவதில்லை. இன்னும் பல சமயங்களில் புறத்தே காணப்படும் ஒப்புமை மனத்திற் படுகிறதே தவிர, ஆழ்ந்துள்ள ஒப்புமை நம் கவனத்தை ஈர்ப்பதில்லை. தொடர்பற்ற பொருள் களிடையே கூடச் சிறந்த கவிஞன் ஒப்புமையைக் காண்கிறான்; நம்மையும் காணுமாறு செய்கிறான் நாம் கண்டும் காணாத பொருள்களை விளக்க உதவுவதுடன், அடிக்கடி காணும் பொருள்களின் தனிச் சிறப்பை விளங்கிக் கொள்ளவும் உவமையைப் புலவன் கையாள்கிறான். ஆகவே தான் அவனுடைய புலமைச் சிறப்பு இதன் மூலம் வெளிப்படுகிறது என்று சொல்கிறோம்.''[60]

உவமை உருவக அணிகள் குமரகுருபரர் செய்யுட் களில் நன்கு அமைந்து, இவரது புலமைத் திறத்தை விளக்குகின்றன. இயற்கைப் பொருள்களுக்கேற்ற உவமைகளைக் கூறுகின்றார். வெண்கடப்ப மலருக்குத் துகிலும்,[61] கோங்க மலருக்குப் பொற் கிழியும்,[62] பாம்புக்குக் காந்தளும்,[63] தாமரையிலைக்கு மரகதத் தகடும்,[64] அதன் மலருக்கு மாணிக்கமும்,[65] கொன்றைக்குப் பொன்னும் உவமையாக எடுத்துரைத் துள்ளார்.[66] ''பிறரை வஞ்சித்து எளியாரது உடைமை கொள்வாருடைய செல்வம், மகளிர் நகில் போலப் பெருத்தாலும், அவர்கள் இடைபோல் தேய்ந்துவிடும்,' என்று உவமித்துள்ளார்.[67] தலையாயார், இடையா யார், கடையாயார் ஆகிய முத்திறத்தினருடைய செல்வங்களுக்குப் பொதுமகள், குலமகள், கைம்பெண் என்பார் நலத்தை உவமித்துள்ளார்.[68] சிவபெருமானது திருமுடிக்கு ஏனற்புனத்தை ஒரு செய்யுளில் உவமித்

துள்ளார். "கமலேசரது வேணியிலுள்ள தலை, புனத்தில் பறவைகளைப் பயமுறுத்த வைத்த தலை; கங்கை அப்புனத்தில் தினைக் காவல் புரியும் குறமகள், பிறை அவள் கைக்கொண்ட கவண்" என்பார்.[69] நீதிநெறி விளக்கத்தில் பல நீதிகளை உவமையினால் விளக்குகிறார்.

ஒன்றை, மற்றொன்றோடு ஒப்பிட்டுக் கூறுவது உவமை; அவ்வாறில்லாமல் ஒன்றை மற்றொன்றாகவே கூறுவது உருவமாகும். "தாமரை முகம்', என்பது தாமரை போன்ற முகம் என்று விரிவுபட்டு, தாமரையை முகத்தோடு வேறுபடுத்திக் காட்டும். "முகத்தாமரை' 'என்பது ஒரு சொல்லாக வழங்கி, முகத்தையும் தாமரையையும் ஒன்றெனவே காட்டும். இத்தகு உருவக உத்தி அமைத்துப் பாடுவதில் வல்லவர். குமரகுருபரர்.

இவர் இளமையை நீர்க் குமிழியாகவும், செல்வத்தை அலைகளாகவும் யாக்கையை நீரில் எழுத்தாகவும் உருவகிக்கிறார்.[70] கல்வி, கவித்துவம், சொல்வளம் என்பவற்றை முறையே ஒருவனுக்கு மனைவியாகவும், புதல்வனாகவும், செல்வமாகவும் உருவகம் செய்கிறார்.[71] வண்மையுடையாரைக் கற்பகத் தருவாக உருவகம் செய்து, அவருடைய கண்ணோக்கை அரும்பாகவும், நகைமுகத்தை மலராகவும், இன்மொழியைக் காயாகவும், வண்மையைப் பழமாகவும், அமைத்து அதனை முற்று வேகம் ஆக்குகின்றார்.[72] "யமனென்னும் பெயருடைய கொடுந் தொழிலுடைய வலைஞன், யாக்கையாகிய உவர்நீர்க் கேணியில் அறிவாகிய தலையையுடைய உயிராகிய மீனைத் துன்புறுத்திப் பிடிக்கும் இயல்

பினன்; அதற்காக வாத பித்த சிலேட்டுமம் என்னும் மூன்று தலையையுடைய தூண்டிலை வைத்து, அதன்கண் உள்ள வாழ்நாளாகிய மிதப்பிலே கண் வைத்துப் பல்லைக் கடித்துக் கொண்டிருக்கிறான்''[73] என்று எமனை வலைஞனாக உருவகம் செய்து இவர் பாடியுள்ளார்.

## நயம்பட உரைத்தல்

''பிரமன் தலைகளை மாலையாகக் கட்டி, சிவ பெருமான் தலையில் அணிந்திருக்கிறார். திருமாலின் தலைகளை அவ்வாறே பாதத்தில் கிண்கிணியாகக் கட்டி இருக்கிறார். அச்செயலை ஒழிக எனக் கூறும் குமரகுருபரர், அதற்குக் காரணமாக, ''அவ்விருவரும் தேவரீருடைய முடியையும் அடியையும் கண்டு விட்டதாகப் பொய் கூறப்புகின், அதற்கு அத்தலை களே சான்றாகும். ஆகவே அவ்வாறு அணிதலை ஒழிக'' என்று நயம்படக் கூறுகிறார்.[74] 'சிவபெரு மானால் உதைபெற்ற நமன் பெரிய தவமுடையவன்' என்று கூறும் இவர் அதற்குக் கூறும் விளக்கம் ''இறைவனுடைய அடி முடியைத் தேடிக் காணாமல் நிற்கும் தேவர்களை இருப்ப, தொண்டரோடு பகைத் தேனும் இறைவன் திருப்பாதம் கண்டு புகழடைதலின் நமன் தவம் பெரிது'' என்கிறார்.[75]

திரிபுரங்களைச் சிவபெருமான் நகைத்தெரித்த செய்தியை இவர் நகைச்சுவைபடப் புலப்படுத்துகிறார். சிவபெருமான் பரசும், பினாகமும், சூலமும், திருக் கரத்திலே சுமந்து கொண்டிருந்தாலும், மன்மத சங்காரத்தை நெற்றிக் கண்ணாலே செய்தார்; திரிபுர தகனம் செய்தது அவருடைய நகை; பிரமன்

தலையைக் கொய்ததோ அவருடைய கைந்நகம்! யமனை உதைத்தது அவருடைய திருவடி. இப்படி அவர் செய்த பராக்கிரமங்களில் ஒன்றுக்காகவாவது அவருடைய ஆயுதங்கள் உபயோகப்படாமல் இருக்கவும், அவற்றைத் தம் இருக்கி சிவக்கும்படி ஏன் தான் சுமந்துகொண்டிருக்கிறாரோ இவர்! என்று, நகைச்சுவையாக — நயம்பட உரைத்திருக் கிறார், குமரகுருபரர்.[79]

## குறிப்பு வகை

தமிழ்ப் புலவர்கள், தாம் கருதிய பொருளை வெளிப்படையாக உணர்த்த உவமை, உருவகம் முதலிய உத்தி வகைகளை மேற்கொள்கின்றனர். அவ்வாறில்லாமல் குறிப்பு வகையால், நன்மையாகப் நுண்மையாகப் பொருளை உணர்த்துவது தொன்று தொட்ட தமிழ் மரபாகும்.

கௌமாரி, கடல்சுவற வேல்விட்டவள் என்பதை,

**'கடல்வயி றெரிய வொள் வேலினைப் பார்த்தவள்''**[77],

என்று குறிப்பாக உணரும்படிக் கூறுகிறார்.

உடலை விடுதல் என்பதனை,

**''சுமை போடுதல்''**[78]

என்றும்,

வீணாக உழைப்பதை,

**''பாழக் கிறைப்பு''**[79]

என்றும்,

மிக்க சிறப்புடைய தென்பதை,

**"பொன்மலர் நாற்றமுடைத்து"**[80]

என்றும்,

தோன்றுதலினும் தோன்றாமை நன்றென்பதை,

**"பூத்தலிற் பூவாமை நன்று"**[81]

என்றும்,

மகளிருடைய கணவர்களைக் காப்பவன் இறைவன் என்பதை,

**"நுந் தாலிக்கு வேலி"**[82]

என்றும்,

"சிவபெருமான் ஆலகால விடம் உண்ணாவிடின் தேவர் இறந்துபட அவர் மனைவியர் மார்பிலடித்துக் கொண்டு புலம்புவர் என்பதை,

**"நாயகன் கண்டங் கறாதேலங் காட்டமரர்**
**சேயிழை மாதருக்குச் செங்கைகளும் கொங்கைகளும்**
**சிவக்கும் போலும்"**[83]

என்றும் குறிப்பு வகையால் பாடி, விளக்கி இருக்கிறார் குமரகுருபரர்.

## பிற அணிகள்

வேற்றுமை அணி, சிலேடையணி, புணர்நிலை யணி, திரிபதிசயம், சொற்பின் வருநிலை, சொற் பொருட் பின்வருநிலை, வேற்றுப் பொருள் வைப்பு, ஒப்புமைக் கூட்டம், ஒட்டு, பரிவருத்தனை, உறுப்புக்

குறைவிசேட அணி முதலிய அணிகள் அமைய இவர் பாடியுள்ள பாடல்களும், இவர் பிரபந்தங்களில் இடம் பெற்றுள்ளன.

**உயர் கவிதை**

"அழகோடு கூடியதே கவிதை. கலையென்பதும் அதுவே அமைக்கும் சொல்லில் ஓர் அழகு, எடுத்தாளும் பொருளில் ஓர் அழகு, கூறும் உவமையில் ஓர் அழகு, மொழியும் நயத்தில் ஓர் அழகு, பொங்கும் உணர்ச்சியில் ஓர் அழகு, ஊக்குவிக்கும் எழுச்சியில் ஓர் அழகு, சிந்திக்கும் தத்துவத்தில் ஓர் அழகு, வழங்கும் தாய் மொழியில் ஓர் அழகு, ஓசைப்பண்பில் ஓர் அழகு, எளிமையில் ஓர் அழகு, இனிமையில் ஓர் அழகு எதுகையில் ஓர் அழகு, மோனையில் ஓர் அழகு, ஒன்பது வகைப்பட்ட சுவைகளின் இப்படி எல்லா வற்றிலும் அழகு மயமாகப் பொலிவதே கவிதை. அழகு எங்கெங்கெல்லாம் குடி கொண்டிருக்கிறதோ அங்கெங்கெல்லாம் கவிதைப்பெண்ணாள் உயிரோவிய மாகக் கொலுவிருப்பாள்,[84] என்று திறனாய்வாளர் கருதுவர். குமரகுருபரர் படைப்புகளும் 'அழகு இமை யும் உயிரோவியமாக' அமைந்துள்ள பாங்கைப் படிப்பார் நன்கு உணர்வர்.

## அடிக்குறிப்புகள்

1. தொ.மு. சிதம்பர ரகுநாதன், எழுதுவது எப்படி? பக். 462—463
2. டாக்டர். மு.வ., எழுதுவது எப்படி? பக். 1
3. தேவர் பிரான் கவிராயரின் சிறப்புப் பாயிரம்; ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு; பக். 13

4. டாக்டர் உ.வே. சா.வின் முகவுரை; ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு; பக். 6
5. கந்தர் கலிவெண்பா; 118
6. திருவாரூர் நான்மணி மாலை; 1
7. சகல கலாவல்லி மாலை; 10
8. சகல கலாவல்லி மாலை; 7
9. சகல கலாவல்லி மாலை; 4
10. கந்தர் கலிவெண்பா; 119
11. நீதிநெறி விளக்கம்; 6
12. முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ், காப்புப் பருவம்; 4
13. ,, தாலப் பருவம்; 6
14. ,, வருகைப் பருவம்; 9
15. ,, அம்புலிப் பருவம்; 6
16. ,, செங்கீரைப் பருவம்; 5
17. ,, சப்பாணிப் பருவம்; 10
18. ,, தாலப் பருவம்; 6
19. ,, காப்புப் பருவம்; 3
20. ,, அம்புலிப் பருவம்; 6
21. திருவாரூர் நான்மணி மாலை; 19
22. முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ்; வருகைப் பருவம்; 1
23. ,, வருகைப் பருவம், 10
24. ,, செங்கீரைப் பருவம்; 7
25. ,, முத்தப் பருவம்; 10
26. கந்தர் கலிவெண்பா; 104
27. பண்டார மும்மணிக்கோவை; 2
28. ,, 5
29. டாக்டர். உ.வே.சா.வின் ஆராய்ச்சியுரை; குமரகுரு சுவாமிகள் பிரபந்தத் திரட்டு; பக். 1
30. முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ்; சப்பாணிப் பருவம்; 5

31. முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ்;
சிறுதேர்ப் பருவம்; 6
32. பண்டார மும்மணிக் கோவை; 5
33. காசிக் கலம்பகம்; 58
34. சிதம்பர மும்மணிக் கோவை; 5
35. பண்டார மும்மணிக் கோவை; 8
36. மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்;
சப்பாணிப் பருவம்; 2
37. திருவாரூர் நான்மணி மாலை; 25
38. சிதம்பர மும்மணிக் கோவை; 29
39. ,, 23
40. 1. மதுரைக் கலம்பகம்; 77; 2. காசிக் கலம்பகம்; 46
41. கந்தர் கலிவெண்பா; 8—9
42. டாக்டர். மு.வ.; இலக்கியத் திறன்; பக்.
43. மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்;
காப்புப் பருவம்; 8
44. ,, தாலப் பருவம்; 4
45. ,, சப்பாணிப் பருவம்; 1
46. ,, சப்பாணிப் பருவம்; 8
47. மதுரைக் கலம்பகம்; 5
48. சிதம்பரச் செய்யுட் கோவை; 74
49. மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்;
காப்புப் பருவம்; 6
50. ,, செங்கீரைப் பருவம்; 4
51. மதுரைக் கலம்பகம்; 56
52. சிதம்பர மும்மணிக் கோவை; 10
53. சிதம்பரச் செய்யுட் கோவை; 28
54. **T. G. Tucker; The Judgement and Appreciation of Literature; P. 59**
55. முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ்; 48
56. மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்; ஊசற் பருவம்; 5
57. முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ்;
வருகைப் பருவம்; 4

58. சிதம்பர மும்மணிக் கோவை; 16
59. ,, 30
60. க.அ.ச. ஞானசம்பந்தன்; இன்னும் இனியும், பக்.
61. மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்;
அம்புலிப் பருவம்; 10
62. ,, ,, 10
63. காசிக் கலம்பகம்; 38
64. பண்டார மும்மணிக் கோவை; 2
65. ,, 2
66. காசிக் கலம்பகம்; 38
67. நீதிநெறி விளக்கம்; 62
68. ,, 65
69. திருவாரூர் நான்மணி மாலை; 27
70. சிதம்பரச் செய்யுட் கோவை; 9
71. நீதிநெறி விளக்கம்; 3
72. ,, 36
73. திருவாரூர் நான்மணி மாலை; 13
74. ,, 16
75. ,, 33
76. சிதம்பர மும்மணிக் கோவை; 21
77. மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்; காப்புப் பருவம்; 10
78. நீதிநெறி விளக்கம்; 48
79. ,, 89
80. ,, 4
81. ,, 5
82. முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ்;
சிறுதேர்ப் பருவம்; 1
83. சிதம்பரச் செய்யுட் கோவை; 49
84. என்.எஸ். சிதம்பரம்; எழுதுவது எப்படி?; பக். 58



சி. பா.

தேசிங்கு ஆண்ட செஞ்சியில் பிறந்தவர் (3-5-1935) இந்தச் செந்தமிழ்ச் செல்வர். கண்டாச்சிபுரமும் திருவண்ணாமலையும் இந்த இலக்கியப் பொழில் கற்ற இடங்கள். பைந்தமிழ் வளர்க்கும் பச்சையப்பன் கல்லூரிப்பாசறை மறவருள் ஒருவர். அன்னைத் தமிழில் பி.ஏ.ஆனர்சு. அங்கு! முதல் வகுப்பில் தேறிய முதல்வர், 'குறுந்தொகை' பற்றிய ஆய்வுரைக்கு 1963ல் எம்.லிட்., பட்டமும், 'சேர நாட்டு செந்தமிழ் இலக்கியங்கள்' பற்றிய ஆய்வுரைக்கு 1970-ல் டாக்டர் (பிஎச்.டி.) பட்டமும் சென்னைப் பல்கலைக் கழகத்தில் இவர் பெற்ற சிறப்புகள், நல்ல நடை கொண்ட இந்த நாகரீகர் பேர்சொல்ல நாளும் மாணவர் படைஉண்டு நாட்டில்! சென்னைப் பல்கலைக் கழகத்தில் விரிவுரையாளராகச் சேர்ந்தவர் பேராசிரியராகத் துறைத் தலைவராகச் சிறந்திருக்கிறார். முன்னால் தமிழக ஆளுநருக்குத் தமிழை முறையாகப் பயிற்றுவித்த ஆசிரியர், இந்த முற்றிய புலமையாளர், தற்போது தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தருமாவார்.

முப்பது நூல்கள் படைத்துள்ள இவர் ஒப்பருந் திறனுக்கும் உயர் தமிழ் அறிவுக்கும், 'தமிழ் இலக்கிய வரலாறு ஒன்றே சான்று! அண்மையில் வந்துள்ள அணிகலன். சங்க இலக்கியம் சில பார்வைகள் ஆங்கிலத்தில் ஒரு நூல். 'சங்ககால மகளிர் நிலை' பற்றிய ஆராய்ச்சி. 'இலக்கிய அணிகள்' என்ற நூல் தமிழக அரசின் இரண்டாயிரம் உரூபா முதல் பரிசை பெற்றது. படித்துப் பல பட்டம் பெற்ற இந்தப் பைந்தமிழ் வேந்தர்க்குப் பலரும் கொடுத்துள்ள புகழ் மகுடங்கள்: புலவரேறு (குன்றக்குடி ஆதீனம்) செஞ்சொற்புலவர் (தமிழ்நாட்டு நல்வழி நிலையம்) சங்கநூற் செல்வர் (தொண்டை மண்டல ஆதீனம்).

பெருந்தகை மு.வ.வின் செல்லப்பிள்ளை சி.பா. அவர் புகழ்பாடும் அருந்தமிழ்த்தும்பி; அயராது உழைக்கும் அருஞ்செயல் நம்பி! இலக்கியப் பேச்சில் இன்ப அருவி! எழுத்தில் நல்ல இலக்கியப் பிறவி!

சி.பா. இந்த ஈரெழுத்து ஒரு மொழி, இளைஞர்க்குச் சொல்வது சிறக்கப் பாடுபடு!

—மா.செ.